# இசுலாமியத் தமிழ் இலக்கியத் தோற்றுவாய்களும் வெளிப்பாட்டு முறைகளும்

முனைவர் மு. ஜீவா

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# இசுலாமியத் தமிழ் இலக்கியத் தோற்றுவாய்களும் வெளிப்பாட்டு முறைகளும்

முனைவர் மு. ஜீவா

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை
மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை - 600 113.

ஏ.வி.எம். ஜாபருதீன் நூர்ஜஹான் அறக்கட்டளைச் சொற்பொழிவு
(அறக்கட்டளை நிறுவியவர் : ஏ.வி.எம். ஜாபருதீன் நூர்ஜஹான் அறக்கட்டளை நிறுவனத்தார் )

வரிசை எண் : 5

---

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | Iculāmiyat Tamil ilakkiyat tōrruvāykaḷum veḷippāṭṭu muraikaḷum |
| Author | : | Dr. M. Jeeva<br>Lecturer, Department of Tamil<br>Bharatiyar University<br>Coimbatore-46 |
| General Editor | : | T. Mahalakshmi<br>Senior Research Fellow<br>International Institute of Tamil Studies<br>Tharamani, Chennai-600 113 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus,<br>Chennai-600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 611 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2008 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | viii + 192 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 60/- (Rupees Sixty Only) |
| Printed by | : | United Bind Graphics<br>189-D, Royapettah High Road<br>Mylapore, Chennai - 600 004. |
| Subject | : | Origin and Expressions of Islamic Tamil Literature |


---

பேரா. முனைவர் கரு. அழ. குணசேகரன்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

# அணிந்துரை

இலக்கிய வரலாற்றின் பக்கங்களைப் புரட்டிப் பார்க்கும்போது இசுலாமிய இலக்கியங்கள் குறித்த பதிவுகள் மிகவும் குறைவு. அதனாலேயே தமிழ் அன்பர்கள் பலரும் இசுலாமியர்களது இலக்கியங்கள் என்ன எனும் வினாவோடு புருவம் தூக்கிச் சிந்திக்கின்றனர். சிறுபான்மை மக்கள், அடித்தளமக்கள் போன்றோர்களது இலக்கியப் பங்களிப்புகள் இதோ இதோ என 20ஆம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியில் தொடங்கி 21ஆம் நூற்றாண்டுத் தொடக்கக் காலமான இன்று வரை தொடர்ந்து பதிவுகளுக்குள்ளாக்கப்பட்டுத் தமிழ் இலக்கிய வரலாற்றில் இடம்பெறக் கூடிய காலங்கள் என இன்று நிறைய ஆதாரங்கள் வெளிவந்து கொண்டிருக்கின்றன.

14ஆம் நூற்றாண்டு இசுலாமியர் தமிழகத்தை ஆட்சிபுரிந்த குறைந்த காலம் சமயக் காழ்ப்புணர்ச்சியின் காரணத்தால் நடுநிலைப் பார்வை இல்லாது போனது. ஒரு சில ஆண்டுகளில் இசுலாமியர் தந்த இலக்கியங்கள் குறித்த பதிவுகள் சரியாகக் கணக்கில் கொள்ளப்படவில்லை. மறைக்கப்பட்ட வரலாறு வெளிச்சத்துக்கு வரும் காலம் இது. இந்நூல் இசுலாமியர்களின் தமிழ் இலக்கியப் பங்களிப்புகளை நமக்குப் புலப்படுத்துகின்றது. இசுலாமிய இலக்கியங்கள் குறித்து அறிந்து கொள்ள ஆர்வமுள்ளோருக்கு இது பயன்தரத்தக்க ஒன்றாகும்.

> மக்களுக்கும் மன்னருக்குமிடையே நேரடித் தொடர்பினை ஏற்படுத்த எந்த ஒரு அரசகுலமோ அல்லது அரசரோ முயற்சி மேற்கொள்ளவில்லை. (ப.3)
>
> இசுலாமிய இலக்கியச் சூழல் தமிழகத்திலும் பரவிய சூழலைப் பற்றிய ஊடுருவல் பார்வையை வைப்பதற்காக மேற்கூறப்பட்டுள்ள பின்னணி விளக்கங்கள் தரப்பட்டுள்ளன. (ப.6)

என்று கூறும் நூலாசிரியரின் சமூக அசைவியக்கப் பார்வையை நிலம், உற்பத்தி, பொருளாதாரம் என்பவற்றோடு பொருத்தி விளக்கியிருப்பது ஆய்வியல் சிந்தனை கொண்ட பார்வையாகும்.

இந்துக்களும், கிறித்துவர்களும், இசுலாமியர்களும் தத்தம் சமயங்களை விதந்தோதப் பல இலக்கியங்களைப் படைத்தனர். இசுலாமியர்கள் தமிழுக்கு அறிமுகமாகாத பல சிற்றிலக்கிய வகைகளையும் படைத்தளித்துள்ளனர். இசுலாமிய இலக்கியங்கள் அனைத்தும் தம் சமய நோக்கத்திற்காகவே எழுதப்பட்டவை எனினும் தமிழுக்கு வளம் சேர்ப்பவையாகவே அமைகின்றன. (ப9)

தமிழ் இலக்கிய வரலாற்றில் கி.பி. 6,7 முதல் கி.பி. 12ஆம் நூற்றாண்டு வரை படைக்கப்பட்ட இலக்கியங்கள் பல பக்தி இலக்கியங்களாகவே அமைந்துள்ளன. சிற்றிலக்கியங்கள் பலவும் சமயங்களைப் பிரச்சாரம் செய்வித்தன.

இசுலாமியத் தமிழ்ச் சிறுகதைகளின் தோற்றமான 1940ஆம் ஆண்டு முதல் 1950 ஆண்டு வரையிலான பத்தாண்டுகளை இசுலாமியத் தமிழ்ச் சிறுகதை இலக்கியத்தின் தொடக்கக் காலம் எனலாம். (ப95)

1950ஆம் ஆண்டிற்கும் 1960ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட பத்து ஆண்டுக் காலத்தை இசுலாமியத் தமிழ்ச் சிறுகதைகளின் பொற்காலம் எனலாம் (ப.97) என இந்நூலாசிரியர் ஆதாரங்களுடன் எடுத்துக்காட்டி விளக்கிச் செல்வதை இந்நூலின் பக்கங்கள் தோறும் அறிய முடிகின்றது.

ஒரு தேச வரலாற்றில் வரலாற்று நிலையில் இக்கதையாடல்கள் தங்களை இணைத்துக் கொள்கின்றன (119-120) எனும்படியான நூலாசிரியரின் கருத்துக்கள் ஆய்வு முடிவுகளாகவே முன் வைக்கப்படுவதாக இந்நூலில் ஆங்காங்குக் காண நேர்கின்றது.

இயல் 3 கதைப்பாடல் - கதையமைவு, கதையாடல் முறைமைகளில் இசுலாமிய இலக்கியங்கள் எனும் தலைப்பிலும் கதைப்பாடல்களின் இறப்பு (The End of Narrative) எனும் தலைப்பிலும் இசுலாமியப் படைப்பிலக்கியங்களைப் பின் நவீனத்துவப் பார்வையில் ஆராய்ந்து எழுதப்பட்டுள்ளது.

21ஆம் நூற்றாண்டுத் துவக்கத்தில் இசுலாமிய இலக்கியங்கள் கல்வி வளாகங்களில் கவனிப்புக்கும் ஆய்வுக்கும் உள்ளாகியுள்ள பணிகள் வரவேற்கத் தகுந்தவை. இடஒதுக்கீடு,

சிறுபான்மை மக்கள் முன்னேற்றம் என்றெல்லாம் பேசும் இன்றைய காலக்கட்டங்களில் தமிழ் இலக்கியங்களில் இசுலாமியர்களின் பங்களிப்புக்கள் என இதுபோன்ற ஆய்வு நூல்கள் வரவேற்கத்தக்கவை. இசுலாமியர்களின் பங்களிப்பு கலை இலக்கியத்தளங்களில் இன்று பதிவு செய்யப்பட்டு வருகின்ற சூழலில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தனது பங்களிப்பினை இதன்வழிச் செய்து வருகிறது என்பது எமக்கு மன மகிழ்ச்சி அளிக்கக் கூடியதாக அமைகிறது.

14ஆம் நூற்றாண்டுக் கால இசுலாமியர் ஆட்சிக் காலம் தமிழகத்தில் நடந்த போது அவர்களது கலை இலக்கியப் பங்களிப்பு எவ்வாறு இருந்தது எனும் தேடலுக்கும் ஆய்வுக்கும் இந்நூல் துணை செய்யும் என்று நம்புகிறேன். நூலாசிரியர் முனைவர் எம்.ஜீவாவிற்கு எம் பாராட்டுக்கள்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையையும் காட்டிவரும் **நிறுவனத் தலைவரும் தமிழக அரசின் முதல்வருமான மாண்புமிகு டாக்டர் கலைஞர்** அவர்களுக்குத் தமிழுலகம் என்றும் நன்றிக்கடன்பட்டுள்ளது.

தமிழ்ப்பணிகளுக்கு ஆற்றுப்படுத்தி வரும் **மாண்புமிகு தமிழக நிதியமைச்சர் பேராசிரியர் க. அன்பழகன்** அவர்களுக்கு எம் நன்றி என்றும் உரியது.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் **தமிழ் வளர்ச்சி, அறநிலையம், செய்தி மற்றும் விளம்பரத் துறை அரசுச் செயலாளர் திரு க. முத்துசாமி இ.ஆ.ப.** அவர்களுக்கும் நன்றி.

இச்சொற்பொழிவு மற்றும் நூல் வெளியீடு தொடர்பான அனைத்து ஏற்பாடுகளையும் செய்த நிறுவனப் பணியாளர்கள், இந்த அறக்கட்டளைச் சொற்பொழிவின் எழுத்துருவையும் மெய்ப்பையும் திருத்திப் பதிப்புச் செய்த முனைவர் ஆ. தசரதன் மற்றும் எழுத்துருவை இந்நிறுவனத்தில் ஒளிவடிவமைப்புச் செய்த திருமதி பி.கௌசல்யா ஆகியோருக்கும் இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தாருக்கும் பாராட்டுகள்.

**இயக்குநர்**

# நன்றியுரை

தமிழ் உலகின் பலதுறைகளில் நான் காலெடுத்து வைக்க ஆதாரமாக இருந்த பேராசிரியர் க. நாச்சிமுத்து அய்யா அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். நல்ல பணிச் சூழலை நிர்மாணித்துக் கொடுத்து, ஆக்கப் பூர்வமாக என்னை உத்வேகப்படுத்திய **பாரதியார் பல்கலைக் கழகத் துணைவேந்தர் பேரா. க. திருவாசகம் அய்யா** அவர்களுக்கும் நன்றி.

இசுலாமிய இலக்கியங்கள் குறித்த இந்நூற்பணிக்கு என்னை உரியவராக்கி அரிய இந்த வாய்ப்பளித்த **தமிழ்ப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் முனைவர் மா. இராசேந்திரன் அய்யா** அவர்களுக்கு எனது நன்றிகளைத் தெரிவிக்கின்றேன். எழுத்துக்களாகச் சமர்ப்பித்த அடிப்படைகளை ஆக்க முறைக்கு உட்படுத்தித் தனது தொடர்ச்சியான பல துரிதச் செயல்பாடுகளின் முக்கியக் கூறாக நூலாக்கப்பணிகளை மேற்கொண்டு எனது உழைப்பிற்கு உருவம் கொடுத்த **உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் பேரா. கரு. அழ. குணசேகரன் அய்யா** அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றிகளைத் தெரிவிக்கின்றேன்.

மேலும், இந்நூல் தன் வடிவத்தை ஏதுவாகப் பெற்றுக் கொள்ள உற்ற நெம்புகோல்களாக இருந்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் அனைத்து உள்ளங்களுக்கும் எனது நன்றிகளைக் காணிக்கை யாக்குகின்றேன். இசுலாமிய இலக்கியம் சார்ந்த அரிய தகவல்களைத் திரட்ட உறுதுணையாக இருந்த க. சுந்தர பாண்டியன், சிவகுரு, அனுசுயா, த. சிவக்குமார் போன்ற ஆய்வாளர்களுக்கு என்றென்றும் எனது நன்றிகள் உரித்தானவைகளாகும்.

## ஆசிரியரைப்பற்றி



முனைவர் மு. ஜீவா அவர்கள் 1982ஆம் ஆண்டிலிருந்தே தமிழ்த்துறை சார்ந்த நாடகப் பயிற்சிகளைப் பெறும் வாய்ப்பிற்குள்ளானவர். அவர் இயக்கிய நாடகங்கள் கால, வெளிசார்ந்த நிலைப்பாடுகளைப் புத்தாக்க முயற்சிக்குள்ளாக்கி இருகின்றன. அரங்கில் பெண்ணியமும், தலித்தியமும் இவரால் வீரியத்தோடு வெளிக்கொண்டுவரப்படுகின்றன. பாரதியார் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை விரிவுரையாளரான இவர் நாடகம், சிறுகதை, கவிதை போன்றவற்றைத் தமிழ் உலகிற்குப் படைத்தளிக்கும் பெண்படைப்பாளியாவார். படைப்புலகில் மாற்று அறிவார்ந்த சிந்தனைகளோடும், முற்போக்கு எண்ணங்களோடும் செயல்படக்கூடிய சிறந்த படைப்பாளியாகவும், ஆய்வுக் கட்டுரைகளையும், நூல்களையும் தரும் சிறந்த ஆய்வாளராகவும் விளங்குகிறார்.

# பொருளடக்கம்

# 1. இசுலாமியம் என்கின்ற பிரதேசப் பின்னணியில் இலக்கியங்கள்

பொருளாதாரம் என்பது வரலாற்று அறிவியல் என்ற உண்மையை உணர்ந்து கொண்டோமானால் தேசம், அரசியலை உள்ளிட்ட தேசம், பொருளாதாரத்தை உள்ளடக்கிய தேசம், மதத்தைச் சுமந்து கொண்டிருக்கும் தேசம், மதமையத் தேசம், போர், படையெடுப்பு, அரசமைப்பு, அரசியலமைப்பு, மத, இன, அரசியல்சார் கொள்கை பரப்பும் இலக்கியங்கள் போன்ற வற்றைப் புரிந்து கொள்வதும் எளிதாகும். நாடு பிடிப்பதும், படையெடுப்பதும், தனது அரசாட்சியை நீட்டிக் கொண்டு செல்வதும் பொருளாதாரத்தை முன்னிட்ட அதிகார நாட்டமாகும். முஸ்லீம்களின் படையெடுப்பை ஒட்டி அவர்கள் இந்தியாவை ஆண்ட முறைமைகள், பிரிட்டிஷாரின் கைவைப்பு போன்றவை இந்தியாவை மிகப் பெரிய முதலாளித்துவ அரசாட்சிக்கு இழுத்துச் சென்றிருக்கின்றன. இந்தியாவைப் பெருமளவிற்குப் பாதிப்பை உண்டாக்கிய மதங்களில் இசுலாமும் ஒன்று. ஏனென்றால் ஏறக்குறைய கி.பி. 12 முதல் 16 வரை இந்தியாவைப் பலவேறு கோணங்களில் கையிலடக்க முயற்சித்த இசுலாமிய மதம்சார் ஆக்கிரமிப்பு இந்தியாவைப் பண்பாட்டு ரீதியாக, மதரீதியாக, அரசியல் ரீதியாக உட்கிரகித்து வாழ்ந்திருக்கின்றது. அக்பருடைய 'அய்னி அக்பரியில்' அக்பர் இசுலாமிய நாடாக இந்தியா மாறுவதை விரும்பவில்லை. இந்துக்கள் இந்துக்களாக வாழ முழு உரிமையும் தரப்பட வேண்டுமென விரும்பினார் என்ற குறிப்புகள் காணக்கிடக்கின்றன. இது முகலாய மைய அரசில் நடைபெறுகின்ற நேரடி அனுபவமாகக் கூறப்படுகின்றதாகும். ஆனால் தமிழகம், தெலுங்கு நாடகப் பிரதேசங்களை முகலாயக் குறுநிலமன்னர்கள் அதிகாரம் செலுத்திய வரலாற்றில்தான் இசுலாமியத் தமிழ் இலக்கியங்கள் தோற்றம் பெற்றிருக்கின்றன என்பதை மறுக்க முடியாது. வரலாற்றுவழிச் சம்பவிக்கின்ற

சமூகச் செயல்பாடுகள் இதனால்தான் பின்பு பேசப்படுகின்ற போது விறுவிறுப்புக்கு உள்ளாகின்றவைகளாகின்றன. கடந்து போன சமூக அறிவியலைக் கலாச்சார மதிப்பீடுகள் சுயபிரக்ஞையோடும் சுயபிரக்ஞையற்றும் நடத்திச் செல்லப்பட்டிருக்கின்றன என்று காண்பது கடந்த காலம், அல்லது கடந்த கால இலக்கியம் பற்றிய ஆய்விற்கு வலுச்சேர்க்கின்றன. முகலாயப் பேரரசு இந்தியாவில் காலூன்றி ஆட்சி நடத்தியது பொருளாதார வரலாறாகும் போது அது சார்ந்த கலாச்சார மதிப்பீடுகளும் கலாச்சார வாழ்க்கையில் விரிந்து பரவுவது யதார்த்தமானதாகும். இப்பகுதியில்தான் இசுலாமியத் தமிழ் இலக்கியங்கள் தங்களைப் பொருத்திக் கொள்கின்றன. ஏனென்றால் அரசியல் அமைப்புச் சட்டம் ஏதும் இல்லாமலும் அரசர்களுக்கும் அவர்தம் குடிமக்களுக்கும் தெரிந்த முடியாட்சியன்றி வேறுவகையான அரசாங்க அமைப்பு ஏதும் இல்லாமலும் பரந்த நாட்டை ஆய்வதற்கும் சுல்தான்கள் பலவகையான பரிசோதனைகளை மேற்கொண்டிருக்கின்றனர் ஷம்ஸுத்தீன், பால்பன், அலாவுத்தீன், பிரோஸ் துக்ளக், பலால்லோடி போன்றவர்கள் கையாண்ட உத்திகள் நாட்டின் நன்மை கருதியே கையாளப்பட்டதாகக் கூறப்படுகின்றது. ஆயினும் நாட்டிலிருந்த பிரச்சினையைத் தீர்ப்பதில் அவர்கள் வெற்றி பெற்றவர்களாக இல்லை. ஆனால் பலவகையான முன்மாதிரிகளை (precedents) அவர்கள் விட்டுச் சென்றனர். ஆனால் முன்மரபுகள் அனைத்துமே ஏதாவது ஒரு சமயத்தில் புறக்கணிக்கப்பட்டிருக்கின்றன. சான்றாக அரச குலங்களில் அடிக்கடி மாறுதல்கள் ஏற்பட்டதால் சுல்தானியத்தில் ஓர் அரச குலஆட்சி எனும் கொள்கை வேரூன்ற முடியாமற் போனது. ஓர் அரச குலத்தைச் சார்ந்தவர்களிடையே பட்டத்து உரிமை யாருக்கு என்பது தெளிவாக நிர்ணயிக்கப்படவில்லை. அரியணையில் எவரும் அமரலாம் என்ற நிலை இருந்தது. பல மன்னர் கொலை செய்யப்பட்டதால் அரசர் புனிதமானவர் என்ற கருத்து செல்வாக்கிழந்தது. இரகசியக் கொலைகள் மூலம் அரசர்களை அமைச்சர்கள் நீக்கியது போலவே சில அமைச்சர்களை அரசர்களும் தொலைத்துக்கட்டினார்கள். இதனால் முடியாட்சியின் பெருமை சிதறடிக்கப்பட்டதோடு அதன் இடத்தை நிரப்புமளவிற்கு வேறு எந்தச் சக்தியும் தோன்றவுமில்லை.

மக்களுக்கும் மன்னருக்குமிடையே நேரடித் தொடர்பினை ஏற்படுத்த எந்த ஒரு அரசகுலமோ அல்லது அரசரோ முயற்சி மேற்கொள்ளவில்லை. அலாவுத்தீன் காலத்தில் ஒரு சிறிய பகுதி நீங்கலாக மற்ற காலங்களில் நாடு பல படைமானியப் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்ததால் மன்னருக்கும், மக்களுக்கும் இடையில் நேரடித் தொடர்பு ஏற்பட வாய்ப்பில்லாமல் போய்விட்டது. எனவே அனைத்து மக்களுடைய ஆதரவு மன்னருக்கு எப்போதும் கிடைக்கவில்லை. முஸ்லீம்களும் தங்களுக்குள் ஒற்றுமையாக வாழவில்லை. மரபாக வந்த பொதுச் சொத்தே அரியணை என அவர்கள் அனைவரும் எண்ணவில்லை. நெருக்கடியான நேரங்களிலும்கூடத் தேசிய உணர்வோடு நாட்டைக் காக்க முன்வரவில்லை. வடஇந்தியாவில் முஸ்லீம்கள் ஆண்ட முந்நூறு ஆண்டுகளில் நடைபெற்ற சோதனைகளில் கிடைத்த படிப்பினைகள் ஆகியவற்றின் அடிப்படையில் அக்பர் புத்தமைப்புப் பணியைத் தொடங்கினார்.

வரலாற்றுப் போக்கின்மீது புவியியல் மெய்ம்மைகள் செல்வாக்குச் செலுத்துகின்றன. மனிதனின் உணவும், பிற தேவைகளும் தட்ப வெப்ப நிலைகளால் நிர்ணயிக்கப்படும் போது அவன் செய்யும் தொழிலானது நிலத்தின் தன்மை, கடல், மலை ஆகியவை சார்ந்தே அமைகின்றது. மனிதர்களுடைய கருத்துக்களும் நம்பிக்கைகளும் ஒரே வகையாக அமைவதற்கு அவர்கள் வாழுகின்ற இயற்கைச் சூழலே காரணமாகின்றது. நல்ல துறை முகங்களைக் கொண்ட கடற்கரையும், பாதுகாப்பு அளிக்கக் கூடிய அல்லது தனியாகப் பிரித்து வைக்கக்கூடிய எல்லைகளும், மக்களுடைய சிறப்பியல்பு, செயல்கள் ஆகியவற்றோடு மற்ற நாடுகளுடன் கொள்ளுகிற தொடர்பையும் நிர்ணயிக்க வல்லனவையாக விளங்குகின்றன. மேலும் ஒரு நாட்டின் மீது வெளிநாட்டுக் கருத்துக்கள் எவ்வளவு தூரம் செல்வாக்குச் செலுத்துகின்றன என்பதையும் அவை நிர்ணயிக்கின்றன. இவ்வாறாகப் புவியியலின் பின்னணி யில்லாமல் வரலாற்றைப் புரிந்து கொள்ள முடியாது. ஒரு நாட்டின் வரலாற்றையும், அந்நாட்டு மக்களுடைய சிறப்பியல்புகளையும் அந்நாட்டின் நிலையங்களும் நாகரீகமும் வளர்ந்து வந்த விதத்தையும் முழுவதுமாக உணர

வேண்டுமானால் அந்த நாட்டின் புவியியல் பின்னணியைப் புரிந்து கொள்வது அவசியமாகின்றது. அப்பின்னணியைப் புரிந்து கொண்ட பிறகுதான் அந்நாட்டின் வரலாற்றை உருவாக்கவோ அல்லது விளக்கவோ முற்பட முடியும். வரலாற்றை விளக்கும் போது கலாச்சாரக் கருத்தாக்கங்கள் விரிவு பெறும். அவற்றினுள் இலக்கிய வெளிப்பாடுகளின் இன்றியமையாமையையும், மகத்துவத்தையும் உணரமுடியும்.

இந்தியாவைப்போன்று வேறு எந்த நாட்டு வரலாற்றையும், அந்நாட்டு மக்களின் வாழ்க்கைக் கதியையும், சுற்றியுள்ள கண்டங்கள், கடல்கள் ஆகியவற்றின் நிலையை ஒட்டிய புவியியல் அமைப்பு இவ்வளவு திட்டவட்டமாக உருவாக்கவில்லை என்று ஹோல்டிக், சர்.டி.ஷெச், தனது "இந்தியா தீ ரீஜியன் ஆஃப்த வேல்டு" என்ற நூலில் குறிப்பிடுகின்றார். வேத காலத்தில் ஆரிய வர்த்தம் என்றும் பிற்காலத்தில் இந்துஸ்தானம் என்றும் அழைக்கப் பெற்றதுமான இந்தியா புவியியல் அடிப்படையிலும், வரலாற்று அடிப்படையிலும் மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. வட இந்தியா, தக்காணம், தென்னிந்தியா என்ற முப்பெரும் நிலப்பரப்புகளின் மலைத் தொடர்கள் நீண்ட நெடுஞ்சுவர்களாக இருந்தாலும் வடமேற்கு மூலையில் ஒரு பிளவு காணப்படுகின்றது. இமயத்திலிருந்து மலைத்தொடர்கள் தெற்கு நோக்கிச் செல்லத் தொடங்கும் இவ்விடத்தில் காணும் இடைவெளியில் காபுல்நதி இந்தியாவிற்குள் நுழைகின்றது. மத்திய ஆசியாவுடன் இந்தியா தொடர்பு கொள்வதற்கு ஏற்ற புகழ்பெற்ற கணவாய்கள் இங்குதான் அமைந்துள்ளன. அதன் காரணமாக இமயம் என்று பாதுகாப்புச் சுவர் இந்த இடத்தில் இல்லாமல் போகின்றது. ஆனால் இந்த விதிவிலக்கு வரலாற்றுமுக்கியத்துவம் வாய்ந்தது. ஏனெனில் இக்காணவாய்களின் வழியாகத்தான் பலபடையெடுப்பாளர்கள் வடஇந்தியாவிற்குள் நுழைந்தனர்.

இங்ஙனம் வட இந்தியாவின் பண்டைக்கால, இடைக்கால வரலாறானது முக்கியமாக இரு புவியியல் மெய்ம்மைகளின் அடிப்படையில் அமைந்துள்ளதை உணரலாம். வடமேற்கிலுள்ள தடை முழுப் பாதுகாப்பை அளிக்கவில்லை

என்பது முதலாவதாகும். கணவாய்களை ஒரு முறை கடந்து வந்து விட்ட பகைவரின் முன்னேற்றத்தைத் தடுத்து நிறுத்தக் கூடிய இயற்கைத் தடை ஏதும் இடையில் இல்லை என்பது இரண்டாவதாகும். எல்லா நாடுகளிலும் மலைகள் முக்கியத்துவம் வாய்ந்தவையாக விளங்குகின்றன. ஆனால் இந்தியாவில் அவை மக்களுடைய பொருளாதார வாழ்க்கையின் மீது ஆதிக்கம் செலுத்துவதோடு ஆட்சி முறையின் மீதும் செல்வாக்குப் பெற்றுள்ளன. இவ்வாறு பேராறுகளும் சிற்றாறுகளும் பெருக்கெடுத்து ஓடுவதற்கும் நீரைப் பகிர்ந்தளிப்பதற்கும், பெருமளவில் மழை பெறுவதற்கும், நிலமானிய முறை, பயிர் வகைகள் ஆகியவற்றுக்கும் மக்கள் பல பகுதிகளில் பரவி வாழ்வதற்கும் அவர்களுடைய தராதர வாழ்க்கை வசதிக்கும் இந்தியா தனது மலைகளையே அதிகமாகச் சார்ந்துள்ளது. இம் மலைத் தொடர்களுக்குக் கீழே கிழக்கு மேற்காக 1700மைல் நீளத்திற்கு உடைபடாத பரந்த சமவெளி அமைந்துள்ளது. அதில் சிந்து, கங்கை, பிரம்மபுத்திரா என்னும் பேராறுகள் பாய்ந்தோடி நீர்வளம் பெருக்குகின்றன. இவ்வாறு மலைகளும் ஆறுகளும் சேர்ந்த நாட்டின் வடபகுதியின்கண் அமைந்த இச்சமவெளியை வளமுள்ளதாக மாற்றியிருக்கின்றன.

மண்வளம் மக்களுடைய தொழிலை நிர்ணயிக்கின்ற காரணத்தால் இந்தியா ஒரு விவசாய நாடாக வளர்ந்திருப்பதுடன், இந்தியக் கிராம மக்கள் மண்சார்ந்த வாழ்க்கையோடு பின்னிப் பிணைந்த பழக்க வழக்கங்களை உடையவர்களாயிருக்கின்றனர். பயிர்த் தொழில் பழமை மனப்பான்மையைத் தக்க வைப்பதோடு துணிகரச் செயல்களில் விருப்பம் இன்மையைத் தோற்றுவிக்கக் கூடியதுமாகும். அதிக உழைப்பின்றிப் போதுமான உணவுப்பொருட்களை மட்டும் நிலம் வழங்கி வருவதால் மக்களிடையே போதுமென்ற மனபான்மை அதிகரித்தது. மேலும், தங்களை இயற்கையின் அழிபாடுகளிலிருந்து பாதுகாத்துக் கொள்ள வேண்டிய தேவை அதிகமில்லாத தட்பவெப்ப மண்டலம் ஆதலால் இந்திய மக்களின் தேவைகள் குறைவு என்பதோடு அவர்கள் வாழ்க்கை எளிதானதாகவும், அமைந்துள்ளது. ஒரே இடத்தில் நிரந்தரமாக வசிப்பதாலும் நிலத்தை நம்பி இருப்பதோடு அதன் மீது பற்றுதல்

கொண்டிருப்பதாலும் தங்களது அமைதியான வாழ்க்கை முறைகளைப் பாதிக்கக்கூடிய இடர்ப்பாடுகளையும், ஆபத்துக் களையும் தவிர்க்கவே மக்கள் முயன்றனர். இதனால் உள்நாட்டுப் போட்டியாளர்களிடமிருந்து நாட்டைக் கைப்பற்ற நினைத்து அரசமைக்கும் ஆசை கொண்ட அந்நியப்படையெடுப்பாளர்கள் எந்தவித இடர்ப்பாடோ அல்லது மக்களின் இடைவிடாத எதிர்ப்போ இல்லாமல் வட இந்தியா முழுவதிலும் தங்களது ஆதிக்கத்தை ஏற்படுத்துவதில் வெற்றி கண்டார்கள் என்றால் அதற்கு மக்களின் இந்தப் போக்கே காரணமாகும். இதன் விளைவாக வலிமையற்ற அரசாங்கங்களும், அரச குலங்களும் விரைவில் மறையலாயின. இசுலாமிய இலக்கியச் சூழல் தமிழகத்திலும் பரவிய சூழலைப் பற்றிய ஊடுருவல் பார்வையை வைப்பதற்காக மேற்கூறப்பட்டுள்ள பின்னணி விளக்கங்கள் தரப்பட்டுள்ளன.

இலக்கியங்களின் வளர்ச்சியில் சமயங்களின் பங்களிப்பு புறக்கணிக்க இயலாத ஒன்றாகும். மக்களை நன்னெறிப் படுத்துவதில் சமயங்கள் இறையுணர்வை முதன்மைப்படுத்தின. எல்லாச் சமயங்களும் மனித மனத்திற்கு அப்பாற்பட்ட சக்தி ஒன்று இருப்பதை உணர்த்தி மக்கள் மனத்தில் இறையுணர்வை உண்டாக்கி அதற்கேற்ற வகையில் மக்களிடயே தம் சமயக் கருத்துக்களைப் பரப்பிவந்தன. சமய நூல்கள் தொடங்கி வேதங்கள், புராணங்கள் என அவை வளர்ந்தன. மேலும் அந்தந்த நிலத்தின் பண்பாடுகளுக்கேற்பச் சமயக் கருத்துக்களை ஏற்றுக் கொள்ளும் வண்ணம் இலக்கியங்களைப் படைக்கத் தொடங்கினர்.

வாணிப நோக்கத்திற்காக வந்தவர்கள் தங்களின் இறைக்கொள்கைகள்வழிச் சமயத்தைப்பரப்பிப் பின் பல இலக்கிய வகைகளைப் படைத்தனர். அவ்வகையில் அரபு நாட்டில் முகமது நபி அவர்களின் இறைவாக்குகளைக் கொண்டு உண்டானது இசுலாம் சமயம் ஆகும். தமிழகம் வந்த பல்வேறு சமயத்தினரும் தங்கள் கருத்துக்களைத் தமிழ்மொழி வாயிலாக இலக்கிய வடிவில் மக்களிடையே எடுத்துச் சொல்லி, தத்தம் இலக்கியங்களில் உள்ளவற்றைத் தமிழில் உருவாக்கித் தமிழை வேத மொழியாகக் கொண்டும், புனித மொழியாகக் கொண்டும்

பணி செய்தனர். அதைப்போலவே இசுலாம் சமயத்தினரும் முதலில் தமிழை அரபு மொழியில் எழுதிப் பின்னர்த் தமிழைக் கற்று, தமிழிலேயே அதிகமாக இலக்கியங்களை எழுதத் துவங்கினர். பிற சமயத்தவரைவிடத் தமிழ் மொழிக்கு இசுலாமியரின் பங்களிப்பு கூடுதலாகவே உள்ளது. மேலும் தமிழ்மொழி கண்டறியாப் புதுவகை இலக்கியங்களை அரபு மொழியில் இருந்து வழங்கிய பெருமையும் இஸ்லாமியர்களுக்கு உண்டு. எட்டாம் நூற்றாண்டில் தோன்றிய களவியற் காரிகையில் இசுலாம் சமயத்தவர் பற்றிய குறிப்பு காணப்படுவதிலிருந்து இச்சமயத்தவர் எட்டாம் நூற்றாண்டுக்கு முற்பட்டவர்கள் என்பது தெள்ளிதின் விளங்கும்.

முதன்முதலில் இசுலாம் மார்க்கத்தைப் பரப்பிய சிறப்பு முகமது நபி அவர்களையே சாரும். முகமது நபியின் காலத்திற்கு முன்னரேயே அரபின மக்கள் தமிழகத்துடன் வாணிபத் தொடர்பு கொண்டிருந்ததை வரலாற்றுச் செய்திகளும், இலக்கியச் செய்திகளும் உணர்த்துகின்றன.

## இசுலாமியரும் தமிழகமும்

தமிழகத்துடனான இவர்களது தொடர்பு அரபியர்களின் வாணிபம் காரணமாகவே நிகழ்ந்தது எனினும் தமிழ் இலக்கியங்களில் குறிப்பிடப்படும் யவனர் என்போரே இவ்வினத்தவர் என்ற கருத்தும் நிலவி வருகின்றது. மத்தியத் தரைக்கடலைச் சார்ந்த பகுதிகளில் வாழும் ஐயோனியரே யவனர் எனப்பட்டனர். இவர்கள் பெரும்பாலும் அரபு மொழி பேசும் முஸ்லீம் இனத்தவர்கள் ஆவர். ஆனால் மிகப் பழங்காலத்திற்கு முன்பே அங்கு வாழ்ந்த ரோமானிய இன மக்களும் கிரேக்க இன மக்களும் ஐயோனியர் என்ற பெயரிலேயே அழைக்கப்பட்டதை வரலாறுகள் தெரிவிக்கின்றன. அவர்களைத் தொடர்ந்து பின் வந்த அரேபியரும் அப்பெயரிலேயே அழைக்கப்பட்டனர். அவர்கள் வாழ்ந்த பகுதியும் யவனம் எனப்பட்டது. இது தமிழ் இலக்கிய மரபில் கூறப்படும் தேசங்களுள் ஒன்றாகக் கருதப்படுகின்றது. அந்நாட்டையே மதுரைக் கவிஞர் வரும் "நனந்தலை தேஎத்து" எனும் சொற்றொடர் சுட்டுவதாக அறிஞர் பெருமக்கள் கூறுவர்.

அத்தேசத்திலிருந்து தமிழகத்திற்குக் குதிரைகள் கொண்டுவரப்பட்டதை மதுரைக்காஞ்சி,

விழுமிய நாவாய் பெருகி நீரோச்சுநர்
நனந்தலை தேஎத்து நன்கலனுய்ம்மா
புணர்ந்துடன் கொணர்ந்த புரவியோ டனைத்தும்[1]
(321–323)

என்று கூறுகிறது. முல்லைப் பாட்டும் யவனர் என்ற பதத்தை உடையதாய் அமைந்துள்ளது. அதில் அவர்கள் அச்சம் உண்டாக்கும் தோற்றம் உடையவர் என்பதை,

மெய்ப்பை புக்க வெருவருந் தோற்றத்து
வலிபுணர் யாக்கை வன்கண் யவனர்[2] (54–61)

என்ற அடிகள் விளக்குகின்றன. இவர்களது முக்கியமான நோக்கம் வணிகமே என்பதை அகநானூறு,

சுள்ளியம் பேரியாற்று வெண்ணுரை கலங்க
யவனர் தந்த வினைமா ணன்கலம்[3] (149)

என்றுரைக்கின்றது. இவ்வாறாக இவர்களது தொழில் வன்மை, செல்வாக்கு, பண்புகள் பற்றி இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன. இவைமட்டுமன்றிப் பெருங்கதையில் யவன அரசன் ஒருவனைப் பற்றிய குறிப்பும் காணப்படுகின்றது.

அடுதிரை முன்னீர் யவனத் தரசன்[4] (59)

என்பது அதற்குரிய சான்றாகும்.

இவ்வாறாக யவனர் எனும் சொல் முதலில் மேற்கு நாட்டிலிருந்து வாணிகம் புரிய வந்த கிரேக்கர்களையும் பின் அவர்களைத் தொடர்ந்து வந்த ரோமானியர்களையும் சுட்டி அரபின மக்களையும் சுட்டியது என்பதை அறியலாம். தமிழகத்துடன் அரபின மக்கள் நேரடித் தொடர்பு பெறக் கடல்வழி வாணிகம் பெரிதும் உதவியது. கிறித்துவ ஆண்டு துவக்கம் பெறுவதற்கு முன்னரேயே அரபின மக்கள் இலங்கையில் வாழ்ந்து வந்ததைப் பிளினி எனும் வரலாற்றறிஞர் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறாகப் பரவிய அரபியர் நபிமார் போன்றோரின் போதனைகளை ஏற்று வாழத் துவங்கியதன்

விளைவாக விரைவில் இசுலாம், தமிழகத்தில் பரவியது. இசுலாமிய மத போதகர்கள் பலர் தமிழகத்துக்கு வருகை புரிந்து தம் செல்வாக்கை நிலை நிறுத்தினர். பலர் நன்கொடைகள் பெற்று வாழ்ந்தனர். சோகை சாமந்தப்பள்ளி பற்றித் திருப்புல்லாணிக் கல்வெட்டு சான்று பகர்கின்றது. இஸ்லாமிய வழிவந்த தமிழ் அறிஞர்கள் தாங்கள் உணர்ந்து தெளிந்த நற்கருத்துக்களை மக்களிடையே பரப்ப நேரடியாகத் தமிழ் மொழிநடையைக் கையாண்டதன் விளைவாக இசுலாமியம் தமிழ் மொழியில் செல்வாக்குப் பெறத் துவங்கியது.

தொடக்கத்தில் இசுலாம் சமயத்தினர் தமிழ் மொழியை எழுதத் தெரியாதவர்களாகவும், அரபு மொழியை வாசிக்கும் ஆற்றல் பெற்றவர்களாகவும் விளங்கினர். இந்நிலையில் அன்றைய தமிழ்நாட்டு முஸ்லீம் இனத்தவர்கள் இஸ்லாமிய நூல்களைக் கற்கும் வண்ணம், அரபு மொழியில் புலமை பெற்ற தமிழறிஞர்கள் பேச்சுத்தமிழ் நடைக்கு ஒப்பான ஒரு நடையில் இசுலாமியத் தமிழ் நூல்களை எழுத முற்பட்டனர். தொடக்கத்தில் தமிழ் மொழியை அரபு எழுத்துக்களில் எழுதி அரபுத்தமிழ் என்ற புதிய கலவை மொழியைக் கையாண்டு, பின் தமிழ் எழுத்துக்களையும் கற்று, அரபுத்தமிழில் எழுதப்பட்ட அனைத்தும் தமிழ் எழுத்துக்களில் எழுதப்பட்டன. இவ்வாறாக அரபு இனத்தவரின் வாணிகத் தொடர்பானது தமிழகம், இலங்கை போன்ற பகுதிகளில் இசுலாமியப் பண்பாட்டுக்கான சாத்தியக் கூறுகளை உருவாக்கியது எனில் மிகையில்லை. இவ்வாறாக இசுலாமியர்கள் தென்னாட்டின் கடற்பகுதிகளில் குடியேறி வாழத்துவங்கிய காலக்கட்டத்தில் அவர்களது தூய நெறிகளால் ஈர்க்கப்பட்டு இங்கிருந்த பலரும் இசுலாம் நெறியில் தம்மை இணைத்துக் கொண்டனர்.

இவ்வாறாக இசுலாம் பெருகியது. பலர் அரபியர்களின் வழித்தோன்றல்களாகவும் தமிழகம் சாந்தவர்களாகவும் இருந்த காரணங்களால் இஸ்லாமியர்களுக்கும் இந்நாட்டு மொழிகளான தமிழ், மலையாளம் போன்றவற்றிற்கும் உள்ள உறவானது வலுப்பெற்றது. இதனால் தமிழர்கள் பலர் மொழியால் தமிழர்களாகவும், மதத்தால் இஸ்லாமியர்களாகவும் மாறித் தமிழில் இயற்றிய இலக்கியங்கள் பெரும் சிறப்புப் பெற்றவையாக

விளங்கின. தமிழில் காப்பியங்கள் படைத்த பிறசமயத்தாருள் இவர்களே முதன்மையானவர்களாகத் திகழ்கின்றார்கள். அதுமட்டுமல்லாமல் தமிழ் இலக்கிய மரபினை மீறாமலும் அதே வேளை தமது சமயக் கருத்துக்களைத் தெளிவாக விளக்கும் வகையிலும் அவர்கள் தமிழ் இலக்கிய மேன்மைக்கு உதவினர். புராணம், காப்பியம் எனத் தமிழில் உள்ள அனைத்து இலக்கிய வடிவங்களிலும் இலக்கியம் படைத்த இசுலாமியர்கள் தமிழுக்கு அறிமுகமாகாத பல சிற்றிலக்கிய வகைகளையும் படைத்தளித்துள்ளனர். இசுலாமிய இலக்கியங்கள் அனைத்தும் தம் சமய நோக்கத்திற்காகவே எழுதப்பட்டவை எனினும் தமிழுக்கு வளம் சேர்ப்பவையாகவே அமைகின்றன. தமிழின் பேச்சு வழக்கு நடையில் அரபு மொழியின் வரிவடிவத்தில் எழுதப்பட்ட தமிழ் அரபுத்தமிழ் ஆகும். அரபியிலிருந்து வந்த மக்கள் தம் சமய உண்மைகளைத் தமிழ் இசுலாமிய இனத்தவர்களுக்கு விளக்க அரபுத் தமிழ் இன்றியமையாத ஒன்றாக விளங்கியது.

செய்யுள், பாட்டு, உரைநடை, சிறுகதை, நாவல், நாடகம் எனப் பல்துறையிலும் இசுலாமிய இலக்கியங்களின் வளர்ச்சியைக் காணலாம்.

இசுலாம் வருகைக்கு அடித்தளமாக விளங்குவது அரேபியர்களின் வாணிபத் தொடர்பு ஆகும். இசுலாமியர்களின் சமயம் பரவலாகத் தனித்துவம் பெற்ற போதிலும் மேற்குக் கடற்கரைப் பகுதிகளிலேயே அவர்களின் செல்வாக்கு அதிகம் காணப்பட்டது. அவர்களின் குடியேற்றமும் வியாபாரமும் பெருகியது. அந்நாட்டு மன்னர் உதவியால் வளர்ச்சி கண்டது. இசுலாம் இனத்தவர் 7,8ம் நூற்றாண்டுகளை விட, 9ம் நூற்றாண்டுகளில் வியாபார ரீதியாகப் பெரும் வளர்ச்சி பெற்று உச்சநிலை அடைந்தனர். அச்சயமம் சார்ந்த மதபோதகர்கள் பலர் தமிழகத்திற்கு வருகை புரியத் துவங்கினர். இசுலாமியப் பெரியார்களுள் பாண்டி நாட்டுக்குக் கி.பி. 1050இல் மாலிக் முல்க், அலிஷா என்போர் வருகை புரிந்ததாகவும், அவர்களுக்கு முன்பே மதுரையில் முஸ்லீம்கள் வாழ்ந்து வந்ததாகவும் நமக்குச் சான்றுகள் அறிவிக்கின்றன. இவர்கள் மட்டுமன்றி அதே கால எல்லையில் புகழ் பெற்ற அரபுப் பயணிகளான மஸ்ஊதி இப்னு

குர்தாத்பிஹி போன்றோரும் தமிழகத்துக்கு வந்துள்ளதை அறியமுடிகின்றது. இவ்வாறாகத் தம் சமயநோக்கு ஒன்றையே ஆதாரமாகக் கொண்டு தமிழகம் வந்த இசுலாமியர்கள் உள்நாட்டுப் பூசல்களைத் தமக்குச் சாதகமாக்கிக் கொண்டு தம் மதத்தை வேரூன்றச் செய்தனர். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர் சையத் இப்ராஹிமும் என்பவர். கி.பி. 12ஆம் நூற்றாண்டின் இறுதியில் தமிழ்நாட்டில் நிகழ்ந்த அவரது வருகை முக்கியமான ஒரு நிகழ்வாகும். இவரது வருகையின் போது பாண்டி நாட்டைப் பாண்டியர் ஐவர் ஆண்டு வந்தனர். விக்ரமபாண்டியனுக்கும், சையத் இப்ராஹிமுக்கும் போர் ஏற்பட்டது. போரில் வீரபாண்டியன் கொல்லப்பட்டான். மேலும் அவனது இரு புதல்வர்களும் சையத் இபுராஹிமின் புதல்வர்களும் மாண்டனர். இவ்வாறாக ஆட்சியைக் கைப்பற்றிய சையத்இப்ராஹிம் ஏறத்தாழ 12 ஆண்டுகள் அங்கு இசுலாமிய ஆட்சி புரிந்துள்ளார். அதன்பின்னர் அவர் விக்ரமபாண்டியனின் உறவினர் ஒருவரால் கொல்லப்பட்டார். அக்காலக்கட்டத்தில் மதுரையை ஜடாவர்மன் குலசேகரன் (கி.பி.1190) என்பான் ஆண்டு வந்தான். இவ்வாறாக 12 ஆண்டுகள் மதுரைப்பகுதியை ஆண்ட சையத் இப்ராஹிம் மீது பாடப்பட்டது தான் தீன் நெறி விளக்கம். வண்ணக் களஞ்சியரால் பாடப்பெற்ற இக்காப்பியத்தில் அவரது வாழ்க்கை வரலாறு விரிவாக ஆராயப்பட்டுள்ளது. இதன் மூலமாக உள்நாட்டுப்பகை மற்றும் சகோதரர்களிடம் காணப்பட்ட ஒற்றுமையின்மை காரணமாக உள்நாட்டுப் போருடன் வெளிநாட்டுப் படையெடுப்புகளும் நிகழ்ந்துள்ளதை அறிய முடிகின்றது. முஸ்லீம்களின் செல்வாக்கு பெருகியமையை அறியமுடிகின்றது.

செல்வாக்குப் பெற்ற முஸ்லீம் மக்களுக்கு நன்கொடைகள் பல வழங்கப்பட்டமையைக் கல்வெட்டுச் செய்திகள் தெரிவிக்கின்றன மேலும் இவர்கள் குறுநில மன்னர்களாகத் திகழ்ந்தமையையும் வரலாற்றுச் சான்றுகள் தெரியப் படுத்துகின்றன. சாமந்தன் என்னும் சொல் அவர்களைக் குறிப்பதாகவே வழக்கில் இருந்ததாகக் கூறப்படுகின்றது. இராஜாதிராஜன் கல்வெட்டிலும், குருவாலங்காட்டுக் கல்வெட்டிலும் காணப்படும் சாமந்தர் எனும் சொல்

இவ்வினத்தவரின் குறுநில மன்னர்களைக் குறிப்பதாகவே அமைகின்றது. பாண்டிய மன்னர்களுடன் முஸ்லீம் சிற்றரசர்கள் வியாபாரம் காரணமாக ஒப்பந்தங்கள் செய்து கொண்ட செய்திகளும் உள்ளன.

தமிழகத்தை ஆண்டு வந்த முதலாம் மாறவர்மன் குலசேகரன் காலத்தில் (கி.பி. 1268 முதல் 1310 வரை) பாண்டியர் நால்வரும் அவனுடன் இணைந்து ஐவராக ஆண்டு வந்தனர். அவர்களுள் ஒருவராகக் கருதப்படுபவரே தகியுத்தீன் அப்துல்ரகுமான் என்பதைச் செய்தக்காதி திருமண வாழ்த்தில் உமறுகத்தாப் புலவர், ஐவருக்கு மாறாக ஆறாம் பேர் கொண்ட என்று குறிப்பிட்டுள்ளார். மேலும் அவர் பாண்டியன் மகளை மணம் புரிந்த செய்திகளையும் உமறு கத்தாப் புலவர்,

**நிலமகளும் சயமகளும் நிற்ப வழுதி செல்வக்**
**குலமகளைக் கைப்பிடித்துக் கொண்ட மணவாளன்[5]**
**(47)**

என்று குறிப்பிடுகின்றார்.

இவ்வாறாகப் பாண்டிய மன்னனின் அவைக்களத்திலும் முஸ்லீம் புலவர்கள் வீற்றிருந்ததை அறிய முடிகின்றது. துறைமுகப் பட்டினங்களில் மாத்திரம் அல்லாது உள்நாட்டுப் பிரதேசங்களிலும் முஸ்லீம் மக்கள் குடியேறி வாழ்ந்த செய்திகள் வரலாறு மூலம் அறியப்படுகின்றன. உள்நாட்டுப் போர் மற்றும் பூசல்களுக்கிடையே நாட்டில் அமைதியை ஏற்படுத்தும் பொருட்டுத் தம் சமயம் சார்ந்த நெறிகள் வழி ஆற்றலும் வலிமையும் கொண்ட இசுலாமியர் எவ்வித இடர்ப்பாடும் இன்றித் தங்கள் ஆதிக்கத்தை ஏற்படுத்துவதில் வெற்றி கண்டனர். வலிமைமிக்க தலைவர்கள் உருவாக்கிய புதிய அரசுகளில் மக்கள் அமைதியான வாழ்க்கை வாழத் தலைப்பட்டனர். அரபு, பாரசீகம் போன்ற புதிய புதிய மொழிகள் வழக்கத்திற்குக் கொண்டு வரப்பட்டன. அரசு அலுவலகங்கள் சார்ந்தோருக்குப் பாரசீக மொழி கட்டாயமாக்கப்பட்டது. வட இந்தியாவில் ஏற்பட்ட சுல்தானியர் ஆட்சியும் புதிய சூழ்நிலையை ஏற்படுத்தியது. கி.பி. 6ம் நூற்றாண்டு வாக்கில் குப்தப் பேரரசு சீர்குலையத் துவங்கியதால் சிறிய ராச்சியங்கள் தோன்றி நிலை பெறத்

துவங்கின. அவர்களுக்குப் பிறகு மௌரியரும, ஹர்ஷவர்த்தனரும் வலுவுள்ள பேரரசை நிறுவினர். நபிகள் நாயகம் இசுலாமிய மதத்தின் கொள்கைகளைப் பரப்பத் துவங்கிய போது இந்தியாவில் ஹர்ஷவர்த்தனரது ஆட்சிதான் நிகழ்ந்து கொண்டிருந்தது. அவரது ஆட்சிக்காலத்தில் அரேபியாவின் சில பகுதிகளிலும் செங்கடலை அடுத்த அபிசீனியாவிலும் கிருத்தவர்களின் ஆட்சி நடந்து வந்தது. நபிகள் தம்மைப் பின்பற்றுபவர்களின் பொருளாதார, சமுதாயச் சிந்தனையாளராகவும், அவர்களைக் காப்பவராகவும், படைத்தலைவராகவும் விளங்கிச் சிறிது சிறிதாக இசுலாமைப் பரப்பத்துவங்கினர். அதன் விளைவாகக் கி.பி. 600 வாக்கில் மேற்கு அரேபியாவின் பல இனங்கள் இசுலாத்தினை ஏற்றுக்கொண்டன.

## வரலாற்றுச் செய்திகள்

தமிழகத்தில் நிலைபெற்ற மன்னர்களின் மக்களை மணம் புரிந்த இசுலாமியர்கள் அவர்களுக்கு உறுதுணையாகப் பிற நாட்டுடன் போர் புரிந்த செய்திகளும் காணப்படுகின்றன. இலங்கை மன்னனுக்கும், பாண்டியருக்கும் இடையே ஏற்பட்ட போரில் பாண்டியருக்கு ஆதரவாக இசுலாமிய இனத்தவர் செயல்பட்டுள்ளதை வரலாற்றுச் சான்றுகள் அறிவிக்கின்றன. மாறவர்மன் குலசேகரன் காலத்தில் அவன் இலங்கைக்குப் படை அனுப்பி மூன்றாம் பராக்கிரம பாகுவை வென்றான். அவன் அனுப்பிய அப்படைக்குத் தலைமைப் பொறுப்பேற்றுச் சென்றவர் முஸ்லீம் இனத்தைச் சார்ந்த தக்கியுத்தீன் அப்துல் ரஹ்மான் என்பவர் ஆவார். இதை செய்தக்காதி வாழ்த்தில் உள்ள

> வாரிதனி லேறியந்த வங்கம் விட்டி லங்கை பிடித்து
> ஆரியனை மிக்காய் அரியா சனத்தில் வைத்தோன்[6]

என்ற அடிகள் (55) வழி அறியலாம். அங்கு ஆட்சியில் அமர்த்தப்பட்ட ஆரிய சக்கரவர்த்தியும் கூட இசுலாமிய இனத்தைச் சார்ந்தவராக இருக்கலாம் என்ற கருத்தும் நிலவியது. இவ்வாறாகப் பாண்டியனது ஆட்சிக் காலத்தில் இசுலாமியரின் வழித் தோன்றல்கள் பலர் பல முக்கிய உயர்பதவிகளில் பங்கு வகித்ததை வரலாற்றுச் சான்றுகள் தெரிவிக்கின்றன.

அரேபியர்களால் ஆரம்பிக்கப்பட்ட இவர்களது வருகை பல்வேறு சமுதாயங்களை உருவாக்க அடிப்படையாக அமைந்தது. வீரபாண்டியனால் தோற்கடிக்கப்பட்ட சுந்தர பாண்டியனுக்குப் பல வகையிலும் முஸ்லீம் இனத்தவரின் உதவிகள் கிடைக்கப்பெற்றன. வீரபாண்டியன் ஜடாவர்ம வீரபாண்டியன் எனும் பெயருடன் கி.பி. 1296லிருந்து சிற்றரசனாக ஆண்டு வந்தான். அவன் சுந்தர பாண்டியனைத் தோற்கடித்தான். சுந்தரபாண்டியன் தோற்கடிக்கப்பட்ட நிலையில் முதலில் அடைக்கலம் புகுந்தது சுல்தான் அலாவுதின் கில்ஜியிடம் ஆகும். சுந்தர பாண்டியனுக்கு உதவிய அலாவுதீன் கில்ஜி, மாலிக் நாஇப் என்பவரின் உதவியுடன் மூன்றாம் வீரவல்லாளனையும் தோற்கடித்தார். தோற்கடித்த இவர் சுந்தர பாண்டியனுக்கு ஆட்சி புரிய மதுரையை வழங்கியதாக வரலாறுகள் அறிவிக்கின்றன. இவை மட்டுமன்றித் தமிழகத்தின் பல பகுதிகளில் உள்நாட்டுக் குழப்பங்களைப் பயன்படுத்திக் கொண்டு ஆட்சியைக் கைப்பற்றிய இசுலாமியரது ஆட்சியானது வேகமாகத் தமிழகத்தில் காலூன்றியது. எனினும் டில்லி சுல்தானியரது ஆட்சியின்கீழ்த் தமிழகம் நேரடியாக வந்தது எனக் கூற முடியாவிட்டாலும் முஸ்லீம்களின் செல்வாக்கு அங்கும் பரவலாகவும் அதிகமாகவும் நிலவியது என்று கூறலாம்.

சுந்தரபாண்டியனுக்கு உதவும் வகையில் மாலிக்காபூர் என்பவர் தென்னிந்தியப் பகுதிகளுக்குப் படையெடுத்துச் சென்று அவர்களிடம் திறை பெற்றுப் பாண்டியருக்கு அளிக்கும்படி ஆணையிடப்பட்டார். சுந்தர பாண்டியனுக்கு உதவ வடக்கிலிருந்து தெற்கே வந்த மாலிக்காபூரின் பங்களிப்பு குறிப்பிடத்தக்க ஒன்றாகும். மாலிக்காபூர் சுந்தர பாண்டியனை மீண்டும் ஆட்சியின் கீழ்க் கொண்டு வந்தார். இவர்களின் ஆட்சியின் போது தமிழகத்தில் முஸ்லீம்களின் செல்வாக்கு அதிகமர்கவே காணப்பட்டது. அலாவுதீன் கில்ஜி தமிழகதில் உள்ள பல பகுதிகளைக் கைப்பற்ற ஆசைப்பட்டு மதுரையையும் கைப்பற்றினான். சுந்தரபாண்டியனின் அதிகாரமும் திருநெல்வேலி வரை பரவியது. இதற்கிடையே கி.பி.1313ல் பாண்டிய நாடு வலுக்குன்ற, சேரமன்னன் இரவிவர்மன் குலசேகரன், பண்டிய நாட்டுக்குப் படைமேற் சென்று

வீரபாண்டியனைத் தோற்கடித்துச் சில காலம் ஆட்சிபுரிந்தான். இவர்களிடம் இருந்து நாட்டைக்கைப்பற்றிய காகதீய அரசன் முப்பிடி நாயக்கன் தன் சேனாதிபதி மூலம் பாண்டிய நாட்டினைப் பெற்றுத் தன்சார்பாக ஆளுநர் ஒருவரை நியமித்து ஆட்சி நடத்திவந்தான்.

தொடர்ந்து கி.பி.1318ல் மீண்டும் படையெடுப்பு நிகழ்ந்தது. பாண்டிய அரசர்களைத் தோற்கடிக்குமாறு குத்புதீன் முபாரக் கில்ஜி மீண்டும் படையெடுத்து வந்தார். 1323இல் நடைபெற்ற படையெடுப்பின் காரணமாகப் பராக்கிரமப் பாண்டியன் தோற்கடிக்கப்பட்டுச் சிறையில் அடைக்கப்பட்டான். இவ்வாறாக, கி.பி. 1333 வரை பாண்டிய நாட்டில் டில்லி ஆட்சி நடைபெற்றது. தொடர்ந்து முஸ்லீம் இனம்சார்ந்த பலர் ஆட்சிப் பொறுப்பில் இருந்தனர். மூன்றாம் வீரபல்லாலனுக்கும் கியாதுத்தீனுக்கும் ஏற்பட்ட போரில் வென்ற கியாதுத்தீன் தொடர்ந்து, கி.பி. 1359இல் பக்ருதீன் முபாரக் ஷா போன்றோர் மதுரைச் சுல்தான்களாக ஆட்சி புரிந்துள்ளனர். இவ்வாறு நடைபெற்ற ஆட்சியில் இறுதியாக வந்தவர் அலாவுதீன் சிக்கந்தர் ஷா என்பவர் ஆவார். அலாவுதீன் சிக்கந்தர்ஷாவுடன் சுல்தான் ஆட்சி நிறைவடைந்தது. தொடர்ந்து விசய நகரப் பேரரசின் ஆட்சி நிலவியது. குமார கம்பணன் என்பார் தன் தந்தையான புக்கனுக்காக முஸ்லீம்களுடன் போராடிச் சுல்தான் ஆட்சியைக் கலைத்து மதுரையைக் கைப்பற்றித் தன் ஆட்சியை நிறுவிச் சுல்தான் ஆட்சிக்கு முற்றுப்புள்ளி வைத்தார். இரண்டாவது விசயநகர ஹரிஹரன், குமார கம்பணன் என இவ்விருவரும் மதுரையில் ஆட்சி புரிந்தனர். விசய நகரப் பேரரசின் ஆட்சி தென்னிந்தியாவில் கி.பி. 1646 வாக்கில் முடிவடைந்தது. மீண்டும் முஸ்லீம்கள் செல்வாக்குப் பெறத் துவங்கினர். அதன் துவக்கமாகச் செஞ்சி அரசைக் கைப்பற்றிய முஸ்லீம் இனத்தவர் தஞ்சையையும் தம் ஆட்சியின்கீழ்க் கொண்டுவந்துவிட்டனர். தொடர்ந்து தங்களுக்கு அவர்கள் வரி செலுத்தும்படிச் செய்தனர்.

விசய நகர ஆட்சி முடிவடைந்த நிலையில் நாயக்கர்களின் ஆட்சி துவங்கியது. அதில் முதலாவதாக ஆட்சிப் பொறுப்பேற்ற வீரப்பநாயக்கர் காலத்தில் முஸ்லீம் மக்களுக்கு நன்கொடைகள்

பல வழங்கப்பட்டன. தொடர்ந்து ஆட்சி புரிந்த திருமலை நாயக்கரின் ஆட்சிக்காலத்திலும் முஸ்லீம்களின் நிலை சிறப்பாகவே காணப்பட்டது. திருமலை நாயக்கரின் ஆட்சிக்காலத்தில் தென்னிந்தியாவைப் பொறுத்த வரையில் இந்துமக்களுக்கும் முஸ்லீம் இனத்தவருக்கும் இடையே வேற்றுமைகள் அகன்று ஒற்றுமை நிலையே காணப்பட்டது. கி.பி. 1674ல் பிஜப்பூர் சுல்தான் தனது சேனாதிபதி வெங்காஜி என்பவன் மூலமாகத் தஞ்சையைக் கைப்பற்றினான். சிவாஜி கி.பி. 1667ல் தன் படையுடன் வந்து செஞ்சியைக் கைப்பற்றினான். பின் தெற்கே படையெடுத்து வந்த அவுரங்கசீப் பீஜப்பூர், கோல்கொண்டா போன்ற கோட்டைகளைக் கைப்பற்றிக் கி.பி. 1707 வரை தன் ஆட்சியை நிறுவினார். கி.பி. 1710 வரை ஆட்சிபுரிந்த விசய ரகுநாதர் தம் ஆட்சிக் காலத்தில் முஸ்லீம்களை ஏற்றத்தாழ்வுகளற்ற நிலையில் நடத்தினார் என்பதும் குறிப்பிடத்தக்கதாகும். இவரது ஆட்சிக் காலத்தில் வள்ளல் செய்கு அப்துல் காதிறு மரைக்காயர் புகழ் பெற்ற வியாபாரியாகத் திகழ்ந்தவர் என்பதும் அவர் அவுரங்கசீப் பேரரசின் ஆட்சிக் காலத்தில் வங்க நாட்டின் ஆளுநராகவும் பணிபுரிந்தார் என்பதும் குறிப்பிடத்தக்க செய்திகள் ஆகும். அதன் பின் வந்த மங்கம்மாள் தனது ஆட்சியை எவ்விதக் குறையுமின்றிச் செம்மையுற நடத்தி வந்தார். மொகலாயர்களின் ஆதிக்கத்துடன் ஒத்துப் போவதாகவே அவரது ஆட்சி அமைந்ததாலும் மொகலாயப் பேரரசு சார்ந்தவர்களுக்குப் பல பரிசில்களை வழங்கி அவர்களது உதவியுடன் தஞ்சையைக் கைப்பற்றினார். முஸ்லீம் இனத்தவர்களை இராணி மங்கம்மாள் நன்முறையில் நடத்தி வந்ததுடன் தம் வழித் தோன்றல்களின் பெயரில் அவர்களுக்கு நன்கொடைகள் வழங்கினார். சில கிராமங்களை அவர்களது நினைவாலயங்கள் எழுப்புவதற்காக வழங்கியுள்ளமையைச் செப்பேடுகள் மற்றும் கல்வெட்டுகள் வழி அறியலாம். இராணி மங்கம்மாளின் மரணத்திற்குப் பின் கி.பி. 1732லிருந்து கி.பி. 1736 வரை மீனாட்சி அம்மாளின் ஆட்சி நிலவியது. திருச்சிராப்பள்ளியிலிருந்து ஆட்சிபுரிந்த இவரது ஆட்சிக் காலத்தில் ஏற்பட்ட குழப்பங்களைப் பயன்படுத்திக் கொண்டு ஆர்க்காட்டு நவாப் தன் ஆட்சியை விரிவுபடுத்திக் கொள்ளும் எண்ணத்தில் சந்தா சாகிப்பை வென்று மதுரையைக்

கைப்பற்றினார். எனினும் நாயக்கர்களது ஆட்சிக் காலத்தில் பள்ளி வாசல்களுக்கும் தனிப்பட்ட முஸ்லீம்களுக்கும் நன்கொடைகள் தாராளமாக வழங்கப்பட்டன.

தொடர்ந்து இந்தியாவில் ஆங்கிலேயர் ஆட்சி ஏற்பட்டது. ஆங்கிலேயரை எதிர்த்துப் புரட்சிப் படைக்குத் தலைமை தாங்கிய முகமது யூசுப்கான் கி.பி. 1764இல் ஆங்கிலேயராலேயே தூக்கிலிடப்பட்டான். ஹைதர் அலியின் ஆட்சியில் திண்டுக்கல்லில் இருந்த நிலையில் ஆங்கிலேயருடன் சமாதான உடன்பாடு ஏற்பட்டது. ஆங்கிலேயர் எட்டு ஆண்டுகள் ஆட்சிபுரிந்தனர். பின் ஆங்கிலேயர் பாண்டி நாட்டின் ஆட்சியை முழுமையாகக் கைப்பற்றினர். கி.பி. 1752ல் பிறந்த திப்புசுல்தான் தன் தகப்பன் ஹைதர் அலிக்குப்பின் ஆட்சி புரியத் துவங்கினார். பிரெஞ்சுக்காரருடன் இணைந்து ஆங்கிலேயரை எதிர்த்தோருள் இவர் முக்கியமானவராகக் கருதப்படுகின்றார். 18ம் நூற்றாண்டின் இந்திய அரசியல் சூழ்நிலை இந்திய வரலாற்றில் மிகப்பெரிய மாறுதலுக்கு அடிகோலி நின்றது. ஹைதர் சாஹிபும், திப்பு சுல்தானும் தென்இந்திய வரலாற்று அரங்கத்தில் சிறப்புப் பெற்று விளங்கிய காலம் 18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியே ஆகும். அவுரங்கசிப்பின் மறைவுக்குப்பின் மொகலாயப் பேரரசின் செல்வாக்கு குறைந்து பலரும் தம் செலவாக்கை நிலை நாட்டத் துவங்கினர். நாதிர்ஷா போன்றோரின் படையெடுப்பு முகலாயப் பேரரசினைச் சிதைத்தது. இதனால் இனவழிச் சக்திகளும் தலையெடுக்கத் துவங்கின. சிவாஜியுடன் தோன்றிய மராட்டியரின் பேரெழுச்சி, பேஷ்வாக்களின் செல்வாக்கு போன்றவை வேகமாக வளர்ந்து கொண்டிருந்தன. ஆனால் அகமத் ஷா அப்தாலியின் படையெடுப்பானது மராட்டியரின் வலிமையைப் பெரிதும் குன்றச் செய்தது. ஹைதர் அலி, தன் ஆட்சித் திறமையால் வலிமை குன்றியிருந்த மைசூர்ப் பகுதியை வளம்பெறச் செய்தார். அலிமுகமது என்பாரின் வம்சத்தில் தோன்றியவர்; மைசூர்ப் படையில் இராணுவ அதிகாரியகப் பணியாற்றி வந்த இவர் விரைவில் ஒரு படையின் தலைவராக ஆனார் என்பதை வரலாறுகள் தெரிவிக்கின்றன. ஹைதர்அலியின் பிறப்பு தென்னிந்திய வரலாற்றில் முக்கியமான ஒன்றாகக்

கருதப்படுகின்றது. சுதேச அரசுகளும் பரங்கிக் கும்பினியும் தன்னிச்சையாகச் செயல்பட முடியாத நிலையை ஏற்படுத்திவிட்டது இவரது ஆட்சியாகும். ஹைதர் அலியின் ஆட்சிச் சிறப்பினால், வீரத்தினால் மைசூர் ஒரு பேரரசாகப் பிரிந்து விரியத் துவங்கியது. 1759ம் ஆண்டு திகழ்ந்த மராட்டியப் போரின் போது ஹைதர் அலியே மைசூரினைக் காத்தார். நிர்வாகம் சீரோடு இருந்தது. மக்கள் வாழ்க்கை அமைதியாகக் காணப்பட்டது. நைஜாமும் ஆங்கிலேயரும் ஹைதரின் ஆட்சியைக் குலைக்க எண்ணினர். 1782ம் ஆண்டு ஹைதர் அலி மறைவுக்குப்பின் திப்பு சுல்தான் போரை முடித்தார். அந்நிலையில் மேற்கே அமெரிக்காவில் காலனியைப் பறிகொடுத்த ஆங்கிலேயர் கிழக்கே இந்தியாவில் தங்களின் காலனியை, அதிகாரத்தை நிறுவ முனைந்து கொண்டிருந்தனர். எனினும் பொழிலூர்ப் போரில் ஆங்கிலேயருக்கும் பேரழிவு ஏற்பட்டது. 1782ஆம் ஆண்டு நடைபெற்ற பரங்கிப்பேட்டைப் போரில் ஆங்கிலேயர் ஹைதர் அலியை வீழ்த்தினர். ஹிஜிரி ஆண்டு 1797 மொகரம் திங்கள் 20ஆம் நாள் தீரர் திப்புசுல்தான் ஆட்சிப்பொறுப்பேற்றார். கன்னட நாட்டின் மேற்குக்கரையில் உள்ள முக்கியத் துறையான மங்களூர் ஆங்கிலேயரின் கையில் இருந்த காலத்தில் திப்பு சுல்தானுக்கு உதவியாக இருந்த ஃபிரெஞ்சுப் படையினர் பின்வாங்கிய நிலையில் தற்காலிகப்போர் நிறுத்த ஒப்பந்தம் ஏற்படுத்தப்பட்டது (மங்களூர் ஒப்பந்தம்). அக்காலக் கட்டத்தில் போர்த்துக் கீசியர்களும் மங்களூர்ப் பகுதியில் குடியேறி அப்பகுதியில் இருந்த குறுநில மன்னர்களைக் கொண்டு தம் வணிகத்துடன் இடையே கிறித்துவ மதத்தையும் பரப்பத்துவங்கினர்.

தொடர்ந்து திப்புசுல்தான் அதோனி, துங்கபத்திரா சாவனூர் போன்ற பகுதிகளையும் ஆங்கிலேயரிடமிருந்து கைப்பற்றினார். கி.பி. 1790 களுக்குப் பின் ஆங்கிலேயர் பாண்டி நாட்டின் ஆட்சியை முழுவதுமாகக் கைப்பற்றினார். அந்நாட்டு வருவாயை முழுவதுமாக எடுத்துக் கொண்டனர். ஆங்கிலேயர் தம் ஆட்சியைத் தென்னிந்தியாவில் வலுப்பெறச்செய்து பின் முழு இந்தியாவையும் தம் ஆட்சிக்குக் கொண்டு வந்தனர்.

இசுலாமியருக்கும் இலங்கைக்கும் உள்ள தொடர்புகள் வரலாற்றுச் சான்றுகள் வழி அறியப்படுகின்றன. முஸ்லீம்

இனத்தவருக்கும் இலங்கைக்கும் வாணிபரீதியாகவும் பிற காரணங்களினாலும் தொடர்பு இருந்து வந்திருக்கின்றது. தமிழ் நாட்டில் இசுலாமியரது வருகை போலவே இலங்கையிலும் அவர்களது வருகை குறிப்பிடத்தக்க ஒன்றாக அமைந்துள்ளது. இறைவனாகிய ஆதம் நபி அவர்களின் பாதம் பொதிந்துள்ள மலையாக மக்களால் கருதப்பட்டுத் தொடர்ந்து வழிபடப்பட்டு வந்த பாவா ஆதமலை என்ற மலையைத் தரிசிப்பதற்காக முஸ்லீம் இனத்தவர்கள் வருகை புரிந்ததாகக் கூறப்படுகின்றது. இவ்வாறு வியாபார நோக்கத்திற்காகவும், இறை வழிபாட்டிற்காகவும் முஸ்லீம் இனத்தவர்களின் இலங்கை வருகை அரபியர்களைத் தம் மூதாதையர்களாகக் குறிப்பிடுமளவிற்கு உயர்ந்திருக்கின்றது. இவர்கள் முதன் முதலில் குடியேறிய பர்பரீன் துறைமுகத்திற்கும் இலங்கையின் வேர்விலைத் துறைமுகத்திற்கும் வாணிபரீதியாக நெருங்கிய தொடர்பு இருந்ததை இப்னுபத்தூதா எனும் பயணி தம் இலங்கைப் பயணத்தைப் பற்றிய குறிப்பில் குறிப்பிட்டுள்ளார்.

## இசுலாமும் தமிழ் இலக்கியமும்

16ம் நூற்றாண்டில் தமிழ்ப்புலவர்களின் வாழ்க்கைப் போக்கும் சிந்தனை ஓட்டமும் மாறுபாடுகளைக் காணநேர்ந்த நிலையில் எழுத்தாணி ஏந்தி இலக்கியம் படைத்தனர் இசுலாமியத் தமிழ்ப்புலவர்கள். பாலுணர்வை மையமாகக் கொண்டு பாடாது வாழ்வியல் உயர் நெறிகளைப் போற்றும் ஒழுக்கம் மற்றும் சமயம் சார்ந்த இலக்கியங்களாகவே அவை மலரத் துவங்கின. தமிழ் மொழியில் சங்க காலம் தொட்டு வழிவழியாக வழங்கி வந்த இலக்கிய வகைகள் அனைத்திலும் தம் இலக்கியங்களைப் படைத்துள்ளனர். இசுலாமியர் பதினாறாம் நூற்றாண்டில் வழக்கிலிருந்ததாகக் கூறப்படும் பிரபந்த வகைகளிலும் தம் பங்களிப்பை அளித்துள்ளனர் இசுலாமியத் தமிழ்ப் புலவர்கள். தமிழுக்குரிய எல்லா வகையான இலக்கிய வடிவங்களிலும் பாடல்களைப் புனைந்து தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு வித்திட்டனர். வழக்கிலிருந்த வடிவங்களில் மட்டும் இலக்கியம் படைப்பது என்றில்லாமல் புதிய புதிய இலக்கிய வடிவங்களைத் தமிழுக்குக் கொண்டு வந்து சேர்த்த பெருமை இசுலாமியத் தமிழ்ப் புலவர்களுக்கு உண்டு. அரபு,

பாரசீகம் போன்ற மொழிகளிலிருந்தும் இலக்கிய வகைகளைக் கொண்டு வந்து தமிழுக்குப் புதுப் பொலிவையும் புகழையும் சேர்த்தனர். நாமா என்ற இலக்கிய வடிவம் பாரசீக மொழியில் இருந்து தமிழ் இலக்கியத்துறையை அடைந்த புதுவகை இலக்கிய வடிவம் ஆகும். அது போன்றே மசலா, கிஃஸ்ஸா, முனாஜத்து ஆகியவை அரபு மொழியில் இருந்து தமிழுக்கு வந்துசேர்ந்த இலக்கிய வடிவங்களாகும். இவை தவிர நொண்டி நாடகம், திருமண வாழ்த்து, படைப்போர் போன்ற இலக்கிய வடிவங்களும் குறிப்பிடத்தக்கவை ஆகும். தலைசிறந்த காப்பியங்களையும், ஞானநூல்களையும், சிற்றிலக்கியங்களையும் ஏராளமாக எழுதித் தமிழ் இலக்கிய மறுமலர்ச்சிக்கு வித்திட்டனர்.

## காலம்

இலக்கிய வரலாற்றாசிரியர்கள் பல்லவர்காலம், சோழர்காலம், நாயக்கர்காலம் என்று காலவாரியாக வரலாறு எழுதுவதைப் போன்று 16ஆம் நூற்றாண்டிற்கும், 19ஆம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலத்தை இசுலாமியர் காலம் என்று குறிப்பிடுவது பொருத்தமுடையதாகத் தோன்றும். இசுலாமியப் பண்பாடு, கோட்பாடு, வரலாறு ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு தமிழில் தோன்றியுள்ள இவ்விலக்கியங்கள் தமிழ் முஸ்லீம்களின் பண்பாட்டுக் கருவூலமாகவும், வரலாற்றுக் களஞ்சியங்களாகவும் திகழ்கின்றன. அன்றியும் அவை அண்ணல் நபி அவர்களது வாழ்வும் வாக்கும், நபிமார்கள், வலிமார்கள், இஸ்லாமியப் பெரியோர்கள் போன்றோரது வாழ்க்கை வரலாறு ஆகியவற்றை அறிவதற்குத் துணைபுரியும் இலக்கியப் பேழைகளாகவும் ஒளிவீசுகின்றன.

இசுலாமியத் தமிழ் இலக்கியங்களில் ஏறத்தாழ மூன்றில் ஒரு பகுதி எனும் அளவிற்கும் அதிகமாக அமைபவை இசுலாமியரது சிற்றிலக்கிய வகைகளேயாகும். இசுலாமியத் தமிழ் இலக்கிய வரலாற்றின் தொடக்கமே ஒரு சிற்றிலக்கியத்தின் மூலம் தான் நிகழ்ந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கதாகும். கி.பி. 12ம் நூற்றாண்டில் எழுந்ததாகக் கருதப்படும் "பல்சந்தமாலை" எனும் இலக்கியமே முதன் முதலில் கிடைத்துள்ள இசுலாமியத் தமிழ்

இலக்கியம் ஆகும். களவியற் காரிகைப் பதிப்பில் வையாபுரிப் பிள்ளை அவர்களால் இப்பாடல்கள் மேற்கோள்களாகக் காட்டப்பட்டுள்ளன. இதிலிருந்து எட்டுப் பாடல்கள் மட்டுமே கிடைக்கப்பெற்றுள்ளன. வின்னன் என்பவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டது இச்சிற்றிலக்கியம். இவ்வாறாக இசுலாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்களின் துவக்கமானது கி.பி. 12ம் நூற்றாண்டிலேயே நிகழ்ந்து விட்டதை அறியலாம். இதன் வளர்ச்சிப் போக்கில் காலத்தால் இரண்டாவதாகக் கருதப்படும் மற்றுமொரு இசுலாமிய இலக்கியம் கி.பி. 1572ம் ஆண்டு வண்ணப் பரிமளப் புலவரால் இயற்றப்பட்ட "ஆயிர மசாலா" என்ற இலக்கியம் ஆகும். தொடர்ந்து கி.பி. 20ம் நூற்றாண்டு வரையிலான ஏழு நூற்றாண்டுக் கால எல்லைப் பரப்பினை இசுலாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் பெற்றுத் திகழ்க்கின்றன. இந்த ஏழு நூற்றாண்டுகளின் இடைவெளியில் ஏறத்தாழ ஓராயிரத்துக்கும் மேற்பட்ட இசுலாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் தோன்றியுள்ளன. இசுலாமியத் தமிழ்ப் புலவர்கள் சிற்றிலக்கியங்களைப் படைத்ததில் தனியிடம் பெற்று விளங்குகின்றனர். இசுலாமியத் தமிழ்ப்புலவர்கள் தம் கொள்கைகளைக் கருவாகக் கொண்டும் தமிழ் இலக்கிய மரபைப் பின்பற்றியுமே சிற்றிலக்கியங்களைப் படைத்துள்ளனர்.

இசுலாமிய சமயத்தின் அடிப்படைக் கருத்துக்களையும் நெறிகளையும், வரலாற்று நிகழ்ச்சிகளையும், இறைத்தூதர்கள், இறைத்தலங்கள், மற்றும் அவர்களது சமய நிகழ்வுகளின் போது கடைப்பிடிக்க வேண்டிய ஒழுகலாறுகள் போன்றவற்றைப் பாடுபொருள்களாகக் கொண்டும் இவர்தம் இலக்கியங்கள் அமைகின்றன.

இவற்றுள் கிஸ்ஸா, மசாலா, முனாஜத்து போன்ற இலக்கிய வகைகள் இசுலாம் சமயத்துக்கே உரிய சிறப்பிலக்கிய வகைகளாகும். முஸ்லீம் அல்லாத பிறரால் இவை இயற்றப்படவில்லை என்பது இச்சிற்றிலக்கியங்களின் சிறப்பை உணர்த்தும். அந்தாதி, அம்மானை, ஆற்றுப்படை, பிள்ளைத்தமிழ், புராணம், கலம்பகம் போன்ற பல்வகைப்பட்ட பழைய இலக்கிய மரபைப் பின்பற்றி முஸ்லீம் புலவர்கள் எழுதியுள்ள சிற்றிலக்கியங்களை இசுலாமியர் வழங்கிய

பொதுவான இலக்கியங்கள் எனலாம். பெரும்பாலும் சமயநெறி சார்ந்தவையாக உள்ள இவர்களது இலக்கியங்கள் மனித வாழ்வை மேம்படுத்துவதையே இலட்சியமாகக் கொண்டுள்ளன. இசுலாமிய நெறி முறைகளைப் பாமர மக்களும் எளிதில் விளங்கிக் கொள்ளும்படி அம்மதக் கோட்பாடுகளை விளக்கும், வகையிலேயே அமைந்துள்ளன. இலக்கியங்களின் பாடுபொருள் அனைத்தும் இசுலாமியத்தின் நெறியாகவும், இசுலாமியப் பெரியார் தம் வாழ்வு வழி, சிறக்கும் மறை நெறியாகவுமே அமைந்துள்ளன.

## இசுலாமியத் தமிழ் இலக்கியம் தோன்றுவதற்கான காரணம்

தமிழில் இசுலாமிய இலக்கியங்கள் அதிகம் தோன்றுவதற்கான அடிப்படைக் காரணங்கள் அல்லது மூலங்கள் என்று பார்க்கும் பொழுது 1947 வாக்கிலேயே சிறுபான்மையினரை ஆதரிக்கும் போக்குத் தமிழகத்தில் வேரூன்றத் தொடங்கியது ஒரு முக்கியமான காரணமாகும். குஜராத் போன்ற நாடுகளில் சிறுபான்மையினரை எதிர்க்கும் போக்குதான் அதிகம் காணப்படுகின்றது. ஆனால் சுதந்திர காலக்கட்டத்திலிருந்தே பார்ப்பனீய எதிர்ப்பு போன்றவை தமிழகத்தில் சிறுபான்மையினருக்கு ஆதரவு தெரிவித்தன. அங்கீகரிக்கப்பட்ட இந்தி, சமஸ்கிருத பாரதமொழிகளே நிலைபெற்ற மொழிகளாகத் திகழ்ந்த நிலையில் "உருதுப்போர்" என்பது பெரும் மாற்றத்தை முன்வைத்தது. மேற்கூறப்பட்ட மொழிகள் நிலைபெற்ற பொழுது உருது (அரபு) போன்ற மொழியானது அந்நியப்பட்ட மொழியாக ஆனது. மொழி அந்நியப்படல் அதன் மூலமாக அந்நியப் படுத்தப்பட்ட மொழியில் இலக்கியங்கள் எழுதல் என்பது நிகழ்ந்தன. இந்தி, சமஸ்கிருத மொழிகள் செல்வாக்குப் பெற்ற நிலையில் தனக்கான தளத்தை நிர்ணயித்துக் கொள்ள உருது மொழியிலும் இலக்கியங்கள் தோன்றின. தமிழில் உள்ளதை உருதுமொழியில் எழுதுதல், உருது மொழியில் உள்ளவற்றைத் தமிழுக்குக் கொண்டு வருதல் போன்றவை நிகழ்ந்தன. இசுலாமியர் இலக்கியங்கள் காலத்தால் பிற்பட்டுத் தோன்றினும், நாடகம், காப்பியம் தாலாட்டு, கும்மி, வெண்பா, மஞ்சரி, வண்ணம்,

பாவை, மாலை, பாட்டு, தூது எனப் பல வடிவங்களில் சிறப்புப் பெற்றுத் திகழ்கின்றன. பெண்பாற் புலவர்களில், கீழக்கரை செய்யது ஆசியா, மைமூன், இளையான்குடி கச்சி பிள்ளையம்மாள், தென்காசி இறசூல் பீவி, ஹக்மா, கதீஜா போன்றோர் குறிப்பிடத் தக்கவர்கள். பிறமொழிகளிலிருந்து தமிழுக்கு வந்தவற்றுள் உரைநடையில் அமைந்த ஒரு சிறந்த இலக்கிய வகை தான் மசலா. பாரசீக மொழியிலிருந்து தமிழுக்கு வந்த நாமா என்னும் இலக்கிய வகை இறைத் தூதர்களின் வரலாற்றைக் கூறும் இலக்கிய வகையாகும்.

இசுலாமிய வரலாற்றுத் தொடக்கத்திலிருந்து அச்சமயத்தினர் தம் மார்க்கக் கொள்கைகளை இவ்வுலகில் நிலை நிறுத்துவதற்காக மேற்கொண்ட போர் பற்றிய செய்திகளையே படைப்போர் எனும் இலக்கிய வகை குறிக்கின்றது. முதல் இசுலாமியத் தமிழ்க் காப்பியம் கனகாபிஷேக மாலையாகும். இது அரபு நகர்களைக் களமாகக் கொண்டு 2792 பாடல்களைப் பெற்று 35 படலங்களில் அமைந்து சிறப்புப் பெற்றதாக விளங்கி வருகின்றது.

அக்பரது ஆட்சி முறைகளையும் அவர்காலத்து அரசியல் அமைப்பு நிலைகளையும் அறிந்து கொள்ள அபுல்பாஸலின் 'அக்பர் நாமா', உறுதுணை புரிவதாக விளங்கும் நூலாகும். வாழ்க்கை விளக்க நூல்கள், இசுலாமியரது ஆட்சிக்காலத்தில் நடந்த பல்வேறு நிகழ்வுகளை எடுத்துரைக்கின்றன. அவர்களது வாழ்க்கைக் குறிப்புகள், வாழ்க்கையில் நடைபெற்ற பல்வேறு நிகழ்வுகள் போன்றவற்றை விளக்குகின்றன.

இவர்கள் அறிமுகப்படுத்திய புத்திலக்கிய வகையான படைப்போர் தமிழ்ச் சிற்றிலக்கியமான பரணிக்கு இணையாகக் கருதப்படுகின்றது. வீரப்பாடல்களைப் பரணி வடிவில் பாடாது படைப்போராக இசுலாமியப் புலவர்கள் புனைந்து பாடியுள்ளனர். அவர்தம் கொள்கைகள் கோட்பாடுகளில் இருந்து மாறா வண்ணம் பண்டைய வீரப் பாடல்களைப் படைக்க விரும்பிய இவர்கள் பரணியின் கூறுபாடுகளை அவ்வாறே கொள்ளாமல் அரபி இலக்கிய நெறியைப் பின்பற்றிப் படைப்போர் எனும் புதிய இலக்கிய வகையை அறிமுகம் செய்தனர். இதில் பரணியின் முழுக் கூறுகளைப் பாடாது "போர்

பாடியது" என்ற ஒரு பகுதியை மட்டும் எடுத்துக் கொண்டு தனி ஒரு சிற்றிலக்கிய வகையாக அறிமுகம் செய்துள்ளனர். தீய சக்திகள் வீழ்ச்சி அடைவதையும் தூய சக்திகள் வெற்றி பெறுவதையுமே கருவாகக் கொண்ட படைப்போர் இலக்கியங்கள் தமிழில் எழுதுவதற்கு உறுதுணையாக அமைந்த நூல் 'கிதாபுல் மகாஸி' எனும் அரபி மொழி நூலாகும்.

பிற சமயத்தினரைப் போலவே தமிழையும் அதன்கண் உள்ள இலக்கியங்களையும் வழியாகக் கொண்டு இசுலாமியர் தம் தமிழ் இலக்கியப் பணியைச் செய்துள்ளனர். இவர்கள் படைத்த இலக்கியங்கள் தமிழ் இலக்கிய மரபினைப் போற்றியதுடன் அதாவது தமிழ் இலக்கிய மரபினின்றும் வழுவாது, அதே சமயம் தம் சமயக் கருத்துக்களைத் தெற்றென முன்வைக்கக் கூடியனவாகவும் அமைந்திருந்தன. தமிழில் சித்தர்கள்தம் இலக்கியங்கள் பெறும் இடத்தை இசுலாமிய ஞானச் செல்வர்களான சூஃபிகள் பெறுகின்றனர். தமிழ், இசுலாம் ஆகிய இரண்டுக்கிடையே தம் பாடல்கள் வழி சமரசத்தை உருவாக்க முனைந்தவர் மஸ்தான் சாகிபு அவர்கள். இன்றும் இவ்வரிசையில் குணங்குடியார், பீர்முகமதுஅப்பா போன்றோரின் பங்களிப்பும் போற்றுதலுக்குரியதாக அமைந்துள்ளது. தமிழ் மொழியின் மறை ஞானத் தத்துவங்களை இவர்களது ஞான நூல்களில் சில இடங்களில் காணமுடிகின்றது. இவை தவிரத் தமிழ் மொழிக்குப் பெருமை சேர்க்கும் வகையில் (திருப்புகழ்) சொற்சுவையும், சந்தச் சுவையையும் உடைய திருப்புகழ் போன்ற நூல்களையும் படைத்துள்ளார்கள். தமிழ்ப்புலவர்களை ஆதரித்துத் தமிழ் வளர்த்த இசுலாமியர் பலரும் இருந்துள்ளனர்.

இராசநாயகம் (காப்பியம்), சீறாப்புராணம், திருமணக்காட்சி என இவர்களின் இலக்கியப் பணி நீளுகின்றது. இவற்றில் கி.பி. 1807 முதல் கி.பி. 1821 வரை உள்ள குறுகிய காலக்கட்டத்தில் எண்ணிக்கையில் அதிக அளவில் தோன்றியவை காப்பியங்களே ஆகும். இவற்றுள் வரலாற்றுக் காப்பியங்கள் அதிகம் அடங்கும். திருமணக்காட்சி, காப்பிய இலக்கணங்கள் அமையப் பெற்று விளங்கும் ஒருவகை புதிய இலக்கிய வடிவம் ஆகும். "முனிறுதல் ஹக்கு" என்னும் அரபு மொழியில் அமைந்த இலக்கிய நூலே இவ்விலக்கிய வகை தோன்றுவதற்கு ஆதாரமாக அமைந்ததாகக் கூறப்படுகின்றது.

பல்சந்த மாலை என்ற பழமையான நூலில் தற்போது சில பாடல்களே காணக்கிடைத்துள்ளன. பழங்காலத்தில் தோன்றிய அகப்பொருள் பற்றிய நூலுக்கு எழுதப்பட்ட உரையிலே இப்பாடல்கள் உதாரணச் செய்யுள்களாகத் தரப்பட்டுள்ளன. ஆற்றான் கிளத்தல், இரந்து குறையிற்றவிடத்துக் குறையுறுதல், மடலேறுதலாக அச்சுறுத்தல், ஆறுபார்த்துற்ற அச்சக்கிளவி, பதிரவுரைத்தல், தலைமகளது ஆற்றாமை கண்டு தோழி உரைத்தது என அகப்பொருள் இலக்கியத் துறைகளைக் கொண்டு விளங்குகின்றது.

இத்தகு சிறப்பு மிகுந்த பல்சந்த மாலை எனும் இலக்கியமானது 12ம் நூற்றாண்டளவில் தோன்றிய நூலாகக் கருதப்படுகின்றது. முதன் முதலில் 12ம் நூற்றாண்டில் தமிழகத்திற்கு வருகை புரிந்து, பின் பாண்டியர் போன்ற தமிழக மன்னர்களுடன் தொடர்பினை வலுப்படுத்திக் கொண்ட சையத் இப்ராஹிம் என்பவரையே பாட்டுடைத் தலைவராகக் கொண்டு இவ்விலக்கியம் பாடப்பட்டுள்ளது. முதன் முதலில் தமிழகத்துடன் இசுலாமியர் தொடர்பு இவரால் ஏற்பட்டதே ஆகும். பொருளதிகாரத்தில் கூறப்பட்டுள்ள துறைகள் பல்சந்த மாலையில் பயின்று வந்துள்ளன. அவைமட்டுமன்றி, பாண்டிக்கோவை, வங்கக் கோவை, தில்லையந்தாதி, கோவில் அந்தாதி, தமிழ் நெறிவிளக்கம், இன்னிசை மாலை போன்றவற்றின் செய்யுட்களும், களவியற் காரிகையில் உள்ள மேற்கோள் பாடல்களால் புலனாகின்றன. தொடர்ந்து மிகுறாசு மாலை, திருநெறி நீதம், தீன் விளக்கம், கனகாபிஷேகமாலை, படைப்போர் இலக்கியங்கள், சீறாப்புராணம், பள்ளு இலக்கிய வகைகள் என இவர்களது இலக்கியப் பணி நீளுகின்றது. இசுலாமிய ஞானச் சித்தர்கள் எனப்படும் சூஃபிகள் தமிழ் மக்களுக்காகப் பாடியதால், தமிழ்ச் சித்தர்கள் பயன்படுத்திய சக்தி, சிவன், பரமன் என்ற சொற்களாலேயே இறைவனைப் பாடியுள்ளார்கள்.

இசுலாமியரது காப்பியங்களில் மிகவும் புகழ் பெற்று விளங்கும் இனிக்கும் ராசநாயகம் என்ற காப்பியம் சுலைமான் நபியைப் பற்றிய காப்பியம் ஆகும் 46 படலங்களும் 2240 விருத்தங்களும் உடைய காப்பியமான இது மதுரை மீசல்

வண்ணக் களஞ்சியம் புலவர் அவர்களால் ஹிஜ்ரி (1223) ஆம் ஆண்டு அரங்கேற்றப்பட்டது. பழந்தமிழ் இலக்கியத்தில் பயின்று வந்துள்ள பல அரிய சொற்கள் இக்காப்பியத்தில் பயின்றுள்ளன. சுலைமான் நபி பற்றிப் பாடப்பெற்ற காப்பியமாதலால் தவிர்க்க முடியதபடி பாரசீகச் சொற்களும், அரபுச் சொற்களும் பரவலாகக் காணப்படுகின்றன. மேலும் இந்தியப் புராணங்களில் இருந்து பல சொற்கள் இக்காப்பியத்தில் கையாளப்பட்டுள்ளன. இந்துக்களின் பெண் தெய்வ வழிபாட்டில் முக்கியத்துவம் பெறும் காளி எனும் சொல் இக்காப்பியத்துள் அவ்வாறே பயின்று வந்துள்ளது. சான்று:

> கரிய மேனியும் . . . .
> அனுதினம் காளிக்கு உரிய ஏவல் செய்து[7] (15:3)

இக்காப்பியம் பல்வேறு இறைக் கருத்துக்களைப் பரவலாகக் கூறியுள்ளது. இறைவன் எத்தகையவன், அவனது தூதர்களின் பண்புகள், இறைவன் தன்னையும், தன்னுடைய நெறிகளையும் சக மக்களிடையே பரப்பவே தூதர்களைப் படைத்துள்ளான் என்பதையும் அவரது கட்டளைகள் இவை இவை என்பதையும் எடுத்துக் கூறுகின்றது. இவ்வாறாக நாளடைவில் அரபுத் தமிழில் எழுதப்பட்ட இசுலாமிய நூல்கள் தமிழ் எழுத்துக்களிலும் எழுதப்பட்டன. இந்தியாவிற்குள் இவர்களது வருகை மாபெரும் மாற்றங்களை ஏற்படுத்தியது. அவை அரசியல் சமூக மாற்றங்களாக மட்டுமன்றிக் கல்விநிலை என அனைத்திலும் மாற்றங்களை ஏற்படுத்தின. பாரசீக மொழி கட்டாயமாக்கப் பட்டது. அரசாங்க அலுவலர்கள் பாரசீக மொழியையே பயன்படுத்த வேண்டி இருந்தது. கடந்த பத்து நூற்றாண்டுகளுக்குத் தமிழ் நாட்டுக் கலை, கலாச்சரம், மொழி, சமயம் முதலிய பல துறைகளிலும் இசுலாமிய அடிப்படையான முஸ்லீம்களின் செல்வாக்குப் பிரதிபலித்துக்கொண்டுதான் உள்ளது. இன்று துளுக்கர், இராவுத்தர் என்றெல்லாம் அழைக்கப்படும் இவர்கள் பற்றிய கருத்துக்கள் இலக்கியங்களில் அன்றே பயின்று வந்துள்ளன.

தமிழ் இலக்கியங்களில் அருணகிரிநாதரது கந்தர் அலங்காரம், கந்தர் கலிவெண்பா போன்றவற்றில் முருகப்பெருமானைப் போற்றும் போது,

*மாமயி லேறும், ராவுத்தனே*

*சூர்க் கொன்ற ராவுத்தனே*[8]

என்பது போன்றவை தமிழ்ச் சொல்லாகவே பயின்று வந்துள்ளன. ஜெயங்கொண்டார் தமது கலிங்கங்கத்துப்பரணியில்,

*வந்தவர் மத்திகர் மாருவர் மாகதர் மச்சர்*
*மிலைச்சர்களே*

*சூத்திரர் குத்தர் இடக்கர் பிடக்கர் துருக்கர் குருக்கர்*[9]

எனத் "துருக்கர்" என்ற சொல்லால் இவர்கள் குறிப்பிடப்படுகின்றனர்.

இவைமட்டுமின்றிக் கல்வெட்டுகளிலும் துலுக்கர் என்ற சொல் பயின்று வந்துள்ளது. இவ்வாறாகத் தமிழ் இலக்கிய மேன்மைக்கு வலுச்சேர்க்கும் வகையில் முஸ்லீம் பெருமக்கள் காலத்துக்குக் காலம் தோன்றியுள்ளனர். "சாமந்தர்" எனும் சிற்றரசர்களாக வாழ்ந்துள்ளனர். தமிழ்ப் புலவர்களைப் போற்றிப் பரிசில்கள் பல வழங்கி வள்ளல்களாகவும் விளங்கியுள்ளனர்.

## இசுலாமும் இலக்கியங்களும்

இசுலாமிய எழுத்தாளர்களைத் தனி மனிதர்களாக எடுத்துக் கொண்டு சிந்தித்தோமானால் ஒவ்வொரு படைப்பாளனின் தனித்தன்மை அல்லது ஆளுமையில் ஏற்படும் ஒத்திசைவுகள் அதிகமாகவும் முரண்பாடுகளைத் தவிர்த்தவர்களாகவுமே இருக்கின்றனர். ஆனால் எழுத்து சமுதாய வளர்ச்சியுடன் இணையும் போதும், முரண்பாடுகளை முன்வைக்கின்ற போதும்தான் சமுதாயப் பிரச்சினைகளைப் பேசக்கூடிய கருவியாகப் பரிணமிக்கும் வாய்ப்பைப் பெறுகின்றது. இதை ஆழ்ந்து நோக்கும் போது இசுலாமிய எழுத்துக்கள் பன்முகப் பரிமாணங்களைப் பெறத் தவறியதன் காரணங்களை எளிதாக உணர முடியும். இசுலாமியர் இந்தியாவில் அரசியல் மற்றும் நிறுவனம் சார் சக்திகளாகச் செயல்பட முடிந்ததன் பரிமாணங்களாகத்தான் இசுலாமிய இலக்கிய வெளிப்பாடுகள் வளர்ந்து வந்துள்ளன ஆனால்

அவற்றை மார்க்சியம் போன்ற அறிவார்ந்த அறிவியல் நிலைக்குத் தொடக்க காலத்திலிருந்தே உயர்த்த முடியாமல் போனதற்கு சமயம் சார்ந்த விசயங்களும், புலம் பெயர்ந்து வந்து இந்தியாவில் காலூன்றியதனால் இந்தியக் கலாச்சாரம், பண்பாடு இதரப் பிற நம்பிக்கைகளில் ஆழ்ந்த பிணைப்பில்லாமல் மொழியை மட்டும் உள்வாங்கிக் கொண்டு வெளிப்படுத்தப் பட்டவைகளாக இருந்தன.

இசுலாமிய எழுத்தாளர்கள் தமிழ் இலக்கியங்களைப் பார்த்து அவற்றைப் போல் இலக்கியங்கள் படைக்க முற்பட்டிருந்தாலும் தங்களுடைய தமிழ் ஈடுபாட்டைக் காட்ட வேண்டும் என்பதில்லாமல் தமிழில், தமிழகத்தில் தங்களைப் பதிவு செய்து கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தினையே பிரகடனம் செய்துள்ளனர். ஏறக்குறைய 12 முதல் 16 வரை ஆட்சி செலுத்திய இசுலாமியப் புலவர்கள் அனைவருக்கும் படைப்பாக்கங்களில் இசுலாமியத்தைத் தவிர்த்து வேறெதையும் பேச முடியாமல் போனதற்குக் காரணம் என்ன? இசுலாம் என்பது கிறித்தவம் போன்ற, இந்துத்துவம் போன்ற ஒரு மதம். மனிதனுக்காக மனிதனால் படைக்கப்பட்ட ஒரு சார்புக் கொள்கை. இதனைப் படைப்பிலக்கியங்களிலிருந்து வேறுபடுத்தி இசுலாமிய எழுத்தாளர்கள் பார்க்கவில்லை. மலையாளத்தில் வைக்கம் முகம்மது பஷீர் படைத்தது போன்று உலகு தழுவிய மனித உணர்வுகளை, உலகின் ஒரு கூறாக இருக்கக் கூடிய தனிமனிதன் உள்வாங்கி உணரும் இன்ப துன்பங்களை மனக்கண் கொண்டு இசுலாமியத் தமிழ் எழுத்தாளர்கள் பார்க்கவில்லை.

மனிதனின் கருத்தாக்கமும், மதிப்பீடுகளும் சமூகத்தால் தயாரித்தளிக்கப்படுகின்றதாகும். மனிதனுக்கு மனிதன் கருத்தாக்கங்களும் அவை சார்ந்த படைப்பாக்கங்களும் வேறுபடுகின்றன. இதனால் அவை ஏற்படுத்தும் தாக்கங்களும் பின்விளைவுகளும் தொடர் வினைகளுக்கு உட்படுத்தப் படுகின்றன. தொடர் வினைகளின் நீட்சியாகத்தான் ஷேக்ஸ்பியரின் படைப்பாக்கங்கள் எல்லாக் காலத்திலும் பொருண்மை மதிப்பீடுகளைப் பெற்றுப் பொருந்தி வரக்கூடிய செவ்வியல் தன்மையுடனான இலக்கியங்களாக வாழ்கின்றன

இசுலாமிய இலக்கியங்கள் கடவுட்கொள்கையைப் பரப்புவதை மட்டும் கருப்பொருளாக் கொண்டு எழுந்த காரணத்தினால் அதன் எல்லைகளைச் சுருக்கிக் கொண்டது. எழுத்தாளர்களும் ஒரு தனிமனிதனால் சமூகத்திற்குப் படைத்தளிக்கப்படுகின்ற படைப்பாக்கம் என்ற நிலைக்குச் செல்லாமல் இசுலாமிய மதத்திற்காக இசுலாம் மதத்தைச் சார்ந்த படைப்பாளன் இசுலாமிய மக்களைக் கருத்தில் கொண்டும், தன் சமயத்தைப் பரப்புவதை நோக்கமாகக் கொண்டும் படைத்தளிக்கப்பட்ட இலக்கியங்கள் என்ற நிலையை அடைகின்றன.

இசுலாம் இனத்தவர் இந்தியாவில், தமிழகத்தில் வாழ்கின்றதனால் அவர்களோடு உறவாடுகின்ற பிறமதத்தைச் சார்ந்த மனிதர்களின் இடைப்படல்கள் அவர்களை எந்த விதத்திலும் பாதிக்கவில்லை என்பதை அவர்களின் இலக்கியங்கள் காட்டுகின்றன. மேலும் இசுலாமிய மக்களில் சிறுவர்கள், அரவாணிகள், பெண்கள் போன்ற இனத்தவரைப் பற்றிய எந்தக் குறிப்புக்களும் இலக்கியங்களில் விரிவாகப் பேசுவனவாக இல்லை.

அரசியல் அமைப்பும், அரசாங்க முறையும் அதன் பணிகளும் அப்பணிகளின் நோக்கமும் பெருமளவில் ஒரு நாட்டின் புவியியல் கூறுகளைப் பொறுத்தும், அங்கு வாழும் மக்களுடைய எண்ணங்கள், பண்பாடு, அறிவுத்திறன் ஆகியவற்றைப் பொறுத்துமே அமையும். வட இந்தியாவில் புவியியல் கூறுகளின் விளக்கமும், மக்கள் மீதும், அரசாங்க அமைப்பு மீதும் அவைகளின் செல்வாக்கும் பெரும்பாலானதாகவே உள்ளன. முகமதியர்களின் செல்வாக்கு பேரரசின் அரசாங்கத்தை அமைப்பதில் காட்டிய கவனத்திலும் முற்கால இந்தியாவுடனான தொடர்பை அவர்கள் நீட்டித்து வந்துள்ளதிலிருந்தும் உணரமுடிகின்றது.

தமிழில் "நாமா" இலக்கியங்கள் நபிகள் நாயகத்தின் புகழைப் பாடுகின்ற இலக்கியமாக இருக்கின்றது. ஆனால் அக்பரது ஆட்சிமுறை அமைப்புக்களை அறிந்து கொள்வதற்கு உதவியாக உள்ளது 'அக்பர் நாமா' என்ற இலக்கியமாகும். இது

அபுல்பாஸல் என்பவரால் எழுதப்பட்டிருக்கின்றது. இதே போன்று 'பாபர் நாமா' பாபரால் எழுதப்பட்டுள்ளது. குல்பதான் பானுபேகம் என்பவர் 'ஹுமாயூன் நாமா'வையும், முகமத்கான் 'இக்பால் நாமா' (ஜஹாங்கீர் நாமா) வையும், லாஹூப் என்பவர் 'பாதுஷ நாமா'வையும், நிஷாம் உல்முல்க் 'சியாசத் நாமாவையும்' எழுதியுள்ளனர். இந்த நாமாக்கள் அந்தந்த மன்னர்களின் ஆட்சிக் காலத்தைப் பற்றி அறிந்துகொள்வதற்கான அடிப்படை ஆதாரங்களாக இருக்கின்றன.

அக்பர் அரசமைப்பைச் சீர்திருத்தம் செய்ய மேற்கொண்ட பரிசோதனை முயற்சிகள் விளக்கமாக இடம்பெற்றுள்ளன. மேலும் அது தொடர்பற்ற செய்திகளின் தொகுப்பாகவும் இருப்பதாகக் கூறப்படுகின்றது. ஆட்சி அமைப்புக்களை ஏற்படுத்துவதற்குக் காரணமாக இருந்த உள் உணர்வுகள், அவற்றை உருவாக்குவதில் இருந்த ஆரம்பக்கால இடர்ப்பாடுகள், நடைமுறைப்படுத்தி அவற்றிற்கு இறுதி வடிவம் தந்த அமைச்சர்களின் திறமை ஆகியவற்றை முழுவதுமாக உணர்ந்து கொள்ள வேண்டுமானால் 1700 பக்கங்கள் கொண்ட அக்பர் நாமாவைப் பொறுமையாக இடையறாது படிக்க வேண்டும் என்று இபின்ஹசன் கூறுகின்றார்.

அக்பர் நாமாவை எழுதிய அபுல்பாஸரின் எழுத்து நடை, சொற்றொடர்கள், சொல்லமைப்புகள் போன்றவை சிறப்பாகப் பேசப்படுகின்றன. உண்மைச் சம்பவங்களை அப்படியே விளக்கியிருக்கும் விதமும், எத்தகைய உயர் பதவியிலிருப்போரை யும் தாம் எழுதிய நாமாவில் கண்டித்திருப்பதும் குறிப்பிடத் தக்கதாகப் பேசப்படுகின்றது.

மாஹம் அங்கா (அக்பரின் செவிலித்தாய்) செய்த கொலையை-மால்வாவில் வாழ்ந்த ஆதம்கான் எனும் தமது புதல்வரின் பாதுகாப்பிலிருந்த இரு அப்பாவிப் பெண்கள் எங்குத் தம்மைப் பற்றிய உண்மையை அக்பரிடம் கூறிவிடுவார்களோ என அஞ்சி மாஹம் அங்கா அவர்களைக் கொலை செய்வித்தார். இக்கொலைக் குற்றத்தை அக்பர் பொருட்படுத்தாமல் விட்டுவிட்டார். அதே போன்று குஜராத்தில் தோல்வியுற்ற ஹுசெய்ன் மிக்னாவின் கொலையையும் அவர் கண்டித்துள்ளார். அக்பரது ஆணையின் பேரிலேயே அப் படுகொலை

நடைபெற்றுள்ளதை அபுல்பாஸல் தெளிவுறுத்துகின்றார். வக்கீலாக இருந்த முனிம்கான், ராஜா தோடர்மால் வங்காளத்தில் பணியாற்றிய முஸ்ஸஃபர்கான் போன்றோரையும் கண்டித்துள்ளார். அதே போன்று அக்பரது ஆட்சிக்கால இறுதியில் ஜஹாங்கீர் நடந்து கொண்ட முறையைக் குறை கூறியுள்ளதும் வரலாற்று விளக்க விவரணைகளாக வெளிப்படுகின்றன. 'அக்பர் நாமா' மூன்று தொகுதிகளால் ஆனது. இதன் மூன்றாம் தொகுதியாக அய்னி அக்பரி விளங்குகின்றது. அதிலடங்கும் செய்திகள் பற்றித் திரு.புளோச்மன் மிகத் தெளிவாகக் கூறியுள்ளார். "அக்பரது அரசாங்கத்தின் பல்வேறு துறைகள் பற்றியும் அந்த அரசங்கத்திற்கும் பல நிலைகளிலும் பல இனங்களாகவும் வாழ்ந்த குடிமக்களுக்கும் இடையேயான உறவுகள் பற்றியும் அய்னி படம் பிடித்துக் காட்டுகின்றது. அதில் குடிமக்களுக்கே முதலிடம் தரப்பட்டுள்ளது. அதன் விளைவாக அக்குடிமக்கள் நம் கண்முன் நடமாடுகின்றார்கள்; வாழ்கின்றார்கள். அக்கால முக்கிய நிகழ்ச்சிகள், மக்கள் மதித்த மூதுரைகள், கொண்ட கொள்கைகள், போற்றிய கருத்துக்கள், செய்ய நினைத்த மாயங்கள், பெற்ற வெற்றிகள் ஆகிய அனைத்தையும் உண்மை வடிவில் கருத்தைக் கவரும் வண்ணம் நம் கண்முன் கொண்டு வந்து நிறுத்துகிறது" என்று அய்னி அக்பரியைப் பற்றி அவர் புகழ்ந்து பேசியுள்ளார். இபின்ஹசன், ஹபிபுர் ரஹ்மான் போன்றோர் அய்னி அக்பரியை மட்டும் தனியாகப் படித்தால் போதாது, அதனுடன் அக்பர் நாமாவையும் இணைத்துப் படிக்க வேண்டும். அப்போது அக்பர் கால அமைப்புக்கள் குறித்தும் அவை எவ்வாறு செயலாற்றின என்பது குறித்தும் எந்த அளவிற்கு அக்பர் நாமா செய்திகளைத் தருகின்றது என்பதை உணரமுடியும் என்கின்றனர். அபுல்பாஸல் இறந்த பிறகு அக்பர் நாமாவின் பிற்பகுதியை இனாயத்துல்லா என்பவர் எழுதியுள்ளார். எனினும் அபுல்பாஸலின் நடை நயமோ, கூற்றின் வேகமோ, கண்டனத்தில் துணிவோ இனாயத்துல்லாவின் எழுத்தில் காணவில்லை. இருப்பினும் அக்பரது வாழ்க்கையின் இறுதிக் கட்டத்தையும் அக்காலப் பகுதியில் நடந்த முக்கிய நிகழ்ச்சிகளையும் அறிந்து கொள்ள உதவும் மிகச் சிறந்த சான்றாக இப்பகுதி விளங்குவதாக அறிஞர்களால் கூறப்படுகின்றது.

ஜஹாங்கீர் தமது வாழ்க்கைக் குறிப்புக்களைத் தமது கைப்படத் தமது ஆட்சியின் பெரும்பகுதியோடிணைத்து எழுதி வைத்துள்ள குறிப்புக்கள் அவருடைய ஆளுமை பற்றியும் அரசாட்சி பற்றியும் தெரிந்து கொள்ள உதவும் முக்கிய ஆதாரங்களாக உள்ளன. போர்கள் பற்றிய முழு வர்ணனைகள் அவை மூளுவதற்கான காரணங்கள், தக்காணத்தில் பேரரசுப் படைகளின் தோல்விகள், பேரரசின் படைத்தலைவர்களிடையே காணப்பட்ட ஒற்றுமையின்மை, அவர்களை அடிக்கடி மாற்றிய நிலை, அவர்கள் தங்கள் கடமைகளில் தவறியது ஆகியவற்றையெல்லாம் இந்த வாழ்க்கைக் குறிப்பேடு விளக்கமாக எடுத்துக் கூறியுள்ளது. எல்லாக் கட்டத்திலும் ஜஹாங்கீர் அக்பர் வகுத்த வழியைக் கடைப்பிடிக்க விரும்பியதும் தந்தையின் வெற்றிகளைப் பெருமிதத்தோடு நினைவுகூர்ந்து அவரைப் பின்பற்றி நடக்க முயன்றுள்ளார். இந்த வாழ்க்கைக் குறிப்பேட்டில் அரசாங்க விதிகள் அனைத்தையும் இடம்பெறச் செய்துள்ளார். மன்னரது வாழ்க்கை முறையில் நிகழ்ந்த சம்பவங்கள், அவரது அன்றாட வாழ்க்கை முறை, அவரது ஆளுமையை வெளிப்படுத்தவல்ல செய்திகள் போன்றவற்றை ஒளிவு மறைவின்றி உள்ளது உள்ளபடியே எழுதியுள்ள முறைமையினால், இதனைப் படிப்பவர்கள் இதில் வரும் கூற்றுக்களின் உண்மை நிலையினால் பெரிதும் கவரப்படுவதாகக் கூறப்படுகின்றது. ஜஹாங்கீரின் ஆட்சியின் முதல் பதினைந்து ஆண்டுகள் அவரது வாழ்க்கையிலேயே சிறந்த காலமாகும். பதினாறாம் ஆண்டிலிருந்து நோயும், நல்வாய்ப்பின்மையும், தோல்விகளும் தொடர்ந்ததன் காரணமாக வாழ்க்கைக் குறிப்புக்கள் சுருங்கத் தொடங்கின. இறுதியில் நெருக்கடி வந்த போது அவர் எழுதுவது அறவே நின்றுவிட்டது. "மகபத்கானின் பிடியில் ஜஹாங்கீர் சிக்கிய பிறகு வாழ்க்கைக் குறிப்புக்களை எழுதுவதினின்றும் பேரரசரின் பேனா ஓய்ந்துவிட்டது எனலாம். பிறகு அவை எழுதப்படவில்லை. அதன் பிறகு ஏற்பட்ட நிகழ்ச்சிகள் மிகவும் கேவலமானவையாதலால் எழுதத் தகுந்தவையல்ல"[10] என்று இபின்ஹசன் கூறுகிறார்.

ஜஹாங்கீரின் வாழ்க்கைக் குறிப்புக்களிலிருந்து பேரரசின் பிரதான அமைச்சர்கள், உயர் அதிகாரிகள் ஆகியோர் பற்றி மிகத்

தெளிவாக உணர்ந்துகொள்ள முடிகிறது. அவர்களைப் பற்றி இன்னொருவர் சொல்வதை விடப் பேரரசரே தமது கருத்துக்களை எழுதியிருப்பதால் அவை சிறப்பு மிக்கதாகின்றன. ஆஜ்மீர், மாளவம், குஜராத், பஞ்சாப், காஷ்மீரம் ஆகிய பகுதிகளில் ஜஹாங்கீர் சுற்றுப்பயணத்தைப் பற்றி விரிவாக எழுதியுள்ளதால் சாதாரணமாக மன்னர்கள் எழுதும் குறிப்பேடுகளில் காணக் கிடைக்காத செய்திகளும் இதில் இடம் பெற்றுள்ளன என்பது மகிழ்ச்சிக்குரியதாகும்.

துஸீகி ஜஹாங்கீரியில் தமது வாழ்க்கை பற்றி ஜஹாங்கீர் எழுதியுள்ள குறிப்பேட்டின் பதிப்பு அதன் பக்கங்கள் ஒவ்வொன்றிலும் தெளிவாகத் தெரிவதால்தான் ஜஹாங்கீரின் வரலாறு (History of Jahangir) என்ற நூலை எழுதும் போது பேராசிரியர் பேனி பிரசாத் இக்குறிப்பேட்டை முழுவதுமாகப் பயன்படுத்தியுள்ளதாகத் தெரிவிக்கின்றார். வாழ்க்கைக் குறிப்பேடு எழுதுவதில் ஜஹாங்கீர் தொடர்ந்து ஈடுபாடு காட்டிவந்துள்ளார். தனக்கு நெருக்கடிகள் குவிந்த காலக்கட்டங்களில் அப்பணியைத் தக்காணத்திலிருந்து திரும்பி வந்த முகமத்கான் பக்ஷி மேற்கொண்டதும் பேரரசரின் மேற்பார்வையிலேயே இப்பணி மூன்றாண்டுகளுக்குத் தொடர்ந்ததும் வியப்பைத் தருகின்றது. முகமத்கான் பக்ஷி இக்பால் நாமா என்ற நூலையும் எழுதியுள்ளார். அவருக்குப் பின் மௌலி முகம்மது ஹாதி என்பவர் ஜஹாங்கீரின் வாழ்க்கைக் குறிப்பேட்டைத் தொடர்ந்து எழுதி முடித்துள்ளார். இப்படி உருவான குறிப்பேட்டைச் சர் சையது அகமது கான் என்பவர் அச்சேற்றி வெளியிட்டுள்ளார் துஸீகி ஜஹாங்கீரியின் இந்தப் பதிப்பை ஆதாரமாகக் கொண்டு 19ஆம் ஆண்டு வரையிலான வரலாற்றுச் செய்திகளை ரோஜர்ஸ் என்பவர் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார்.

### பாதுஷா நாமா

ஷாஜஹானும் அக்பரைத் தொடர்ந்து தமது ஆட்சிக் காலத்தைப் பற்றிய உண்மையான வரலாறு எழுதப்பட வேண்டுமென அக்கறை காட்டியதன் விளைவாகப் 'பாதுஷா நாமா' எழுதப்பட்டுள்ளது. ஷாஜஹானின் இருபது ஆண்டுக்கால

ஆட்சியைப் பற்றி அப்துல் ஹமீத் லாஹீரி என்பவர் எழுதியுள்ள இந்த நூல் 1600 பக்கங்கள் கொண்ட இருபெரும் தொகுதிகளாகும். இதே போன்று முகம்மது சாலிகம்பூ என்பவரும் ஷாஜஹானின் இருபதாண்டுக் கால ஆட்சியைப் பற்றி 'அமலி சாலி' என்ற பெயரில் எழுதியுள்ளார். 1200 பக்கங்கள் கொண்ட இந்நூலின் மூன்றாவது பகுதி ஷாஜஹானின் இருபது ஆண்டுக் கால ஆட்சிக்குப் பிந்தைய பகுதிகளாகும். இப்பகுதியை எழுதுவதற்கு 26, 221 என்னும் எண்ணில் உள்ள கையெழுத்துப் படிவமான பாதுஷா நாமாவையே பயன்படுத்தியிருக்கின்றார். இப்படிவமே பிரிட்டிஷ் பொருட்காட்சி சாலையிலுள்ள கையெழுத்துப் பிரதிகளில் மிக அழகிய வரைபடங்களோடு கூடியதாகும் என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகக் கூறப்படுகின்றது.

அவுரங்கசீப் ஆக்ராவைக் கைப்பற்றிய பிறகு அவருடன் ஷாஜஹானின் சார்பில் பேச்சு வார்த்தை நடத்தியவர் சாதிக்கான் என்பதை அறியும் போது அவர் எழுதிச் சென்றுள்ள குறிப்புகளின் மதிப்பு மேலும் உயருகின்றது. ஷாஜஹான் ஆட்சி முடிந்ததும் தாரிகி ஷாஜஹானியும் முற்றுப் பெறுகின்றது. பிரெஞ்சு அரசாங்கத்தின் கட்டுப்பாட்டின்கீழ்ப் பாண்டிச்சேரி தமிழ் மக்கள் உள்ளிட்ட நிகழ்வுகளை ஆனந்த ரங்கம்பிள்ளை டைரிக் குறிப்புக்களாக வரைந்து வைத்துள்ளது அக்கால அரசாங்க நடவடிக்கைகளை எடுத்தியம்பக்கூடிய அரிய பெரிய பொக்கிஷங்களாகக் கருதப்படுவது போலவே கூடுதல் மதிப்போடும் மரியாதையோடும் இவை கருதத்தக்கவைகளாக உள்ளன. ஏனென்றால் அக்பர் முதல் ஜஹாங்கீர், ஷாஜஹான் வரையுள்ள அனைத்து மன்னர்களும் அன்றாட நிகழ்வுகளைக் குறித்து வைத்து இலக்கியச் செறிவுடன் படைப்பதற்குத் தனி ஆட்களையே நிறுத்தியுள்ளனர். அதிலும் பொறுப்பான பதவிகளில் இருக்கக் கூடிய விவரம் தெரிந்த எழுதும் ஆற்றல் உடையவர்களை நியமித்துள்ளனர் என்பதும் குறிப்பிடத் தக்கதாகும். தமிழகத்தை ஆண்ட முகலாய மன்னர்கள் எவருக்கும் இந்தத் தாக்கம் ஏற்படாமல் போனதற்குக் காரணம் அவர்கள் முகலாய மைய அரசில் நிலவிய மன்னர்களைப் போல யதார்த்த நிகழ்வுகளில் அக்கறை கொள்ளாதவர்களாக இருந்துள்ளனர்.

படைப்பாளர்களும் தமிழ் இலக்கியப் பண்டைய மரபைக் கண்டு கொண்டு அதற்குள் தங்களை எவ்வாறு பொருத்திக் கொள்வது என்ற முயற்சிகளில் மட்டுமே ஈடுபட்டுள்ளனர். மேலும் சமயச் சச்சரவுகள் முகலாய மைய அரசில் பேசப்பட்டுள்ளது போல் தமிழகம் போன்ற நாடுகளில் பேசப்படவில்லை என்றே தோன்றுகின்றது. பாரபட்சமற்ற, மதச்சார்பற்ற ஆட்சியை நிறுவ முயன்றதனை (Abdul Gadir Badauni) அப்துல் காதர் பதாவுனயன முண்டகபாத் உல்தவாரியும் காதர் பதாவுனியும் அக்பர் காலத்தை அறிய மிகவும் பயனுள்ள நூல்களாக இருப்பதாகக் கூறப்படுகின்றன.

ஜஹாங்கீரின் ஆட்சிக்காலத்தில் முகமத்கான் பக்ஷி 'இக்பால் நாமா' என்கின்ற நூலை எழுதியுள்ளார். பதினாறாம் ஆட்சியாண்டிலிருந்து அரசவையில் இடம்பெற்று மன்னருடன் சென்றுவந்த முகமத்கான் பத்தொன்பதாம் ஆண்டு வரை ஜஹாங்கீருக்காக அவரது வாழ்க்கைக் குறிப்புக்களை எழுதி வந்துள்ளார். ஜஹாங்கீர் மன்னனின் வாழ்க்கைக் குறிப்பேட்டின் சுருக்கமே இக்பால் நாமாவாகும்.

'நாமா' என்கின்ற இலக்கிய வகை தமிழில் பரிணமித்திருப்பது போன்று வெறுமனே கதையும் கற்பனையும் மட்டுமே உள்ளடக்கிய இலக்கியமல்ல. 'நாமா' என்பது முழுக்க முழுக்க உண்மையான விவரணைகளை உள்ளடக்கிச் சொற்சுவையும், பொருட்சுவையும் இணைய வெளிப்படுத்த முயன்ற இலக்கியமாகும் என்பது அபுல்பாஸல் எழுதிய அக்பர் நாமாவைக் கொண்டு அறியலாம். அப்துல் காதர் பதாவுனி எழுதியுள்ள முண்டகபாத் உல்தவாரியும் 'நாமா' என்கின்ற அர்த்தத்தில் நிஜாம் உத்தீன் எழுதிய 'தபகாத் இ-அக்பரியும்' ஒரே கோணத்தில் எழுதப்பட்டவைகளாகும்.

அரசாங்கம் பற்றிய செய்திகளை நிஜாம் உத்தீனைவிட அப்துல் காதர் இன்னும் விளக்கமாகத் தருகின்றார் என்பதோடு அக்பர் காலச் சமயச் சச்சரவுகளை ஒளிவு மறைவின்றி இவருடைய நூலின் மூலம் அறிந்து கொள்ள முடிவதாகவும் கூறப்படுகின்றது. அரசாங்கத்தின் பல்வேறு பிரிவுகள் பற்றிப் பதாவுனி தந்திருக்கும் ஏராளமான செய்திகள் அக்பர் நாமாவில்

அபுல்பாஸல் கூறியுள்ளதிலிருந்து மாறுபட்டவைகளாக இருக்கின்றன. உயர் அரசாங்க அதிகாரிகளைப் பதாவுனி குறை கூறியிருப்பதும், முனீம்கான், முசபர் கான் போன்றவர்களின் கீழிருந்த குவாஜா ஜஹானின் அரசியல் நடத்தை பற்றி அபுல்பாஸல் ஒன்றுமே கூறாமல் விட்டுச் சென்றுள்ள போது பதாவுனியின் குறிப்புக்கள் மிகவும் உதவிகரமாக உள்ளதாகின்றன. இன்னும் குறிப்பாக அக்பர் காலத்தில் பல சமயங்களில் பல நிலைகளில் பணியாற்றிய காஸி பத்தாதி என்பவர் திறமையான அலுவலர் என அபுல்பாஸல் போற்றியுள்ளார். ஆனால் அவரைப்பற்றிப் பதாவுனி எழுதும் போது இறைநூலாருக்கு எதிராக அக்பரின் கையாளாக இருந்தவர் அவர் என்றும், கெடுதல் செய்வதற்கு அவருக்குக் கருவியாக இருந்தார் என்றும் குறிப்பிடுகின்றார். எனவே 'நாமா' என்கின்ற பொருளில் எழுதப்பட்டுள்ளவை அக்காலத்தில் வாழ்ந்தவர்களைப் பற்றியும் முக்கிய நிகழ்ச்சிகள் பற்றியும் திடமான கருத்தினைக் கொள்வதற்கு உதவுகின்ற ஒரு நூலாகவே தோன்றியுள்ளன. ஆனால் இசுலாமியப் படைப்பாளிகள் தமிழில் அதனை வெளிப்படுத்துகின்ற போது அதனையும் கற்பனா இலக்கியங்களுக்குள் கொண்டு சென்று நிறுத்தியுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

'நாமா' எழுதுவதில் மன்னர்கள் காட்டியுள்ள அக்கறை போற்றத்தக்கதாக இருக்கின்றது. பல புதிய செய்திகள் இன்று வாழும் நமக்குக் கிடைக்கத்தக்கனவாக உள்ளன. சான்றாக நான்காம் ஆட்சியாண்டில் இதிமாத் உத் தௌலா பதவி நீக்கம் செய்யப்பட்டுச் சிறையில் இடப்பட்டார் என்ற செய்தி தரப்பட்டுள்ளது. இளவரசர் இஸ்ராவை விடுதலை செய்யும் சதியில் இதிமாத் உத் தௌலாவின் மகன் பங்கு கொண்டார் என்பதற்காக இதிமாத் உத் தௌலா சிறையில் அடைக்கப்பட்டார் என்றும் அவரது மகனுக்கு மரண தண்டனை அளிக்கப்பட்ட தென்றும் சிறிது காலத்திற்குப் பிறகு பெரும் பொருளைத் தண்டமாகத் தந்ததால் இதிமாத் உத் தௌலா விடுதலை செய்யப் பெற்றார் என்றும் 'இக்பால் நாமா' குறிப்பிடுகின்றது. பத்தொன்பதாம் ஆட்சியாண்டிற்குப் பிறகு ஜஹாங்கீரின் வாழ்க்கைக் குறிப்பேடு எழுதுவது தடைபட்ட

பின்னர்ப் பாதுஷாவின் ஆட்சி பற்றி அறிந்து கொள்ள முகமத்கானின் நூல் ஒன்றே ஆதாரமாக உள்ளது. ஜஹாங்கீரை மகபத்கான் திடீரென்று தாக்கிச் சிறை பிடித்த போது பக்ஷியாகப் பணியாற்றி வந்த முகமத்கான் மன்னரது பாசறையில் தங்கி மன்னரை விடுவிக்கும் முயற்சிகளில் ஈடுபட்டதையும், நூர்ஜஹானின் நடவடிக்கைகளையும் அவருடைய சகோதரது செயல்களையும் குறிப்பிட்டுள்ளார். மற்றுமொரு நூலான மஆத்திரி-ரஹீமீ (Ma'athiri-Rahimi) என்னும் நூலில் ஜஹாங்கீரின் ஆட்சிக்காலத்தில் நிர்வாகம் பற்றிய குறிப்புகள் அதிகமாக இடம்பெறாவிட்டாலும் முக்கிய நூலாகவே கருதப்படுகின்றது. ஜஹாங்கீர் அரியணை ஏறிய போது நிகழ்ந்த முக்கிய நிகழ்ச்சிகள் பற்றியும், எழுந்த சிக்கல்கள் பற்றியும், அச்சமயத்தில் பேரரசரின் மீர்பக்ஷியாக இருந்த ஷேக் பரீதின் பங்கு பற்றியும் த ஹவுர்கன் எழுதிய சுப்தத்-உத்-தவாரீக் (Zubdatut-Tavarikh) என்னும் நூலில் பயனுள்ள செய்திகள் கிடைக்கின்றன.

ஷாஜஹான் ஆட்சிக்காலத்தில் அரசாங்கத்தின் நடவடிக்கைகள் குறித்தும் அரசாங்க அதிகாரிகள் குறித்தும் சாதிக்கான் என்பவர் எழுதிய 201 ஏடுகளைக் கொண்ட தாரீக் இ ஷாஜஹானி என்னும் நூலில் பயனுள்ள செய்திகள் கொடுக்கப்பட்டுள்ளன. ஆறாயிரம் சாதி, சவார் என்னும் உயர அந்தஸ்தைப் பெற்றிருந்த சாதிக்கான், ஷாஜஹான் ஆட்சியின் பிற்பகுதி பற்றி நம்பகமான செய்திகளைத் தந்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

அக்பர் பல வகைகளில் சீர்திருத்தங்களைச் செய்தார் என்பது போன்ற குறிப்புகள் தமிழகத்தை ஆண்ட முகலாய மன்னர்கள் வாழ்வில் காணக்கிடைக்காதனவாகவே உள்ளன. எனவே அவர்கள் காலத்திய படைப்பிலக்கியங்களும் எண்ணிக்கையில் அதிகமாகவும், கதையாடலிலும் கருத்தாக்கத்திலும் நபிகளை மட்டும் மையமிட்ட ஒற்றைப் போக்கில் சென்றுள்ளமையையும் காணமுடிகின்றது.

பேரரசர் சிறையில் கழித்த இறுதி எட்டு ஆண்டுகளைப் பற்றித் தொடர்ந்து குறிப்பு எழுதுவது தனது எஜமானருக்கு

இழிவு செய்வதாகும் என்றும், உப்பிட்டவருக்கு ஊறு செய்வதாகும் என்றும் சாதிக்கான் தாரிகி ஷாஜஹானியில் குறிப்பிட்டிருப்பது வெறுமனே நாட் குறிப்புக்களாக மட்டும் இல்லாமல் உணர்வுப் பூர்வக் கலப்புடன் அவை எழுதப்பட்டுள்ளமை உணர முடிகின்றது.

ஷாஜஹான் காலத்து அரசாங்கம் எங்ஙனம் நடைமுறையில் செயல்பட்டது என்பதைச் சந்திரபான் பிரமன் எழுதிய சஹார்சமன் என்னும் நூல் குறிப்பிடுகின்றது. இது விளக்க முறையில் அக்பர் நாமாவைப் போலவே அமைந்திருப்பதாகவும் கூறப்படுகின்றது. ஷாஜஹான் ஆட்சியின் பெரும்பகுதியில் பதவிவகித்த பேர்பெற்ற திவான்கள் நால்வருடன் சந்திரபான் அரசாங்க ரீதியில் தொடர்பு கொண்டிருந்ததோடு அவர்களுடன் மிகவும் நெருக்கமாகப் பழகி வந்தவராக இருந்துள்ளார். சாதுல்லா கான் திவானாக இருந்தபோதும், அதன் பிறகும் அரச கட்டளைகளை வரையும் பொறுப்பேற்றிருந்துள்ளார். ஷாஜஹானின் ஆட்சி முழுவதிலும் முதலமைச்சரின் இலாக்காவுடன் ஏதாவது ஒரு வகையில் தொடர்பு கொண்டவராக இருந்ததால் முக்கியமான இலாக்காக்களில் நடைபெறும் அனைத்துச் செய்திகளையும் அறிந்து வெளியிடக் கூடிய திறன் பெற்றவராக இருந்துள்ளார். மேலும் அவர் ஒரு பாரசீக மொழிப்புலவர் என்னும் வகையில் மிக உன்னத நிலையில் இருந்ததோடு அக்காலத்தில் வாழ்ந்த புலவர்களில் தலைசிறந்த ஒருவராகவும் இருந்திருக்கின்றார்.

ஷாஜஹானின் ஆட்சியின் இறுதிவரையில் சாலி எழுதியுள்ள குறிப்புக்கள் இந்தக் கையெழுத்துப்படிகளில் இடம்பெற்றிருந்தாலும் இதனுள் குறிப்பிடப்படுகின்ற செய்திகள் சுருக்கமாகவே தரப்பட்டுள்ளன. மன்னரது நடவடிக்கைகள் மற்றும் ஆட்சியின் முக்கிய நிகழ்ச்சிகள் ஆகியவை மட்டுமே முக்கியத்துவம் பெறுபவைகளாக இருப்பதால் ஷாஜஹான் ஆட்சியின் இறுதி ஐந்தாண்டுகளைப் பற்றிய முழுமையான குறிப்புகள் இதனுள் இல்லை. அக்காலத்தில் பிற ஆதாரங்களன்றி லாஹீரி, சாலி என்ற இரண்டு அரசாங்க அதிகாரிகள் எழுதிய பேரரசரின் வாழ்க்கைக் குறிப்புக்களின் வழி முழுமையாகக் கிடைக்கவில்லை

அக்பர் நாமாவில் உயர் அதிகாரிகள் அனைவரையும் வெளிப்படையாகவும் துணிவாகவும் அபுல்பாஸல் குறை கூறி உள்ளதைப் போன்று இவ்வறிஞர்கள் செய்ய முடியவில்லை. ஊதியத்திற்காக ஷாஜஹானின் வா்ழ்க்கைக் குறிப்புக்களை எழுதிய இவர்களுக்கும், அக்பரின் அன்பிற்குப் பாத்திரமான அபுல்பாஸலுக்கும் இடையே இருந்த தராதர நிலையை இது காட்டுவதாக அறிஞர்கள் கூறுகின்றனர். ஆனால் அரசாங்கத்தில் அக்பரின் பங்கினை அபுல்பாஸல் எவ்வாறு சிறப்பித்துப் போற்றுகின்றாரோ அது போலவே ஷாஜஹானின் பங்கினை இவ்விரு அறிஞர்களும் வெளிப்படுத்தித் தங்களது பேரரசரின் வாழ்க்கையைப் படம்பிடித்துக் காட்டியுள்ளனர்.

மேற்கூறிய நூல்கள் மட்டுமன்றி முகலாயர் காலத்தில் ஒவ்வொரு ஆட்சியிலும் தோன்றியுள்ள அக்காலத்திய பாரசீக மொழி நூல்கள் பல காலவழிச் செய்திக் கோவைகளை அள்ளித் தருவனவாக இருக்கின்றன. அபுல்பாஸல் அக்பர் காலத்திய செய்திகளை நூலாக எழுதியது போலவே நிஜாம் உத்தீன் என்பவர் எழுதிய தபகாத்-இ-அக்பரீயும், அப்துல் காதிர் பதாவுனி தாம் நெருங்கிப் பழகிப் பணியாற்றிய முதலமைச்சர்களின் வாழ்க்கை பற்றியும் அவர்களது கருத்துக்கள் பற்றியும் சுவைபட அவர் எழுதியுள்ளது போற்றுதற்குரியது. அரசாங்கப்பணி புரிவதில் அரசர் காட்டிய ஆர்வத்தையும் அரசாட்சியில் முதலமைச்சரின் பங்கு என்ன என்பதையும் புரிந்து கொள்வதற்குச் சந்திரபானின் நூல் மிகவும் உதவியாக இருப்பதாக இபின்ஹசன் போன்ற வரலாற்றாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். ஆனால் முகலாயப் பேரரசின் ஆட்சி முறை பற்றி எழுதிய எந்த ஒரு இந்திய வரலாற்று ஆசிரியரும் இந்நூலைப் பயன்படுத்தவில்லை என்று இபின்ஹசன் கூறியுள்ளார்.

முகலாய மன்னர்கள் இந்தியாவை ஆண்டு மிகப் பெரிய பாரம்பரியப் பதிவை விட்டுச் சென்றமைக்கு அவர்களுடைய 'நாமா' இலக்கியப் பதிவுகள் நமக்குத் துணையாக இருக்கின்றன. இவை மட்டுமின்றிப் பல எண்ணிக்கையிலான பாரசீக மொழிக் கையெழுத்து ஏடுகளும் முகலாய மன்னர்களின் நிர்வாக விதிமுறைகள் பற்றியும் பேரரசின் பல அரசாங்கத் துறைகள்

செயல்பட்ட விதம் பற்றியும் செய்திகளைத் தருவனவாக அமைந்துள்ளன. தமிழ் இலக்கிய வரலாற்றில் இசுலாமியப் புலவர்களின் பெயர்களோ, குறிப்புக்களோ இடம்பெறவில்லை என்று குறைபட்டுக் கொள்ளும் எந்த இசுலாமியப் பேராசிரியர்களும் விலைமதிப்பற்ற இந்தக் கையெழுத்து ஏடுகளைப் பற்றிய குறிப்புக்களைக் கூட வழங்க முன்வரவில்லை.

தஸ்தூர்-உல்-அமால்-இ-அவுரங்கசீப் (Dastur-ul-Amal-Aurangazeeb) என்கின்ற ஏடு முக்கிய அரசாங்க விதிமுறைகளையும், நடைமுறைகளையும் உள்ளடக்கியதாகும். அவுரங்கசீபின் மூன்றாம் ஆட்சியாண்டில் எழுப்பெற்ற இதனுள் இடம்பெற்றுள்ள விதிமுறைகள் மத்திய அரசாங்கத்தை விட மாநில ஆட்சி முறையை அறிந்து கொள்வதற்கு உதவியாக இருப்பதாகக் கூறப்படுகின்றது. "ஆயினும் மீர்சாமான் மேற்பார்வையில் இருந்த பல தொழில் நிறுவனங்களிலும் கிடங்குகளிலும் கையாளப்பட்ட நடைமுறை வேறெந்த ஏட்டிலும் இல்லாத அளவிற்கு இதில் நன்கு விளக்கப்பட்டுள்ளது"[12] என்று பேராசிரியர் கூறுகின்றார். இந்த ஏட்டைப் போலவே அவுரங்கசீப்பின் நிர்வாகம் பற்றிக் கூறுகின்ற சவாபிட் இ ஆலம் கிரி என்ற ஒரு தனிநூலே இருக்கின்றதெனவும் கூறுகின்றனர்.

சவாபிட் என்கின்ற நூல் அவுரங்கசீப்பின் முப்பத்து நான்காம் ஆண்டில் தொகுக்கப் பெற்ற விதி முறைகளின் சுருக்கமாகும். இந்த ஏட்டின் எண் 1641 ஆகும். இது பல பொருட்கள் பற்றியும், மத்திய அரசாங்கத் துறைகளைப் பற்றியும் விளக்குவதோடு 67 பக்கங்களில் விதிமுறைகளையும் திவான், மீர் பக்ஷி, மீர் சாமான் ஆகியோரின் துறைகளைச் சார்ந்த பல்வேறு அதிகாரிகளுக்கிடையே பணிகள் பகிர்ந்தளிக்கப்பட்ட விதத்தைப் பற்றியும் கூறுகின்றது. இந்த நூலின் 89 முதல் 97 வரையிலான பக்கங்களில் ஷாஜஹான் மற்றும் அவுரங்கசீப் ஆகியோர் காலத்துத் தலைமை திவான்களில் பிரதானமானவர்கள் வழக்கமாகச் செய்த பணிகள் குறித்துக் கொடுக்கப்பட்டுள்ளது. மற்ற பக்கங்களில் ஷாஜஹான் காலத்தில் வாழ்ந்த இளவரசர்கள், அமைச்சர்கள் ஆகியோர் பெற்றிருந்த பட்டங்கள், மாநிலங்களில் இருந்து வந்த வருவாய்க் கணக்குகள், தலைநகருக்கும்

நாட்டிலிருந்த பல்வேறு நகரங்களுக்குமிடையேயான தூரம் ஆகியவையும், அவுரங்கசீப் ஆட்சிக் காலத்து முக்கிய நிகழ்ச்சிகளும் இடம்பெற்றுள்ளதாகக் கூறப்படுகின்றது.

6588 என்ற எண்ணை உடைய இந்த ஏடு மூன்று பகுதிகளைக் கொண்டுள்ளதாகும். அக்பர் நாமாவிலும், பதாவுனியின் நூலிலிருந்து எடுக்கப்பெற்ற அக்பர்காலச் சீர்திருத்தங்களின் சுருக்கம், மாநிலங்களில் இருந்து வந்த வருவாய்க் கணக்குகள், நகரங்களுக்கிடையிலான தூரங்கள் போன்றவை முதல் பகுதியில் இடம்பெற்றுள்ளன. இதன் இரண்டாம் பகுதி ஷாஜஹானின் ஆட்சியைப் பற்றி அவுரங்கசீப் வெளியிட்ட கருத்துக்களை உள்ளடக்கியுள்ளது. மூன்றாம் பகுதியில் கணக்கு எழுதுவது பற்றிய விதிமுறைகள் மற்றும் திவானின் அலுவலகத்திற்குத் தேவையான பலவகை ஏடுகளைத் தயாரிப்பது எப்படி என்ற செய்திகள் காணக்கிடைக்கின்றன.

தஸ்தூர்-உல்-அமல் (எண்: 1690) என்ற ஏடு பிற்காலத்தியதாகும். ஏனென்றால் இதனுள் முகலாய அரசாங்க விதிமுறைகளின் சுருக்கம் மட்டுமின்றி முகலாய மன்னர்களின் வரலாற்றையும் தருவதாக இருக்கின்றது. மட்டுமல்லாமல் அமைச்சர்கள், காரியதரிசி ஆகியோரின் வாழ்க்கைக் குறிப்புக்களும் இடம்பெற்று ஷாஜஹான் ஆட்சிக் காலத்தைப் பற்றிய சிறப்பான செய்திகளையும் பெற்று விளங்குகின்றது. 197 பக்கங்கள் கொண்ட இந்நூலில் தான் மாநிலங்களின் பட்டியல் அவைகளிலிருந்து வந்த வருவாய்க் கணக்குகள் போன்றவை இடம்பெற்றுள்ளன.

(2011) திவான் பசந்த் என்ற ஏடு வருவாய்த் துறை அதிகாரிகளுக்கு வழிகாட்டியாக அமையுமென்று சத்தர் மால் என்பவரால் தொகுக்கப்பெற்ற அதிகாரப் பூர்வமான கையேடாகும். இதன் முன்னுரையில் வருவாய்த்துறை நிர்வாகத்தில் தனக்கிருந்த நடை முறை அனுபவம் பற்றிய இவரது குறிப்பு இடம் பெறுகின்றது. நான்கு பகுதிகளையும் 214 பக்கங்களையும் கொண்ட இந்நூல் வட இந்தியாவில் முகலாயர்கள் நிலைநிறுத்திய வருவாய்த்துறை நெறி முறைகளைக் கூறுகின்றது.

6585 தாரீக்-இ-ஷாகிர் தானி என்ற இந்த ஏட்டை ஷம்ஸ் உத்தவுலா நுட்புல்லாகான் சாதிக்கின் புதல்வரான ஷாகிர்கான் என்பவர் முகமது ஷாவின் ஆட்சியில் இதனை எழுதியுள்ளார். முகமது ஷாவின் ஆட்சிக்காலத்தில் முகலாயப் பேரரசின் அரசியல் நிலைபற்றிக் குறிப்பிட வந்த இந்த ஏடு அதற்கு முன் வாழ்ந்த முகலாய மன்னர் காலத்துப் பயனுள்ள அரசாங்கச் செய்திகளையும் தருகின்றது. அக்பர் காலத்தில் வாழ்ந்த முனிம்கான் விகாலத்தாகப் பணியாற்றிய போது நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் இது குறிப்பிடுகின்றது. மேலும் அக்பர் கால நிறுவனங்கள் அவர் தமது காலம் வரை அடிப்படையில் எவ்வாறு தொடர்ந்து வந்துள்ளன என்பதை இந்நூல் ஆசிரியர் விளக்குகின்றார். பேரரசில் நிகழ்ந்தவற்றைக் கண்ணால் கண்டு இரங்கத்தக்க நிலையை நன்கு உணர்ந்து அதைப்பற்றி மனம் நொந்த ஒருவர் எழுதியது என்பதால் இந்தக் கையேட்டின் மதிப்பு பன் மடங்கு உயருகின்றதென பேராசிரியர் இபின்ஹசன் கூறுகின்றார்.

22831 என்ற எண்ணிலுள்ள இந்த ஏட்டில் சபாக்கள், சர்க்கார்கள், மஹால்கள் ஆகியவை பற்றிய செய்திகள் தரப்பட்டுள்ளன. தஸ்தூர்-உல்-அமல்-இ-ஷாஹன் ஷாஹி என்னும் பெயர் கொண்ட இந்த ஏட்டை முன்ஷிதாகுர் லால் என்பவர் ஏறத்தாழ 1140 A.H.இல் தொகுத்த போதிலும் இதன் பிற்சேர்க்கையில் 1192 A.H. வரையிலான முகலாய மன்னர்களின் பட்டியலும் காணப்படுவதாகக் கூறப்படுகின்றது.

6586 என்ற இந்த ஏட்டில் அக்பர் காலந்தொட்டு ஷீஜா-உத்-தவுலா ஆளுநராக இருந்த காலம் வரையில் வங்காள மாநில அரசாங்கச் செய்திகள் இந்த ஏட்டின் நான்காம் பாகத்தில் கிடைக்கின்றன.

மீர்ஆத்-உல்-இஸ்டிலா எண்: (1813) என்ற இந்தக் கையெழுத்து ஏட்டின் பெரும்பகுதி இலக்கியம், செய்யுள் ஆகியவற்றில் வரும் சொற்களுக்கும், சொற்றொடர்களுக்கும் விளக்கம் தருவதிலேயே கழிந்த போதிலும் 26 முதல் 43 வரையிலான பக்கங்களில் ஆட்சித்துறை பற்றிப் பயனுள்ள செய்திகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது. இப்பக்கங்களில் அதிகாரிகளின் ஊதியம், மன்சப் ஆகியவற்றை

நிர்ணயிப்பதற்கான விதிகள், விதிமுறைகள் ஆகியவையும், பட்டங்கள் வழங்குவதற்கான விதிகளும் இடம்பெற்றுள்ளன. மேலும் பேரரசில் வக்கீலின் நிலைபற்றிய குறிப்பும் இதன் மூலம் அறியப்படுகின்றது.

2026 என்ற எண்ணில் தஸ்தூர்-உல்-அமல் என்ற பெயரிலேயே மற்றுமொரு ஏடு கிடைக்கப்பெற்றுள்ளது. இது அவுரங்கசீப்பிற்குப் பிறகு எழுதப்பெற்ற ஏடாகும்.

1906 என்ற எண்ணில் ஷரா-இ-மனாசிப் என்ற பெயரில் நஜாஃப் அலிகான் என்பவர் எழுதிய இந்த நூலில் மன்சப்தார்களின் வரிசையும் அவர்களின் ஊதியங்களும் அட்டவணையாகத் தரப்பட்டுள்ளன. மன்சப்தார்களைப் பற்றிய பயனுள்ள செய்திகளும் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன. ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆங்கில அதிகாரிகளுக்குப் பயன்படும் வகையில் வருவாய்த் துறையில் கையாளப்பெற்ற கலைச் சொற்கள் அகராதி இந்த ஏட்டில் இடம் பெற்றுள்ளது. குவாஜாயாசின் என்பவர் இதனைத் தொகுத்துள்ளார்.

(7689) இன்ஷா என்று அழைக்கப்படும் ஏட்டில் அரசாங்க ஆணைகளின் ஒப்பந்தங்கள் பிறருக்கு எழுதப் பெறும் கடிதங்கள் மற்றும் அரசாங்க அதிகாரிகளின் கடமைகள் போன்றவற்றின் படிவங்கள் அமைந்துள்ளன.

மீர்-ஆத்-இ-அஹமதி எனும் ஏடானது அலிமுகம்மதுகான் என்பவரால் எழுதப்பட்டதாகும். குஜராத்தின் திவனாக முகமதுஷாவின் ஆட்சியில் இறுதிக் காலத்தில் பொறுப்பேற்ற அலிமுகம்மதுகான் வரலாற்றுச் செய்திகளைச் சேகரிப்பதில் அதிக ஆர்வம் கொண்டவராய்த் திகழ்ந்தவராவார். இவரது மீர்-ஆத்-இ-அஹமதி எனும் இந்நூலானது வரலாற்றுச் செய்திகளை உடைய நூல்களிலேயே அளவில் பெரியதாய் 460 பக்கங்கள் உடையதாய் அமைந்துள்ளது. இந்நூலில் பானிபட்டில் மராத்தியர் தோல்வி, குஜராத்தின் வரலாறு, ஆட்சி முறை போன்றவைகளும் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. மேலும் குஜராத் மாநிலத்திற்கு முகலாய மன்னர்கள் காலத்தில் அனுப்பப்பட்ட கட்டளைகளையும், மாநிலம் ஒன்றின் உள்நாட்டு

விவகாரங்களில் அரசு எவ்வாறு தலையிட்டு வந்தது என்பதையும் தெரிவிக்கின்றது. இவை மட்டுமன்றி அவுரங்கசீப்பின் ஆட்சிக்குப் பின் முகலாய அரசின் நிறுவனங்கள் எவ்வாறு நலிவுற்றன என்பதையும் குஜராத் மாநிலத்தின் சீர்குலைவையும் தெளிவாக விளக்குகின்றது. இந்த ஏடானது ஜேம்ஸ்பர்டு என்பவரால் குஜராத்தின் அரசியல் மற்றும் புள்ளித் தொகுப்பு வரலாறு என்ற பெயரில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

மேலே குறிப்பிடப்பட்ட ஏடுகள் பலரால் பல நூல்களில் ஆதாரங்களாக எடுத்தாளப்பட்டுள்ளன. இவற்றை எட்வர்ட் தாமஸ் தமது முகலாயப் பேரரசின் நில வருமான ஆதாரங்கள் (The Revenue Resources of the Mugal Empire) என்ற நூலிலும், இர்வின் என்பார் தமது முகலாயர்களின் இராணுவம் எனும் நூலிலும் பயன்படுத்தியுள்ளனர். பேராசிரியர் சர்க்கார் தமது முகலாய நிர்வாகம் எனும் நூலிற்காக 1641 என்ற ஏட்டிலிருந்த ஆதாரங்களை எடுத்தாண்டுள்ளார் என்பதும் குறிப்பிடத் தக்கதாகும்.

## கடிதங்கள்

ஏடுகள் முக்கிய வரலாற்றுச் சான்றாதாரங்களாக விளங்கியது போலவே கடிதங்களும் பெரும் பங்கு வகிக்கின்றன. முகலாயர் ஆட்சிக் காலங்களில் எழுதப்பட்ட கடிதங்களின் தொகுப்புகள் அக்கால ஆட்சிமுறைகள் பற்றி அறிந்து கொள்ள பல வழிகளில் துணைபுரிகின்றன.

நூர் உத்தீன் என்பவரால் தொகுக்கப்பட்ட அபுல்ஃபெய்ஸலியின் கடிதங்கள் Egerton (695) லடிபா-இஃபெய்ஸி என்ற நூலில் இடம்பெற்றுள்ளன. இவை மட்டுமன்றி அபுத்-உல்-சமத் அஃப்சல் முகம்மது தொகுத்த கடிதங்கள் 6548 முகாபாத்-இ-அல்லாமீ அபுல் ஃபாஸல் என்ற நூலிலும் இடம் பெற்றுள்ளன. இந்நூலின் இரண்டாம் பகுதியில் அபுல்ஃபாஸல் எழுதிய கடிதங்களின் பகுதிகள் காணப்படுகின்றன. இவற்றில் முகலாயப் பேரரசிற்கும் தக்காண அரசுகளுக்கும் இடையே இருந்த உறவு நிலை, அக்பர் அரசவையில் இருந்த இலக்கியச் சூழ்நிலை, அவர்கள் பயணம் மேற்கொண்ட பகுதிகள் போன்றவை பற்றிய செய்திகள்

இடம்பெற்றுள்ளன. அபுல்ஃபாஸல் எழுதிய கடிதங்களின் அகராதி இந்திய அலுவலக நூல் நிலையத்தில் எண் (283) இடம் பெற்றுள்ளது.

2641 இன்ஷா-இ-பிரமன் எனும் நூலானது சஹார்சமனின் ஆசிரியர் எழுதிய கடிதங்களின் தொகுப்பாகும். இக்கடிதங்களில் வரும் பகுதிகள் பல சஹார் நாமாவிலும் இடம்பெற்றுள்ளன. இதில் சஹார்சமன் ஷாஜஹானுக்கு அனுப்பிய விண்ணப்பங்கள், அவருடன் தொடர்பு கொண்ட பிற அமைச்சர்கள் பற்றிய குறிப்புகள், அதிகாரிகள் ஆகியோருக்கு அவர் எழுதிய கடிதங்கள் போன்றவை அடங்கியுள்ளன.

178பஹார்-இ-சுக்கான் எனும் நூலில் ஷாஜஹானுடைய வாழ்க்கைக் குறிப்புகளை எழுதிய முகம்மது சாலி காம்பு வரைந்த மடல்கள் போன்றவற்றின் தொகுப்புகள் அடங்கியுள்ளன. 177 மற்றும் 18881 ஆகியவை அவுரங்கசீப் ஷாஜகானுக்கு எழுதிய கடிதங்களின் தொகுப்பாகும்.

முஸ்ஸபர்கானீ ஜஹான் என்பவர் ஷாஜஹானுக்கு எழுதிய கடிதங்களின் தொகுப்பே அர்ஸ்டாஷ்ட் (16859) எனும் நூலாகும். இவற்றில் ஷாஜஹானின் ஆட்சிநிலையில் காணப்பட்ட சில குறைகளை அவர் அவ்வாறே வெளிப்படுத்தியுள்ளார். குவாலியரின் ஆளுநராகப் பணியாற்றிய இவர் பிற்பகுதியில் ஜமீன்தாரர்கள் உட்பட நண்பர்கள் பலருக்கு எழுதிய கடிதங்களும் அவற்றிற்குப் பெறப்பட்ட பதில்களும் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. வழக்குகள் பற்றிய பயனுள்ள செய்திகளும் இக்கடிதங்கள் வாயிலாக நமக்குக் கிடைக்கின்றன.

## வாழ்க்கை விளக்க நூல்கள் (Biographies)

வாழ்க்கை விளக்க நூல்கள் மிகச்சிறந்த வரலாற்றுச் சான்றுகளைக் கொண்டமைகின்றன. அதிகாரிகள், அமீர் போன்றோரின் வாழ்க்கை பற்றிய செய்திகள் அவர்கள் மன்னர்கள் பிறருடன் கொண்ட தொடர்புகள், அவர்கள் வாழ்வில் நிகழ்ந்த பல்வேறு நிகழ்ச்சிகள் பற்றி அறிந்து கொள்ள இவை பெருமளவில் துணை புரிகின்றன. இத்தகைய சிறப்பு வாய்ந்த வாழ்க்கை விளக்க நூல்களில் சிறப்பான நூலாகச் சம்சாம் உத்தவுலா எழுதிய மஆசிர் உல்-உமரா என்ற நூலைக்

குறிப்பிடலாம். மூன்று பாகங்களாக உள்ள இந்நூலில் முகலாயப் பேரரசில் வாழ்ந்த பிரபுக்கள், அரசாங்க அதிகாரிகள் ஆகியோரின் வாழ்க்கை பற்றிய விளக்கங்களை நமக்குத் தருகின்றது.

(233) சதர்-உல்கீன் எழுதிய இர்ஷாத்-உல்-உஸரா எனும் வாழ்க்கை விளக்க நூல் முகலாயப் பேரரசில் வாழ்ந்த முகமதிய வஸீர்கள் சிலரின் வாழ்க்கைச் சுருக்கங்களை உள்ளடக்கியதாக அமைந்துள்ளது.

கேவல்ராம் எழுதிய தஸ்கிராத்-உல்-உமாரா் எனும் நூலில் அவுரங்கசீப் காலம் வரையில் வாழ்ந்த அமீர்களின் வாழ்க்கைக் குறிப்புகள் இடம்பெற்றுள்ளன. இரு பாகங்களாக அமைந்துள்ள இந்நூல் முகமதிய அமீர்கள் பற்றியும், இந்து அமீர்கள் பற்றியும் பல செய்திகளை உள்ளடக்கமாகக் கொண்டுள்ளது.

அமீர்களின் பெயர்கள் கால வரிசைக்கேற்ப வகைப் படுத்தப்பட்டுள்ளன. இது போலவே அமீர்களின் வாழ்க்கைக் குறிப்புகளை நிலப்பிரிவுகளின் அடிப்படையில் எழுதிய அமீன் அகமது ராஸியின் ஹப்ட் இக்லீம் அல்லது 203 அக்பர் காலத்தில் மிகவும் புகழ் பெற்ற நூலாகும்.

(16863) ஷாஜஹான் காலத்தில் வாழ்ந்த பிரமன் எழுதிய சஹார் சமன் எனும் நூல் அக்காலத்தில் ஆட்சி புரிந்த அமைச்சர்களின் வாழ்க்கைக் குறிப்புகளை எடுத்தியம்புவதாக உள்ளது.

## அரசியல் கோட்பாட்டு நூல்கள்

அரசியல் கோட்பாட்டு நூல்கள் வரலாற்றுச் சான்றாதாரங்களில் இன்றியமையாத பங்களிப்பை அளித்துள்ளன. முகலாயப் பேரரசின் ஆட்சிக்காலத்தில் அரசியல் கோட்பாட்டு நூல்கள் பல எழுதப்பட்டுள்ளன (253) சுலூக் உல் முலூக், ஆசார்-உல்-வுஸரா (1920) போன்ற அரசியல் கோட்பாட்டு நூல்கள் மன்னர்கள் வஸீர்கள் ஆகியோரின் அரசியல் தொடர்பான செய்திகளைத் தெளிவாக அறிவிப்பனவாக உள்ளன.

ஹனாஃப் பிரிவைச் சார்ந்த ஃபாஸல் பின்ரோஸி, பஹான் இஸ்ஃபஹானி என்பவரால் எழுதப்பட்ட (253) சுலூக் உல் முலூக் எனும் நூல் முகமதிய சட்டப்படி ஆட்சி செய்வது எப்படி என்பது பற்றி எழுதப்பட்டதாகும். முகமதிய அரசின் அனைத்து அமைப்புகள் பற்றியும் இந்நூலில் அவர் எழுதியுள்ளார். அல்மாவதி என்பவரால் எழுதப்பட்ட அஹ்காம்-இ-சுல்தானியா எனும் நூலை ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்ட இந்நூலானது 15 அதிகாரங்களை உடைய ஆய்வுக் கட்டுரையாகும்.

(7618) ஸகிரத்-உல்-முலூக் எனும் மற்றொரு அரசியல் கோட்பாட்டுச் செய்திகள் குறித்த நூலானது அலிபின் ஷாஹாப் ஹம்லானி என்பவரால் எழுதப்பட்டதாகும்.

முகமதிய சகாப்தம் எட்டாம் நூற்றாண்டில் எழுதப் பெற்ற இந்நூல் மன்னர் தம் கடமைகள், மக்களின் உரிமைகள் போன்ற செய்திகளைப் பத்து அதிகாரங்களில் விளக்கமாகக் குறிப்பிடும் வகையில் அமைந்துள்ளது.

முகமதிய அரசுகளில் பணியாற்றிய புகழ்பெற்ற வஸீர்களின் வாழ்க்கைக் குறிப்புகளை (1920) ஆசர்-உல்-வுஸரா எனும் நூல் விளக்குகின்றது. பிரெஞ்சு மொழியில் 1883ம் ஆண்டு ஷிஃப்பர் என்பவரால் தொகுத்து வெளியிடப்பட்ட அதாப்-இ-சல்தானத்வா விஸாரத் எனும் நூல் மன்னர்கள் மற்றும் அமைச்சர்களின் கடமைகளை விளக்குவதாக அமைந்துள்ளது. எனினும் இந்நூலை எழுதிய ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

(254) சுலூக் உல் சுல்தான் என்ற மொழிபெயர்ப்பு நூலானது எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்த கையெழுத்து ஏட்டிலிருந்து சாஸ்ஸாலி என்பவரால் மொழிபெயர்க்கப் பட்டது ஆகும்.

(256) இது வஸீரின் கடமைகள் பற்றி குவாஜா-நிஜாம்-உல்-முல்க் என்பார் தமது மகனான ஃபகுர் உல்-முல்கிற்கு எழுதிய மடலாகும். அல்மாவதி எனும் புகழ் பெற்ற முகமதிய சட்ட வல்லுநரால்

அக்ஹாம்-இ-சுல்தானியா என்ற நூல் அரபு மொழியில் எழுதப்பட்டது. மேலும் ஃபிரெஞ்ச், உருது போன்ற மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்ட முகத்மா-இ-தாரீக்கி-இபினி எனும் நூல் முகமதிய நாடுகளில் நிலவிய ஆட்சித் துறைகள் பற்றி அறிந்து கொள்ள உதவுகின்றது. நிஜாம்-உல்-முல்க் என்பவரால் எழுதப்பட்ட சியாசத் நாமாவும் சிறந்த அரசியல் கோட்பாடுகளை உள்ளடக்கியதாக உள்ளது. இந்நூல் பாரசீக மொழியில் வெளியிடப்பட்ட நூலாகும்.

## ஐரோப்பியப் பயணிகளின் நினைவுக் குறிப்புகள்

நினைவுக் குறிப்புகள் பயனுள்ள செய்திகளைத் தரும் ஆதாரங்களாகும். பிற ஆதாரங்களிலிருந்து கிடைத்த செய்திகளை ஒப்பிட்டுப் பார்க்கவும் அவைகளைத் திருத்தி அமைப்பதற்கும் இவை பெரிதும் துணைபுரிகின்றன. ஐரோப்பியப் பயணிகள் தந்த குறிப்புகள் அரசர்கள், ஆட்சி முறை, அவர்கள் தொடர்பு கொண்ட அதிகாரிகள், மேற்கொண்ட பயணங்கள் ஆகியன பற்றி விளக்கமாக எடுத்துரைக்கின்றன. எனினும் இவர்களது நினைவுக் குறிப்புகளில் இந்தியாவைப் பற்றிய செய்திகள் ஏதும் இடம்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும். இத்தகைய சிறப்புமிக்க நினைவுக் குறிப்புகள் எழுதுவதில் மான்சிர்ராடின் பங்களிப்பு போற்றுதற்குரியதாகும். அபுல்பாஸலுடன் அவர் கொண்ட நட்பின் மூலமாகப் பெறப்பட்ட செய்திகள் பயனுள்ள குறிப்புகளாக அமைந்துள்ளன. அக்பரது ஆலோசனைக் குழுக்கள், அவரது ஆராய்ச்சி முறை அவர் நடத்திய விவாதங்கள், ஆட்சி முறை குறித்து மான்சிராட் தரும் விபரங்கள் அக்பரது காலத்தை அறிந்து கொள்ளப் பேருதவி புரிகின்றன.

தொடர்ந்து பலர் இத்தகைய பணியை மேற்கொண்டிருந்தனர். எனினும் மான்சிராட்டின் பணியே சிறப்பானதாகக் கருதப்படுகின்றது. அவரைத் தொடர்ந்து டி.லேயட் என்பவரால் எழுதப்பட்ட குறிப்புகள் அரசாங்கத்தின் சில கூறுகள் பற்றி அறிந்து கொள்ள உதவுகின்றன.

தாமஸ்ரோவோ, டெர்ரி, டெல்சியர்ட் போன்றோரும் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர்.

சர் தாமஸ் ரோ (1615-1618) ஜஹாங்கீர் ஆட்சிக் காலத்தில் ஆஜ்மீரிலும், குஜராத்திலும், எட்வர்டுஜெர்ரி (1616-1619) பெல்சியர்ட் ஜஹாங்கீர் ஆட்சிக் காலத்தில் (1622-1627) ஆக்ராவிலும், ஃபிஞ்ச் ஜஹாங்கீர் ஆட்சிக் காலத்தில் (1610)ல் ஆக்ராவிலும், 1611இல் லாகூரிலும் பயணம் செய்து தம் நினைவுக் குறிப்புகளை எழுதியுள்ளனர்.

1. தபகாத்-இ-நாசிரீ
2. பர்ணி எழுதிய தாரீக்கி ஃபிரூஸ்ஷாஹி
3. தாரீக்கி முபாரக் ஷாஜி
4. தாரீக்கி தாஊதி
5. சிராஜ் அஃபீஃப் என்பார் எழுதிய தாரீக்கி ஃபிரூஸ்ஷாஜி

## குறிப்புகள்

1. மதுரைக் காஞ்சி, அடி 321-323, NCBH.
2. முல்லைப்பாட்டு, அடி 54-61, NCBH.
3. அகநானூறு, அடி 149, NCBH.
4. முகம்மது உவைஸ், பீ.மு. அஜ்மல்கான், இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு, தொகுதி-1, ப.9.
5. மேலது, ப.28.
6. மேலது, ப.29.
7. மு.மு. இஸ்மாயில், இனிக்கும் இராஜநாயகம், பா.எண். (15:3), பக்.215.
8. மேலது, ப.53.
9. ஜெயங்கொண்டார், கலிங்கத்துப்பரணி, ப.55.
10. இபின் ஹஸன், முகலாயப் பேரரசின் மைய அமைப்பு, 1991, பக்.125.
11. மேலது.
12. மேலது, ப.130.

## 2. இசுலாமியத் தமிழ் இலக்கிய வகைகள்

கடந்த நானூறு ஆண்டுகளில் நாலாயிரத்துக்கும் மேற்பட்ட தமிழ் இலக்கியங்களைப் படைத்துத் தமிழ் மொழிக்கு இசுலாமியப் புலவர்கள் ஆற்றியிருக்கும் தொண்டு போற்றுதற்குரியது. தமிழக வரலாற்றில் நான்காம் நூற்றாண்டிற்கும், ஏழாம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட முந்நூறு ஆண்டுக் காலத்தை "இருண்ட காலம்" என்பர். இதே போன்று கி.பி.16ஆம் நூற்றாண்டிற்கும் 19ஆம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலமும் 'இருண்ட காலமாகவே' கருதப்படுகின்றது. நவாபுகளும், நாயக்கர்களும், மராத்தியர்களும் ஆட்சி செலுத்திய காரணத்தினால் பிற மொழியாளர்களின் செல்வாக்கு மிகுந்திருந்த அக்காலக் கட்டங்களில் போற்றத்தகுந்த சிறந்த இலக்கியங்கள் பெரிய அளவில் எழவில்லை. புலவர்களைப் போற்றுகின்றவர்கள் அருகிப் போனதும், உள்நாட்டுப் போர்களும் பூசல்களும் பெருகி, வேற்றுநாட்டாரின் தாக்குதலுக்குத் தமிழகம் ஆட்பட்டுக் கிடந்ததும் தமிழ் இலக்கியச் செறிவு இக்காலக்கட்டத்தில் குறைந்தமைக்குப் பெரும் காரணமாக இருக்கின்றது. பேரிலக்கியங்கள் யாத்த நிலையினின்றும் இறங்கி, தனிப்பட்டோரைப் பாராட்டிப் பயன்பெறுவதற்காகப் பிரபந்தங்கள் என்னும் இலக்கிய வகைமையின் வடிவில் சிற்றிலக்கியங்கள் எழுந்தன.

இச்சமயத்தில் வியாபாரத்திற்கெனக் கடல்கடந்து வந்த வணிகப் பெருமக்கள் "நீரோடு நீர் கலந்தாற்போல" நாடு, மொழி, இன, சமய நிற வேறுபாடுகளை மறந்து தமிழகத்திற்குள் குடிபுகுந்தனர். இதனால் பண்டுதொட்டே பல்வேறு இனத்தவரும் வெவ்வேறு சமயத்தவரும் தமிழ்மொழியைப் படித்து இலக்கியம் படைக்க முயன்ற முனைப்பு வெளிப்பட்டது. இதன்விளைவாகத் தத்தமதே என ஒவ்வொருவரும் உரிமை பாராட்டுமளவு தமிழ் இலக்கியப்பரப்பு விரிந்து, பரந்து, நிறைந்து நின்றிருக்கின்றது

சமயம் பார்த்து வணிகம் செய்ய மட்டும் அந்நியர் வரவில்லை. தங்கள் சமயத்தைப் பரப்புவதற்கும் தமிழகம் புகுந்தனர். வடக்கே இருந்து வந்த சமண, பௌத்த சமயங்களும் கடல்கடந்து வந்த கிறித்தவமும் இசுலாமும் எத்தனையோ தத்துவக் கருத்துக்களைத் தமிழ்மக்களை நோக்கி விரைந்து வீசிய வண்ணம் இருந்தன. தமிழகம் எல்லாவற்றையும் செவிமடுத்தது. வேற்றுச் சமயத்தினர் தமிழகத்தில் தங்களின் இருத்தலை நிலைநிறுத்திக் கொண்டதோடு, தங்கள் கருத்துக்களைத் தமிழ்மொழி வாயிலாக இலக்கிய வடிவில் எடுத்துச் சொல்லும் முயற்சியிலும் ஈடுபட்டனர். இதன் மூலம் இச்சமயங்கள் தமிழ்மொழியின் அம்சங்களைச் சுய தேவைகளுக்குப் பயன்படுத்தும் முயற்சியில் வெற்றிபெற்றன. பல்வேறு சமயத்தைச் சேர்ந்தவர்களும் தத்தம் இலக்கியங்களைத் தமிழ் மொழியில் வெளிப்படுத்தி, தத்தம் வேதமொழியாகத் தமிழை அறிவித்துக் கொண்டும், புனித மொழியாக ஏற்றுக் கொண்டும் பணி செய்தனர். இலக்கியம் படைத்தனர். ஆனால் தமிழின் வழி வெளிப்பட்ட கருத்துக்கள் தங்களின் சமயக் கொள்கை வெளிப்பாடுகளாக மட்டுமே இருந்தன. இவ்வாறே சீரும் சிறப்பும் மிக்க தமிழ்மொழியில் பேரும் புகழும் வாய்ந்த இசுலாமிய அடிப்படையில் பா வளமும் உரை வளமும் மிக்க இலக்கியங்கள் தோன்றலாயின.

இலக்கிய வரலாற்று ஆசிரியர்கள் பல்லவர்காலம், சோழர்காலம், நாயக்கர் காலம் என்று காலவாரியாக வரலாற்றை வரையறுக்கின்ற போது 16ஆம் நூற்றாண்டிற்கும் 19ஆம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலத்தை இசுலாமியர் காலம் என்று குறிப்பிடுமளவிற்கு இசுலாமிய இலக்கியங்கள் பெருக்கெடுத்தன. இம்மூந்நூறு ஆண்டுக் காலங்களில் உருவாகி வெளிவந்த இலக்கியங்கள் எண்ணிக்கை அடிப்படையில் மட்டுமல்லாமல் கருவிலும் உருவிலும் கூடத் தனிப்பட்ட நிலையில் அடையாளத்தைப் பதித்துக் கொண்டுள்ளன.

இலக்கியத்திற்கு இலக்கணம் கூறுகின்றபோது அறம், பொருள், இன்பம், வீடடைதல் நூற்பயனே என்று பவணந்தி முனிவர் தனது நூலான 'நன்னூலின்' பொதுப்பாயிரத்தில் குறிப்பிடுகின்றார். இவ்விலக்கணம் முழுமையும் அமையப் பெற்ற இலக்கியங்கள் 'பேரிலக்கியங்கள்' என்றும் இவற்றில் ஒன்றோ

பலவோ குறைந்துவரின் அவற்றைச் 'சிற்றிலக்கியங்கள்' என்றும் வரையறுக்கின்ற போக்கு பண்டைத் தமிழ்மரபில் உள்ளதாகும். இரண்டாவது நிலையில் உள்ள சிற்றிலக்கியங்களைப் பிரபந்தங்கள் என்றும் வழங்கினர். "நன்கு கட்டப்பட்ட நூல்" என்று பொருள் கொள்ளப்படும் இந்த இலக்கிய வகையைப் படைப்பதில் இசுலாமியர்கள் அதிக ஈடுபாடு காட்டியுள்ளனர். தமிழ்ப் பேரகராதி பிரபந்தம் என்பதற்குத் 'தொண்ணூற்றாறு வகைப்பட்ட நூல்', 'இசையுரு', 'கட்டுரை' என்று பொருள் கூறுகின்றது. 'பிரபந்தம் என்னும் வடசொல் தமிழில் நூல் என்று பொருள் படும்' என்று களஞ்சியம் விளக்குகின்றது. ஆகவே சிற்றிலக்கியங்களைச் "சிறு பிரபந்தங்கள்" என்று வழங்கி வந்தனர். காலப்போக்கில் 'பிரபந்தம்' என்ற சொல்லே சிற்றிலக்கியம் என்னும் பொருளைத் தருவதாக மாறிற்று.

பிரபந்தம் என்பதற்கு மு. அருணாசலம் அவர்கள் தமது "தமிழ் இலக்கிய வரலாற்றுக்கு ஓர் அறிமுகம்" என்ற ஆங்கில நூலில் அளித்துள்ள விளக்கத்தில் "பிரபந்தம் தெய்வத்தின் மீதோ அல்லது வள்ளல் மீதோ பாடப்பெறும் ஒரு சிற்றிலக்கியம். அதன் பொருள் அகமாகவும் இருக்கலாம். புறமாகவும் இருக்கலாம். அதன் யாப்பு வடிவம் ஆசிரியம் தொடங்கி விருத்தம், கலிவெண்பா வரை எந்த வகையினதாகவும் இருக்கலாம். பாடல் எண்ணிக்கைக்கும் வரையறை இல்லை. ஆயினும் சில இலக்கியங்கள் பாடல் எண்ணிக்கையை 5, 8, 20, 40, 70, 400 என வரையறுத்துக் கூறுகின்றன"[1] என்று குறிப்பிட்டுள்ளார். தமிழ்மொழியிலும் 96 வகைச் சிற்றிலக்கியங்கள் உள்ளதாகவும், அவற்றின் வகைகள் பற்றியும், பிரபந்த மரபியல், பிரபந்த தீபிகை, சதுரகராதி, தொன்னூல் விளக்கம் போன்ற நூல்கள் கூறுவதோடு அவற்றுக்கான இலக்கணங்களையும் கூறியுள்ளன. ஆயினும் 96 என்ற வரையறைக்குள் சிற்றிலக்கியங்களை அடக்கிவிட முடியாது என்ற கருத்தும் உள்ளது. இவ்வரையறைக்குள் அடங்காத சிற்றிலக்கியங்கள் பலவும் பிற்காலத்திலேயே தோன்றியுள்ளன.

இசுலாமியத் தமிழ்ப்புலவர்கள் இச்சிற்றிலக்கிய வகைகள் பெரும்பாலானவற்றிலும் தமது இலக்கியங்களைப் படைத்துள்ளனர். தமிழுக்கே உரிய இலக்கியப்பண்புகளை உள்வாங்கிக் கொண்டு காப்பியம், புராணம் போன்ற இலக்கிய

வகைமைகளில் கால வளர்ச்சிக்கேற்பப் புதிய இலக்கியங்கள் பலவற்றை இசுலாமியத் தமிழ்ப்புலவர்கள் படைத்துள்ளனர். ஆனால் அவர்களது அதிகமான ஈடுபாடு சிற்றிலக்கியங்களைப் படைப்பதில் வெளிப்பட்டுள்ளது. அதிக எண்ணிக்கையில் சிற்றிலக்கியங்களைப் படைத்தளித்ததோடு, கிஸ்ஸா, நா்மா, மசலா போன்ற புதுவகையான சிற்றிலக்கியங்களைத் தமிழுக்கு இசுலாமியர்கள் அறிமுகப்படுத்தவும் செய்துள்ளனர்.

## இசுலாமியக் காப்பியங்கள்

உலகின் எம்மொழியிலும், அம்மொழியின் இலக்கியத் தரத்தையும், அம்மொழி பேசும் மக்களின் பண்பாட்டையும் காலந்தோறும் சிதையாமல் காத்து வரும் இலக்கியங்கள் தாம் "காப்பியங்கள்" எனப்படுகின்றன. ஏதேனும் ஓர் இலக்கை நோக்கி இயல்வது இலக்கியமாவதைப் போன்று, பண்பாட்டுக் கூற்றினை அடிப்படையாகக் கொண்டு இயல்வது "காப்பியம்" ஆகும்.

தமிழில் காப்பியங்களை இதிகாசம், புராணம், பெருங்காப்பியம், காப்பியம், கதைப்பாடல், சிற்றிலக்கியம் என வகைப்படுத்தலாம். இவற்றிற்கிடையே சிறுசிறு வேறுபாடுகள் இருப்பினும், காப்பியங்கள் என்றே இவை அழைக்கப்பட்டு வந்துள்ளன. வடமொழியில் கவியால் எழுதப்படும் அனைத்தையும் "காவியம்" என்ற சொல்லால் குறித்தனர்.

காப்பியத்தின் பாடுபொருள், வெளியிடும் பாங்கு ஆகியவற்றுக்கேற்பக் கீழ்க்கண்டவாறு காப்பியங்களை வகைப்படுத்தலாம்.

1. வீரக் காப்பியம் (Heroic epic)
2. வரலாற்றுக் காப்பியம் (Historical epic)
3. கற்பனைக் காப்பியம் (Romantic epic)
4. கலைக் காப்பியம் (Literary epic)
5. அறக்காப்பியம் (Moral epic)
6. செந்நடைக் காப்பியம் (Classical epic)
7. நகைச்சுவைக் காப்பியம் (Burlesque epic)
8. தேசியக் காப்பியம் (National epic)
9. புராணக் காப்பியம் (Mythological epic)
10. சமயக் காப்பியம் (Religious epic)

தமிழ் இலக்கிய வரலாறு தரும் பலவகைக் காப்பியங்களைப் பார்க்கும் போது அவற்றைப் பல அடிப்படைகளில் வகைப்படுத்தலாம் எனத் தெரிகின்றது. சமயக்காப்பியம் என ஒரு பெரும் பிரிவினைக் கொண்டு, அதன் கீழ்ச் சமணம், பௌத்தம், சைவம், வைணவம், கிறித்தவம், இசுலாமியம் எனப் பாகுபடுத்தலாம். காப்பியத்தின் தலைமைப் பாத்திரத்தின் அடிப்படையிலும் கடவுட்காப்பியம், அடியவர் காப்பியம், அரச காப்பியம், மக்கள் காப்பியம் என்று பிரிக்கப்படுகிறது. கதையின் அடிப்படையில் ஒரு தலைமுறைக் கதை கூறும் காப்பியம் எனவும் பலதலைமுறைக் கதைகூறும் காப்பியம் எனவும் பகுக்கப்படுகின்றது.

இசுலாமியர் வழங்கிய மொத்த காப்பியங்களின் எண்ணிக்கை 27 ஆகும். இதில் 18 பெருங்காப்பியங்களாகவும் 9 சிறு காப்பியங்களாகவும் விளங்குகின்றன. இவற்றில் காப்பிய இலக்கணங்கள் முறையாகப் பின்பற்றப்பட்டுள்ளன. ஆகவே அதிக அளவில் காப்பியங்களை இயற்றி, அருந்தமிழுக்கு ஆக்கம் சேர்த்த சிறப்பு இசுலாமியர்களுக்கே உரியதாகும்.

## இசுலாமியக் காப்பியங்கள்

இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய முதல் தமிழ்க்காப்பியம் "கனகாபிஷேக மாலை" ஆகும். ஹிஜ்ரி 1058ஆம் ஆண்டில் (கி.பி. 1648) வெளியிடப்பட்ட, இக்காப்பியத்தை இயற்றியவர் கனகக் கவிராயர் ஆவார். இவருடைய இயற்பெயர் "ஷேகுநயினார்" என்பதாகும்.

"கனகாபிஷேகம் என்றால் பொன்னால் குளிப்பாட்டுதல்" என்று பொருள் படும். இக் கனகாபிஷேக மாலையில் எட்டு மன்னர்கள் ஒருவர் பின் ஒருவராக ஆட்சிப்பொறுப்பை ஏற்கின்றனர். பின் முடிசூட்டப்படுகின்றனர். அபிஷேகம் செய்யப்படுகின்றனர். அந்த எட்டு மன்னர்கள் ஆட்சிக்கு வருவது பற்றிய விவரங்கள் "கனகாபிஷேக மாலையில்" சிறப்பாக ஒரு மாலை போன்று தொடுக்கப்பெற்று இடம் பெறுவதால் இந்நூல் அப்பெயர் பெற்றுள்ளது''[2] என்று டாக்டர் உவைஸ் கூறியுள்ளார்.

"வீரக்காவியம்" என்று போற்றப்படும் "கனகாபிஷேக மாலை" திருநபி (ஸல்) அவர்களை முதல்வராகவும், செயினுலாபுதின் (ரலி) அவர்களை இறுதியாகவும் கொண்டு, அவர்கள் இவ்வுலகத்தை ஆண்ட வரலாற்றினை விவரிக்கின்றது. இந்நூலாசிரியர் "சீயாக் கொள்கையினை" உடையவராதலின் காப்பிய வருணனைகளில் அத்தகைய கருத்துக்களே அதிகமாக காணப்படுகின்றன.

உலகக் காப்பியங்களிலும், இசுலாமியக் காப்பியங்களிலும் சிறந்து விளங்கக் கூடியது சீறாப்புராணமாகும். இசுலாமியக் காப்பியங்களில் புகழ்பெற்று விளங்குவது சீறாப்புராணமாகும். "சீரத்" என்ற அரபுச்சொல்லுக்கு "வாழ்க்கை வரலாறு" என்பது பொருள். முகம்மது நபி (ஸல்) அவர்களின் வாழ்க்கை வரலாற்றைக் கூறுகின்ற தமது நூலுக்கு அரபு, தமிழ் மரபுகளை ஒருங்கிணைத்துச் "சீறாப்புராணம்" என்று பெயர் சூட்டினார் உமறுப்புலவர். பெருமானாரின் வரலாற்றைக் கூறும் அரபு நூல்களுள் இபுனுஇசாக் எழுதிய "சீரத் ரசூலுல்லாஹ்" என்ற நூலும், வாகிதி எழுதிய "கிதாபுல் மகாஸி" என்ற நூலும் குறிப்பிடத்தக்கவையாகும்.

சீறாப்புராணத்தில் வரலாற்று நிகழ்ச்சிகள் பெரும்பாலும் "இபுனு இசாக்கைப்" பின்பற்றியும், நபிப்பட்டம் பெறுவதற்கு முன்னுள்ள இளமைக் காலத்துக் கதைகள் "கிஸ்ஸீல் அன்பி" யாவைப் பின்பற்றியும், விருந்தளித்த அற்புத நிகழ்ச்சிகள் இமாம் அஹ்மதின் 'முஸ்னது' மற்றும் 'ஷிபா' என்ற நூல்களைப் பின்பற்றியும், போர் நிகழ்ச்சி விவரங்கள் வாகிதியைப் பின்பற்றியும் அமைந்துள்ளன. சில படலங்கள் மொழிபெயர்ப்புக்கள் போலவே அமைந்துள்ளன என்கிறார்" கவிக்கோ அப்துல்ரகுமான்.[3] (குணிங்குடியார் பாடற்கோவை)

இசுலாமியர்களின் வருகையைத் தொடர்ந்தே தமிழகத்தில் இசுலாமியத் தமிழ் இலக்கியங்கள் தோன்றலாயின. அவர்களின் வருகையோடு அது தன் தோற்றத்தை முன்வைத்திருக்க இயலாது. தமிழ் மக்களுடன் கலந்து வாழ்ந்து, பழகித் தமிழில் பாண்டித்தியம் பெற்ற பின்னரே இசுலாமியத் தமிழ் இலக்கியம் படைக்கும் முயற்சியில் அவர்கள் ஈடுபட்டுள்ளனர். தமிழகம் வந்த பிற சமயங்களுள் காலத்தால் பிற்பட்டது இசுலாமிய

சமயமாகும். நபிகள் நாயகம், முகம்மது நபி (சல்) அவர்களின் பிறப்பிற்கு முன்பிருந்தே அரபுநாட்டு யவனர்கள் மேலைக் கடல் வழியாகத் தமிழகம் வந்து தமிழக மக்களோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தனர். சங்க கால இலக்கியங்களான பத்துப்பாட்டு, எட்டுத் தொகை நூல்கள் இவ் அரபு மக்களை 'யவனர்' என்ற பதத்துடன் குறிப்பிடுகின்றன. அக்காலத்திலேயே தமிழை அரபு எழுத்தில் எழுதி வழங்கும் வழக்கம் இருந்தது. அதன் பின்னர் 'நபிகள் நாயகம்' வாயிலாக 'இசுலாம் மார்க்கம்', 'இசுலாம் சமயம்' உலகெங்கும் பரவியபோது தமிழகத்திலும் பரவத் தொடங்கியது.

இசுலாமிய நெறிவயப்பட்ட தமிழறிஞர்கள் தாங்கள் உணர்ந்து தெளிந்த உண்மைகளைத் தமிழறிந்த மக்களிடையே எடுத்துரைக்கத் தமிழ் மொழியை நேரடியாகக் கையாண்டனர். அதன் பயனாக இசுலாம் தமிழ்நாடெங்கும் பரவலாயிற்று.

தொடக்க காலத்தில் முஸ்லீம்கள் தங்களின் வணிக நடவடிக்கைகளை வளப்படுத்துவதிலேயே ஆர்வம் செலுத்தினர். நாளடைவில் தமிழகத்தில் முஸ்லீம் மக்களின் குடியேற்றம் அதிகரிக்க அதிகரிக்க இசுலாமியத்தைப் பற்றிய அவர்களின் அறிவு விருத்தியடைய இசுலாம் பற்றிய நூல்கள் தேவைப்பட்டன. அக்காலத்தில் தமிழகத்தில் வாழ்ந்த இசுலாமியர்கள் தமிழைப் பேசக் கற்றிருந்தார்களே தவிரத் தமிழ் எழுதத் தெரியாதவர்களாகவே இருந்தனர். அதே சமயம் தங்களின் சமயநூலான 'அல்குர் ஆனை' ஓதக் கூடியவர்களாக இருந்தனர். அரபு எழுத்துக்களை வாசிக்கும் ஆற்றல் பெற்றவர்களாக இருந்தனர். எனவே அன்றைய தமிழ்நாட்டு இசுலாமியர்கள், இசுலாமிய நூல்களைக் கற்கும் வண்ணம் அரபு மொழியில் புலமைபெற்ற தமிழறிஞர்கள் பேச்சுத்தமிழ் நடைக்கு ஒப்பான ஒரு நடையைக் கையாண்டு இசுலாமியத் தமிழ் நூல்கள் எழுத முற்பட்டனர்.

தமிழ் நூல்களை எழுதிய முஸ்லீம் அறிஞர்களும் தமிழில் சிறந்த புலமை பெறாத காரணத்தால் இசுலாமியத்தைப் பற்றிய தமிழ் நூல்களை அரபு எழுத்துக்களால் எழுதினர். அவ் இசுலாமியத் தமிழ் இலக்கியங்களே 'அரபுத் தமிழ் இலக்கியங்கள்' என வழங்கப்பட்டன. காலப் போக்கில் அரபுத் தமிழில்

எழுதப்பட்ட இசுலாமிய நூல்கள் தமிழ் எழுத்துக்களிலும் இடம்பெற்றன. தமிழ் இசுலாமியப் புலவர்கள் தமிழ் மொழியில் சங்க காலம் தொட்டு வழிமுறையாக வழங்கி வந்த இலக்கிய வகைகள் அனைத்திலும் இசுலாமிய இலக்கியங்களை எழுதிக் குவித்தனர். பதினாறாம் நூற்றாண்டில் வழக்கில் இருந்ததாகக் கூறப்படும் தொண்ணூற்றாறு வகைப் பிரபந்த வகைகளில் பெரும்பாலானவற்றில் இசுலாமியப் புலவர்கள் பாடல்களைப் புனைந்து நூற்களாக வெளியிட்டனர். அரபி, பாரசீக மொழிகளில் இருந்து புதிய இலக்கிய வகைகளையும் தமிழுக்குக் கொணர்ந்தனர்.

தமிழ் இலக்கியம் இரண்டாயிரம் ஆண்டுக் காலப் பரப்பையும் பல்வேறு இலக்கியக் காலப் பகுதிகளையும் கொண்டதாகும். ஒவ்வொரு காலப்பகுதியும் பழைய வகைகளை வளர்த்திருக்கின்றது. மரபு அடிப்படையிலான புதிய வகைகளையும் தோற்றுவித்திருக்கின்றது. பிறமொழி இலக்கியங்களின் தாக்கத்தினால் மாற்றமும், வளர்ச்சியும் பெற்றிருக்கின்றது. காரணம், காலத்தின் அடிப்படையில் மக்களின் வாழ்க்கை மாறுபடும் போது இலக்கியங்களும் மாற்றமடைகின்றன. தொல்காப்பியம் காட்டும் "விருந்து" என்னும் வனப்பு காலந்தோறும் புதியனவாகப் படைக்கப்படும் புத்திலக்கியங்களைச் சுட்டுகின்றது. 'விருந்து' நூல்களின் இயல்பினை,

> விருந்தே தானும்
> புதுவது கிளந்த யாப்பின் மேற்றே"[4] (1495)

என்று தொல்காப்பியர் விளக்குகின்றார். இசுலாமியப் புலவர்கள் அறிமுகப்படுத்திய புதுவகைச் சிற்றிலக்கியங்கள் யாவும் இவ்வனப்பினுள் அடங்கும்.

> பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
> தமிழ் மொழியிற் பெயர்த்தல் வேண்டும்
> இறவாத புகழுடைய புதுநூல்கள்
> தமிழ் மொழியில் இயற்றல் வேண்டும்[5]

என்று மகாகவி பாரதியார் கண்ட கனவினை இசுலாமியத் தமிழ்ப் புலவர்கள் நிறைவேற்றியுள்ளனர். அரபு, பாரசீகம்

போன்ற மொழிகளில் புகழ்பெற்று விளங்கிய சில முக்கிய வகைகளைத் தமிழ் இலக்கிய உலகிற்கு அறிமுகப்படுத்தி யுள்ளனர்.

இசுலாமியப் பண்பாடு, கோட்பாடு, வரலாறு ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு தமிழில் தோன்றியுள்ள இவ்விலக்கியங்கள் இசுலாமியத் தமிழ் இலக்கியங்கள் என வரலாற்றில் தனித்துப் பேசுமளவுக்கு உயர்ந்தன. தமிழ் முஸ்லீம்களின் பண்பாட்டுக் கருவூலமாகவும், வரலாற்றுக் களஞ்சியமாகவும் இந்த இலக்கியங்கள் விளங்குகின்றன. மேலும் அண்ணல் நபி அவர்களது வாழ்வும் வாக்கும், நபிமார்கள், வலிமார்கள், இசுலாமியப் பெரியோர்கள் போன்றோரது வாழ்க்கை வரலாறு ஆகியவற்றையும் அறிவதற்குத் துணைபுரியும் சான்றாதாரங்களாகவும் விளங்குகின்றன.

இசுலாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் இரு பெரும் பிரிவுகளாக அறியப்படுகின்றன. அவை:

1. இசுலாமியர் தமிழ் வழிப் படைத்த பொதுவான சிற்றிலக்கியங்கள்
2. இசுலாமியர் புதிதாக அறிமுகப்படுத்திய புதுவகைச் சிற்றிலக்கியங்கள்.

## முதல் இசுலாமிய இலக்கியம்

கிஸ்ஸா, நாமா, படைப்போர், மசாலா, முனாஜத்து போன்ற புதுவகைச் சிற்றிலக்கியங்களை இசுலாமியர்கள் தமிழுக்குப் புதிதாக அறிமுகப்படுத்தினர். இவை அவர்களுக்கே உரிய தனி இலக்கிய வடிவங்களாகும். காரணம், இசுலாம் அல்லாத வேறு தமிழிலக்கியங்களில் இவ்விலக்கிய வகைகளை நம்மால் காணமுடியவில்லை. "முஸ்லீம் அல்லாத பிறரால் இந்தப் புதியவகை இலக்கியம் இயற்றப்படவில்லை என்பது இச்சிற்றிலக்கியங்களின் சிறப்பை உணர்த்துவதாகும்"[6] என்று சா. நசீமா பானு தனது இசுலாமியச் சிற்றிலக்கியங்கள் என்ற கட்டுரையில் உணர்த்துகின்றார். அம்மானை, அந்தாதி, ஆற்றுப்படை, பிள்ளைத்தமிழ், புராணம், கலம்பகம், கோவை, பாவை, மாலை போன்ற பலவகைப்பட்ட பழைய தமிழ்

இலக்கியங்களைப் பின்பற்றி இசுலாமியப் புலவர்கள் எழுதியுள்ள சிற்றிலக்கியங்களும் பெருமளவில் எழுந்துள்ளன. இந்த இலக்கியங்களின் அடிப்படைக் கொள்கை என்பது இசுலாமிய நெறிமுறைகளைப் பாமர மக்களுக்கும் சென்று சேர வைக்க வேண்டும் என்பதாகவே இருக்கின்றது. இசுலாமியச் சிற்றிலக்கியத்தின் பாடுபொருள்கள் அனைத்துமே இசுலாத்தின் நெறியாகவும், இசுலாமியப் பெரியார்களின் வாழ்வுவழிச் சிறக்கும் மறை நெறிகளாகவுமே உள்ளன. தமிழ் முஸ்லீம்கள் சமய நெறி சாராத இலக்கியங்களை அருகியே படைத்துள்ளனர் என்பதும் குறிப்பிடத் தக்கதாகும். பிற சமயத்தினரைச் சாடிப் படைக்கும் இலக்கியத் தன்மையும் இசுலாமிய இலக்கியங்களில் இல்லையென்றே கூறலாம். முஸ்லீம் தமிழ்ப் புலவர்கள் இசுலாமியக் கொள்கைகளைப் பரப்புவதை மட்டுமே தம் பெருநோக்காகவும், இலக்கியக் கொள்கையாகவும் கொண்டிருந்தனர். எனவேதான் இசுலாமியத் தமிழ் இலக்கியங்கள் பிற மதக் கண்டனங்கன் அற்றவை. பிறரைத் தம்வயப்படுத்தும் சமயப் பிரச்சாரங்கள் இல்லாதவை" என்று ஈழத்து வி. செல்வநாயகம் குறிப்பிட்டுள்ளார். ந.வீ. செயராமன் அவர்கள் சிற்றிலக்கியங்களின் பொதுவான இயல்பு பற்றி, 'சிற்றிலக்கியச்செல்வம்' என்ற நூலில் குறிப்பிடும் போது "சிற்றிலக்கியங்கள் அனைத்தும் சிற்றின்பப் பொருளை விளக்குவதாக அமைந்திருப்பினும் அவற்றுள் சில பேரின்பப் பொருளை விளக்கும் தத்துவக் குழையலாகவும் அமைந்துள்ளன" Fu ; \ôo! இசுலாமியச் சிற்றிலக்கியங்கள் எதுவும் சிற்றின்பத்தைப் பாடவில்லை என்பது அவற்றிற்குரிய தனிச்சிறப்பாகக் கருதப்படுகின்றது.

இசுலாமியத் தமிழ் இலக்கியங்களுள் ஏறத்தாழ மூன்றில் ஒரு பகுதிக்கும் மேற்பட்டவை இசுலாமியச் சிற்றிலக்கியங் களாகவே இருக்கின்றன. இசுலாமியத் தமிழ் இலக்கிய வரலாற்றின் தொடக்கமே ஒரு சிற்றிலக்கியத்தின் மூலம் தான் நிகழ்ந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கதாகும். கி.பி. 12-ம் நூற்றாண்டில் எழுந்ததாகக் கருதப்படும் "பல்சந்த மாலை" என்னும் இலக்கியமே முதன்முதலில் கிடைத்துள்ள இசுலாமியத் தமிழ் இலக்கியமாகும். இதனுள் இப்போது எட்டுப்பாடல்கள் மட்டுமே கிடைத்துள்ளன. இவற்றின் உள்ளடக்கச் செய்திகளைக்

கொண்டு 'பல்சந்த மாலை' என்னும் இலக்கிய நூலை ஒரு இசுலாமியத் தமிழ் இலக்கியம் என்ற வரையறையுள் அடக்கியிருப்பதை அறியலாம்.

மேற்கூறப்பட்ட செய்திகளால் இசுலாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்களின் தோற்றம் கி.பி.12ஆம் நூற்றாண்டு எனலாம். இசுலாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியப் போக்கில் காலத்தால் இரண்டாவதாகக் கருதப்படும் மற்றுமொரு இசுலாமிய இலக்கியம் கி.பி.1572ஆம் ஆண்டு வண்ணப் பரிமளப் புலவரால் இயற்றப்பட்ட 'ஆயிரமசலா' என்ற இலக்கியமாக இருக்கின்றது. தொடர்ந்து கி.பி. 14 முதல் 20ம் நூற்றாண்டு வரையிலுமாக ஏழு நூற்றாண்டுக் கால எல்லைப் பரப்பினை இசுலாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் பெற்று விளங்குகின்றன. இந்த ஏழு நூற்றாண்டுகளின் இடைவெளியில் ஏறத்தாழ ஓராயிரத்துக்கும் மேற்பட்ட இசுலாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் தோன்றியுள்ளன.

இசுலாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்களை அவை சார்ந்துள்ள இலக்கியத்தின் அடிப்படையில் பின்வரும் பிரிவுகளாகப் பிரித்துள்ளனர்.

- இசுலாமியச் சமயத்தின் அடிப்படைக் கருத்துக்களையும் நெறிகளையும் கூறுவன.
- இசுலாமிய மார்க்க வரலாற்று நிகழ்ச்சிகளை எடுத்துரைப்பவை.
- பெருமானார் நபிகள் நாயகம் (சல்) அவர்களைத் தலைவராகக் கொண்டு படைக்கப்பட்டன.
- இறைநேசச் செல்வர்களைப் பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்டவை.
- புலவர் ஆதரித்த புரவலர்களைப் பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்டவை.
- இசுலாமியப் புண்ணியத் தலங்களைப் புகழ்ந்துரைக்கும் பாடல் செய்திகளைக் கொண்டவை.
- அகப்பொருள் பற்றியவை

- இசுலாமிய விழாக்களின் போது மட்டுமே படிப்பதற்கான செய்திகளை உள்ளடக்கமாகக் கொண்டு இயற்றப்பட்டவை.
- குறிப்பிட்ட சமய நிகழ்வுகளில் கடைபிடிக்க வேண்டிய ஒழுகலாறுகளை மட்டுமே பாடுபொருளாகக் கொண்டவை என்ற வகைகளில் எழுதப்பட்டுள்ளன.

புதிதாகத் தமிழுக்கு அறிமுகப்படுத்தப்பட்ட இலக்கியங்களில் மசலா, கிஸ்ஸா, முனாஜத்து ஆகிய மூன்று இலக்கிய வகைகள் அரபு மொழியினின்றும் தமிழுக்கு வந்து சேர்ந்த இலக்கிய வடிவங்களாகும். 'நாமா' என்ற இலக்கியப் பிரிவு பாரசீக மொழியினின்றும் தமிழுக்கு வந்து சேர்ந்ததாகும். படைப்போர், நொண்டி நாடகம், திருமண வாழ்த்து மற்றும் அரபுத் தமிழ் முதலிய இலக்கிய வகைகள் தமிழுக்கென்றே இசுலாமியத் தமிழர்களால் படைக்கப்பட்டவை ஆகும்.

## மசலா இலக்கியங்கள்

மசலா என்பது அரபுச் சொல்லான 'மஸ்அலா' என்பதிலிருந்து மருவி வழங்கும் சொல்லாகும். 'மஸ்அலா' என்ற அரபுச் சொல் தேடுதல், வினவுதல், வினா, சிக்கல் போன்ற பொருள்களை உடையதாகும். இச்சொல் 'ஸீ ஆல்' என்ற அரபுச் சொல்லினடிப்படையில் பிறந்ததாகும். இசுலாமிய மார்க்கத் தொடர்பான கேள்விகளையும், மறு மொழிகளையும் கொண்ட ஒரு சிற்றிலக்கிய வகையே மசலா என்பதாகும். இசுலாமிய மார்க்கம் பற்றிய நிறையறிவு பெற்றவரிடம் ஒருவர் சென்று, இசுலாமிய நெறிபற்றி மேலும் தெரிந்து கொள்ள, தெளிவு பெற வினா எழுப்பி, உரிய விடைகளைப் பெற்று ஐயந்தீர்த்துக் கொள்வதை 'மஸ் அலா கேட்டறிதல்' என்று கூறுகின்றனர். எனவே கேள்வியை உள்ளடக்கியதான மசலா இலக்கியங்கள் பெரும்பாலும் கேள்வி பதில் வடிவிலான தமிழ் இலக்கியமாக வெளிப்பட்டுள்ளன. கவிஞன் தன்னுடைய கற்பனை வளத்தைப் புகுத்திக் கூறும் மிகைக் கூற்றுக்கள் இதனுள் அதிகமாக இடம்பெறுகின்றன. ஆயிரம் மசலா, நூறுமசலா, வெள்ளாட்டி மசலா என்ற மூன்று இலக்கியங்களும் பரவலாகப் பேசப்படுவனவாக இருக்கின்றன.

## ஆயிர மசலா

மேற்கூறிய மூன்று இலக்கியங்களில் அளவில் பெரியது ஆயிர மசலாவாகும். அதோடு இவ்விலக்கியம் காலத்தாலும் மிகவும் முற்பட்டதாகும். நமக்கு முழுமையாகக் கிடைக்கப் பெற்றுள்ள முதல் இசுலாமிய இலக்கியம் என்ற சிறப்பிற்குரிய ஆயிர மசலாவை கி.பி. 1572ஆம் ஆண்டு மதுரை வண்ணப் பரிமளப்புலவர் இயற்றியுள்ளார். இசுலாமியத் தமிழ் இலக்கிய வரலாற்று அடிப்படையில் நோக்கும் போது தமிழில் இயற்றப்பட்ட இசுலாமிய இலக்கியங்களில் இந்நூலே முதலாவது நூலாகக் கருதப்படுகின்றது. இந்நூலின் முழுமையான பெயர் 'ஆயிர மசலாவென்று வழங்கும் அதிசய புராணம்' என்பதாகும்.

'செய்கு முதலி இஸ்ஹாக்' என்னும் வண்ணப் பரிமளப் புலவர் 1095 பாடல்களைக் கொண்ட இந்நூலைக் காப்பியப் போக்கில் எழுதியுள்ளார். இசுலாத்தைப் பற்றி அறியாத யூதர்கள் கேட்ட கேள்விகளுக்கு விடை பகரும் வகையில் ஆயிரமசலா அமைந்து உள்ளது. யூதர்கள் சார்பாக அப்துல்லா இபீனு சலாம் கேள்வி கேட்க அக்கேள்விகளுக்கு அண்ணல் நபிகள் பதிலளித்தார் என்று குறிக்கப்பட்டுள்ளதிலிருந்து இந்நூல் நபிகளின் வாழ்வையும் வாக்கையும் உள்ளடக்கிய ஹதீது அடிப்படையில் உருவாக்கப்பட்டது என்பது தெளிவாகின்றது. ஆயிரமசலா எனப் பெயர் பெற்றிருந்தாலும் இந்நூலினுள் முந்நூறு கேள்விகள் மட்டுமே கேட்கப்படுகின்றன. எனினும் அக்கேள்விகளுக்கான விடைகளாக ஆயிரம் இசுலாமிய உண்மைகள் தர்க்கவாத அடிப்படையில் ஆசிரியரால் எடுத்துக் கூறப்படுகின்றன. பெருமானார் அளித்த மார்க்க விளக்கங்கள் மனதுக்குப் பொருத்தமானதாக இருந்ததால் அப்துல்லா இபீனு சலாம் இசுலாத்தைத் தழுவினார் என்றும், அவரோடு இருந்த எழுநூறு பேரடங்கிய தூதுக் குழுவினரும் இசுலாத்தில் விருப்பத்தோடு இணைந்தனர் என்ற செய்தியையும் ஆயிரமசலா கூறுகின்றது.

மசலா இலக்கிய வகைகளுள் காலத்தால் இரண்டாம் இடத்தைப் பெறுவது 'வெள்ளாட்டி மசலா' எனும் நூலாகும். இதன் இயற்பெயர் 'தவத்தூது' என்ற 'வெள்ளாட்டி மசலா'

என்று கூறப்படுகின்றது. காயல்பட்டினத்தைச் சேர்ந்த ஷெய்கப்துல் காதிறு லெப்பை என்பவரால் இயற்றப்பட்டு 1856இல் வெளிவந்த நூலாகும். ஆயிரமசலா தோன்றிய பின்னர் மிக நீண்ட இடைவெளிக்குப் பின்னரே 'வெள்ளாட்டி மசலா' வெளிவந்தது. இந்நூல் ஆயிரமசலா நூலினின்றும் வேறுபட்டு வசன நடையில் இயற்றப்பட்டுள்ளதாகும். தமிழில் அமைந்துள்ள மூன்று மசலா நூல்களில் உரைநடையில் அமைந்துள்ள மசலா நூல் இது ஒன்றேயாகும். இந்நூலினுள் 669 வினாக்களுக்கு விடை தரப்பட்டுள்ளது. வெள்ளாட்டி எனும் தமிழ்ச் சொல் 'பணிப்பெண்' என்று பொருள் கொள்ளப்படுகின்றது.

வெள்ளாட்டி மசலா இசுலாமிய நெறிமுறைகள் பெரும்பாலானவற்றைத் திருக்குர் ஆன், ஹதீது அடிப்படையிலும் நபிமார்களின் வாழ்க்கை வழியையும் அவரது குணநலன்களை எடுத்துக் கூறுவதாகவும் அமைந்துள்ளது. நான்கு உலமாக்கள் தொகுக்கின்ற வினாக்களுக்கு வெள்ளாட்டி தரும் பதில்களாகப் படிப்பவர்களுக்குச் சுவையூட்டுவதோடு இசுலாமியத் தகவல் களஞ்சியமாகவும் அமைந்துள்ளது.

நூல் முழுவதும் உலமாக்கள் கேட்கும் கேள்விகள் 'சவால்' என்றும் தவத்தூது அளிக்கும் பதில்கள் 'ஜவாபு' எனவும் குறிக்கப்படுகின்றன. அரபு மொழியில் சவால் என்ற சொல்லுக்கு 'வினா' எனவும் 'ஜவாபு' என்ற சொல்லுக்குப் 'பதில்' எனவும் பொருள் கொள்ளப்படுகின்றது. தமிழிலுள்ள மூன்று மசலாக்களிலும் பொருளடக்கத்தில் வெள்ளாட்டி மசலாவே சிறந்து விளங்குவதாக, ஞானச் செய்திகளை அதிகமாக உட்கொண்டதாக உள்ளது. 'ஆயிர மசலா', 'நூறு மசலா' என்ற இரண்டும் செய்யுள் வடிவில் அமைந்திருக்க 'வெள்ளாட்டி மசலா' உரைநடையில் அமைந்திருப்பது சிறப்பிற்குரியதாகும். இதனால் பிற இரண்டு மசலாக்களை விட வெள்ளாட்டி மசலாவில் அரபிய, பெர்சியச் சொற்கள் அதிகமாகக் கலந்துள்ளன. வினாவிடை அமைப்பின் மூலம் நுட்பமான வினாக்களுக்கும் தெளிவாக எளிய நடையில் விளக்கங்கள் தரப்படுவதால், இசுலாமிய அடிப்படைக் கொள்கைகளை எவரும் எளிதில் அறிவதற்கு மசலா இலக்கியங்கள் துணைபுரிகின்றன.

மசலா வகை இலக்கியங்களுள் காலத்தால் மூன்றாவது இடத்தைப் பெறுவது 'நூறு மசலா' என்னும் இலக்கியமாகும். செய்யுள் வடிவில் அமைந்துள்ள 'நூறு மசலா' எழுதப்பட்ட காலம், எழுதப்பட்ட சூழல், ஆசிரியர் பற்றிய குறிப்பு போன்றவை கிடைக்கவில்லை. ஆயினும் நூலின் முதற்பதிப்பு 1876இல் முகம்மது சாஹிப் என்பவரால் வெளியிடப்பட்டுள்ளது. மற்ற இரு மசலா நூல்களை விட இந்நூலே அதிகமான பதிப்புக்களைப் பெற்றுள்ளது. 1087 கண்ணிகளாக அமைந்துள்ள நூறுமசலா நூல் பகுவீறு நாட்டு மன்னனின் மகள் மெஹர் பானுக்கும், 'அஹமது ஷா' என்னும் மன்னன் மகன் 'அப்பாஸ்' என்பாருக்குமிடையே நடைபெற்ற வினா-விடைகளாக அமைந்துள்ளது. ஆயிரமசலா, வெள்ளாட்டி மசலாக்களில் கூறப்படாத பல புதிய செய்திகள் இதனுள் இடம் பெற்றுள்ளதாகவும், இதனுள் கேட்கப்படும் கேள்விகள் விடுகதைப் புதிர்களைப் போலமைந்து வேறுபட்டு விளங்குவதாகவும் கூறப்படுகின்றது.

பல இன்னல்களுக்கு ஆளான இளவரசன் அப்பாசு பகுவீறு நாட்டுக்கு வருகின்றான். அந்நாட்டு இளவரசி மெஹர்பான் மசலா எனப்படும் கேள்விகளைக் கேட்டு விடை கூறாதவர்களைக் கொன்று வருபவளாக இருப்பதால் அப்பாஸ் மெஹர்பானிடம் சென்று அவள் கேட்ட நுட்பமான கேள்விகளுக்குத் தக்க விடையளிக்கின்றான். இளவரசி மெஹர்பான் வினவவும், அப்பாஸ் விடை அளிக்கவுமாக அமைந்து நூறு வினா விடைகளை உட்கொண்டுள்ளதால் இது 'நூறு மசலா' எனப்படுகின்றது.

இளவரசி மெஹர்பான் "ஒரு மரத்திற்குப் பன்னிரெண்டு கொப்புகள், ஒவ்வொரு கொப்பிற்கும் முப்பது இலைகள், ஒவ்வொரு இலையிலும் பாதி வெள்ளை, பாதி கறுப்பு, அம்மரத்தில் ஐந்து பூக்கள் இருக்கின்றன. இவற்றை விளக்க வேண்டும்" என்று வினா தொடுக்கின்றாள். அப்பாஸ், மரத்தினை ஆண்டாகவும், கொப்புகளைப் பன்னிரண்டு மாதங்களாகவும், முப்பது இலைகளை முப்பது நாட்களாகவும், இலையின் வெள்ளையும், கறுப்பும் பகலும் இரவுமென்றும், ஐந்து பூக்களுந் தொழுகைக்குரிய ஐந்து வேளைகளென்றும் விடையளிச்

கின்றான். இவ்வாறே நூறு மசலாக்களுக்கும் சரியான விடையளித்து வெற்றி பெறுகின்றான். தோற்ற மெஹர்பான் அப்பாசுக்கு மனைவியாகின்றாள்.

வினா-விடைகள் யதார்த்தமானவைகளாக இருப்பதனால் இந்நூலில் மிக அதிகமான உவமைகள் ஆசிரியரால் கையாளப்பட்டிருக்கின்றன. சொல்லவந்த கருத்தையும் உணர்வையும் உவமைகள் அழுத்தமாக உணர்த்தப் பெரும்துணை புரிந்துள்ளன. நூறு மசலாவில் மிகக்குறைவான அரபிய, பாரசீகச் சொற்கள் கையாளப்பட்டுள்ளன. காரணம், முந்தைய இரு மசலா நூற்களும் இசுலாமிய நெறிக்கும், செய்திகளுக்கும் மட்டுமே முக்கியத்துவம் கொடுத்திருந்த போது நூறு மசலா பொது அறிவுக்கும், பாத்திரங்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளுக்கும் அதிக இடமளித்துள்ளது. மொழிநடையிலும் கருத்துணர்த்தும் பாங்கிலும் இலக்கியச் சுவையைப் பெரிதும் பெற்றிருக்கும் நூறு மசலா எளிய நடையில் அமைந்த இலக்கியப்படைப்பு என்ற சிறப்புக்குரியதாக விளங்குகின்றது.

**கிஸ்ஸா**

இசுலாமியத் தமிழ்ப்புலவர்கள் தமிழுக்குப் புதிதாக வழங்கியுள்ள மற்றொரு இலக்கிய வகை 'கிஸ்ஸா' இலக்கியங்களாகும். 'கஸஸ்' எனும் அரபிச் சொல்லினடியாகப் பிறந்தது 'கிஸ்ஸா' என்னும் சொல். இச்சொல்லுக்குக் "கதை கேட்டல்" என்பது பொருளாகும். அரபுநாட்டு மக்கள் தங்களின் ஓய்வு நேரங்களில் கதை அல்லது கிஸ்ஸா கூறுவதில் வழக்கமுடையவர்கள். அவர்களின் கதைகள் அடிப்படையில் சிரிக்க வைப்பனவாகவும், அற்புதங்களை ஊட்டுவனவாகவும் அமைபவையாகும். இக்கதைகள் அறிவை வளர்ப்பதற்கும், இசுலாமியப் போதனைகளை எடுத்துரைக்கவும் கூறப்பட்டுள்ளன. இசுலாமிய மக்களின் பொது வழக்கில் இக்கதைகள் முக்கியப் பாகமாக உள்ளன. அராபிய மக்களைத் தன்பால் ஈர்த்தது போன்றே தமிழில் உருவான கிஸ்ஸா இலக்கியங்களும் மக்களிடையே குறிப்பாக இசுலாமியர்களிடையே மிகுந்த செல்வாக்குப் பெற்ற இலக்கிய வகையாக நிலைபெற்று வளர்ந்துள்ளன. மசலா இலக்கியங்களையும் விட அவர்களிடையே மிக அதிக அளவில்

செல்வாக்குப் பெற்றுள்ளனவாகக் கிஸ்ஸா இலக்கியங்கள் விளங்குகின்றன. இதற்கு இரு முக்கியக் காரணங்கள் கூறப்படுகின்றன. 1. தமிழிலுள்ள கிஸ்ஸா இலக்கியங்களில் பெரும்பாலானவை இசுலாமிய வரலாற்றுப் போக்கில் பளிச்சிடும் முக்கியச் சம்பவங்களை அடிப்படையாகக் கொண்டு வந்துள்ளன. 2. மீதமுள்ள கிஸ்ஸா இலக்கியங்கள் வரலாற்றுத் தொடர்பற்று ஆதாரமற்ற சம்பவங்களை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டிருந்தபோதிலும் அவை ஏதேனுமொரு வகையில் இசுலாம் நெறியின் அடிப்படையை அல்லது தீன் நெறிக்கு விளக்கம் தரும் முகமாக அமைந்த பாத்திரப்படைப்புக்களையே பெற்று விளங்குகின்றன. இந்தப் போக்கில் தமிழில் 25க்கும் மேற்பட்ட கிஸ்ஸா இலக்கியங்கள் இருப்பதாகக் கூறப்படுகின்றது.

கிஸ்ஸா இலக்கியங்களின் வடிவமைப்புப்பற்றி ஆராய்கின்ற போது அவற்றுள் சில செய்யுள்நடையிலும் சில உரைநடை வடிவிலும், இன்னும் சில செய்யுள் உரைநடை இரண்டும் கலந்த வடிவிலும் அமைந்துள்ளன.

கி.பி. 1874ஆம் ஆண்டு ஷேக்லெப்பை இயற்றி வெளியிட்ட 'சைத்தூன் கிஸ்ஸா' என்ற நூலே தமிழில் தோன்றிய முதல் கிஸ்ஸா நூல் ஆகும். தற்போது தமிழில் உள்ள 23 கிஸ்ஸா நூல்களுள் மகுதூம் முகம்மது புலவர் இயற்றிய 'இசுவத்து நாச்சியார் கிஸ்ஸா' அளவால் மிகவும் பெரியதாகும். கபன் கள்ள கிஸ்ஸா அளவில் மிகவும் சிறியதாகும். அய்யம்பேட்டை ரசாக் சாஹிபு அவர்களும், ஆம்பூர் அப்துல் காதர் சாஹிபு அவர்களும் நான்கு, நான்கு கிஸ்ஸாக்கள் இயற்றி உள்ளனர். 'ஷம் ஊன் கிஸ்ஸா' என்ற தலைப்பில் வெவ்வேறான ஆசிரியர்களால் நான்கு கிஸ்ஸாக்கள் தோன்றியுள்ளன.

தமிழிலுள்ள கிஸ்ஸா இலக்கியங்களுள் மக்களிடையே மிகுந்த புகழ் பெற்றனவாக,

- ஈசபு நபிகிஸ்ஸா
- அலி கிஸ்ஸா
- முகம்மது அனிபு கிஸ்ஸா
- சைத்தூன் கிஸ்ஸா
- ஷம் ஊன் கிஸ்ஸா போன்றவை இருக்கின்றன.

கிஸ்ஸா இலக்கியங்கள் இஸ்லாமிய வரலாற்று நிகழ்ச்சிகளையும், இசுலாமியக் கொள்கைகளையும், இசுலாமிய நல்லுரைகளையும் எடுத்துரைப்பனவாக உள்ளன. பெரும்பாலான கிஸ்ஸாக்களில் ஆங்காங்கே பலர் இசுலாத்தைத் தழுவிய நிகழ்ச்சிகள் இடம்பெற்றிருப்பதால் இவை இசுலாம் பரவிய வழிமுறைகளை அறியக் கூடியனவாக உள்ளன. ஈசுபு நபியின் வரலாற்றுச் சம்பவங்களை விரித்துரைக்கும்' ஈசுபு நபி கிஸ்ஸா' மக்களிடையே மிகப் புகழ் பெற்றதாக விளங்குவதோடு இலக்கியத் தரமிக்க படைப்பாகவும் கருதப்படுகின்றது. மதாறு சாகிப்புப் புலவரால் இயற்றப்பட்ட இந்நூல் செய்யுள் நடையில் அமைந்துள்ளது. இறைவழி வழுவா அற வாழ்வு வாழ்ந்த ஈசுபு நபியின் வாழ்வை விளக்கும் நூல் என்று இந்நூல் குறிப்பிடப்படுகின்றது. சிறந்த நீதி புகட்டும் படைப்பாக அமைந்துள்ள இந்நூல் விருத்தப்பாவால் யாக்கப்பட்ட தெனினும் 'தொங்கல்' என வழங்கும் செய்யுள் அமைப்பில் அமைந்திருக்கின்றது. ஈசுபு நபி கிஸ்ஸாவுக்கு அடுத்தபடியாக இசுலாமிய மக்களிடையே புகழ்பெற்று விளங்குவதாகச் 'சைத்தூன் கிஸ்ஸா' என்னும் நூல் அமைந்திருக்கின்றது. பேட்டை ஆம்பூரைத் சேர்ந்த அப்துல் காதிர் சாகிபு என்பவர் எழுதிய இந்நூல் எளிய நடையில் அமைந்து சாதாரண மக்களும் புரிந்து கொள்ளும் வண்ணம் அமைந்துள்ள படைப்பாகும். இந்நூலைப் பற்றிக் கூறுகையில் 'தமிழில் வெள்ளை மொழியாகவும், கொஞ்சம் வசனமாகவும், கவியாகவும், அனைவரும் வாசித்து இன்புற அருளியது எனக் குறிப்பிடுவதற்கேற்ப மிக எளிய நடையில் இந்நூலின் பாடல்கள் இயற்றப்பட்டுள்ளன' எனக் குறிப்பிடுகின்றனர். பெண்ணைப் பாட்டுடைத் தலைவியாகக் கொண்டு எழுதப்பட்டுள்ள இந்நூல் படித்துப் புரிந்து கொள்வதற்கு எளிதாகவும், படித்துப் பாடி மகிழ்வதற்கேற்ற வகையில் சந்தமுள்ள சொல்லாட்சிகளைக் கொண்டு அமைக்கப்பட்டுள்ளதாகும். சாதாரண வாசகர்களைக் கவர்வதைக் கருத்தில் கொண்டு இயற்றப்பட்ட இந்நூல் எந்த ஆதாரத்தின் அடிப்படையில் இயற்றப்பட்டதென்பது புதிராக இருப்பதாகக் கூறப்படுகின்றது. இதில், இசுலாமிய வரலாற்றில் மிகப் புகழ்பெற்ற பெரியார்கள் பலரின் பெயர்கள் ஆங்காங்கே குறிப்பிடப்பட்டிருந்தாலும், அவர்களின் வாழ்க்கையின் எந்தப்பகுதியிலும் இக்கதை நூலான கிஸ்ஸாவில் விவரிக்கப்படும்

நிகழ்ச்சி நிகழ்ந்ததாகக் கூற முடியவில்லை. ஒரு வேளை இந்நூல் கற்பனையாகப் பாரசீக, அரபி மொழிகளிலிருந்து தழுவப்பட்டிருக்கலாம் என்ற கருத்தும் உள்ளது. இல்லையெனில் இசுலாமிய வரலாற்றுச் சாயலில் தமிழிலேயே மூலக்கற்பனை நூலாகப் படைக்கப்பட்டிருக்கலாம். எப்படியிருப்பினும் படிப்பவர்கள் இதன் கதைப்போக்கிலேயே இசுலாமிய ஒளிபெற உதவியாக அமைவதாக உள்ளது.

## நாமா இலக்கியங்கள்

தமிழில் முஸ்லீம் தமிழ்ப் புலவர்களால் கொண்டு வந்து சேர்க்கப்பட்ட மற்றொரு புதிய இலக்கிய வடிவம் நாமா என்பதாகும். 'நாமே' என்ற பாரசீக மொழிச் சொல்லின் தமிழ் வடிவமே 'நாமா' ஆகும். இதற்கு 'வரலாறு' என்று பொருள் கூறப்படுகிறது.

வாழ்வில் அருஞ்செயலாற்றிய பெரியார்களின் வாழ்க்கை வரலாற்றை அல்லது அவர்தம் வாழ்க்கை நிகழ்ச்சிக் கூறுகளை விளக்கிக் கூறும் இவ்விலக்கிய வடிவம் பாரசீக மொழியிலக்கிய அமைப்பை உட்கொண்டதாகத் தமிழில் புத்துருப்பெற்றுள்ளது எனலாம்.

தமிழில் சுமார் பதினாறு நாமா இலக்கியங்கள் இருக்கின்றன. இருப்பினும் நான்கு வகை 'நாமா இலக்கியங்கள்' குறிப்பிடத் தக்கவையாக உள்ளன. அவை,

- நூறு நாமா
- மிஃறாஜ் நாமா
- இருஷாது நாமா
- சக்கறாத்து நாமா

என்பவை ஆகும். உலகப்படைப்பு வரலாற்றை விரித்துரைப்பது 'நூறு நாமா' இலக்கியமாகும். இவ்விலக்கியப் படைப்பு 'செய்யிது அஹ்மது மரைக்காயர்' எனும் புலவரால் இயற்றப்பட்டுள்ளது. இவர் காயல் பட்டணத்தைச் சேர்ந்தவராவார். முடியாது நின்ற உமறுதரு 'சீறாவை' முடிப்பான் வேண்டிச் 'சின்ன சீறா' பாடிய 'பனீ அஹமது மரைக்காயரின்' புதல்வர் என இவர் குறிக்கப்படுகிறார். ஆசிரியரின் நூற்குறிப்பின்படி இந் 'நூறு

நாமா' நூல் இமாம் கஸ்ஸாலி பாரசீக மொழியில் இயற்றிய நூலை அடியொற்றி எழுதப்பட்டதென்பது தெளிவாகிறது.

'நூறு நாமா' என்னும் பெயர் 'நூர் நாமா' என்பதன் சிதைவாகும். 'நூர்' என்ற சொல்லிற்கு 'ஒளி' அல்லது 'வெளிச்சம்' என்பது பொருளாகும்.

இறைவன் ஒளியால் இவ்வுலகைப் படைத்தான் என்பதை மனித இன வரலாற்றின் அடிப்படையில் இந்நூல் விவரிப்பதால் இப்பெயர் பெற்றது.

### மிஃறாஜ் நாமா

மற்றொரு புகழ்பெற்ற நாமா இலக்கிய நூல் ஐயம்பேட்டை மதாறு சாஹிபு அவர்களால் இயற்றப்பட்ட 'மிஃறாஜ் நாமா' ஆகும். நபிகள் நாயகமவர்கள் வானவர் தலைவர் ஜிப்ரீல் (அலை) அவர்களின் உறுதுணையோடு விண்ணேற்றம் பெற்று இறைச்சந்நிதானத்தை அடைந்து திரும்பிய வரலாற்றை விரித்துரைப்பதாக 'மிஸ்றாஜ் நாமா' அமைகிறது.

### இருஷாது நாமா

தமிழில் இயற்றப்பட்டுள்ள நாமா இலக்கியங்களுள் குறிப்பிடத்தக்க மற்றொரு படைப்பு 'காயல் ஷாமுனா லெப்பை' எனப்படும் 'ஷாமு நைனா லெப்பை'ப் புலவர் பாடிய 'இருஷாது நாமா'வாகும். தன்னை வணங்குவதற்கென்றே இறைவன் மனிதனைப் படைத்தான் என்பது மரபு. இறைவனின் விருப்பத்துக்கு மாறாக இறைச் சிந்தனையின்றி, அல்லாஹ்வினிடத்து அச்சமின்றி, தவறான வழியில் தான் தோன்றிகளாய் இம்மையில் வாழும் மனிதர்களுக்கு மறுமையில் இறைவனால் எப்படிப்பட்ட தண்டனைகள் வழங்கப்படும் என்பதைச் சுவைபட விவரிக்கும் இலக்கியப்படைப்பே 'இருஷாது நாமா'. இறையுணர்வை மறந்து இவ்வுலக வாழ்வில் மூழ்கிப் பொருள், புகழ் வயப்பட்டு வாழும் மனிதர்களுள் வெவ்வேறு வகைப்பட்ட ஏழு பகுதியினர் இறைச் சந்நிதானத்தை எட்டும்போது எத்தகைய கேள்வி கணக்குகட்கு ஆட்பட்டு, இறுதியில் எவ்வகையான கொடுந்தண்டனை பெறுவரென்பதை இலக்கியச் சுவையுடன் இந்நூல் விவரிக்கிறது

இந்நூல் 'இர்ஷாத்' என்ற அரபி நூலின் தமிழ் மொழி ஆக்கம் ஆகும். தமிழின் தன்மைக்கேற்ப யாப்பிலக்கண அமைதிகெடாது பனுவலாக்கியுள்ள ஆசிரியர் ஷாமுனா வெப்பை சொல்லும் முறையில் மூலத்தினும் பெருஞ்சுவையைத் தமிழ்ப் பனுவலில் தேக்கித் தந்துள்ளார் என்பது எண்ணத்தக்கதாகும்.

### சக்கறாத்து நாமா

நாமா இலக்கியங்களில் முஸ்லீம் மக்களிடையே மிகப் புகழ்பெற்றதாக அமைந்திருக்கும் நூல் 'சக்கறாத்து நாமா' எனும் இலக்கியப் படைப்பாகும். அரபுத் தமிழில் இயற்றப்பட்ட இந்நூலைப் பேட்டை ஆம்பூர் அப்துல்காதிர் சாகிபு அவர்கள் யாத்துள்ளார். இந்நூலில் அரபுத் தமிழில் நூறு பாடல்கள் அடங்கியுள்ளன.

மரணம் என்பது மனிதனால் தவிர்க்க முடியாத ஒன்று. இறைவன் விதித்த நெறிப்படி, தீன்வழி ஒழுகி, இறைவனின் இன்னருள் பெற்ற நிலையில் இறப்பை எய்தாது மாறுபட்ட நோக்கில் வாழ்ந்து, இறுதி நெருங்கிய நேரத்தில் மரண வேதனையில் மனித உள்ளம் படுகின்ற துன்பநிலை அழகாகத் தொகுத்துரைக்கப்படுகிறது. இந்நூலில் இறப்பின் இறுதிக் கோட்டில் நிற்கும்போது இறை அருளை எண்ணி ஏங்கித் தவிக்காது, தொடக்கம் முதல் எம்முறையில் வாழ்ந்தால் இறுதி நிலையில் மரண வேதனையிலிருந்து ஆறுதல் பெற்று, அமைதி கொள்ளலாம் என்பதைக் கூறுவதன் மூலம் இறைவன் விதித்த தீன் நெறி வழியே வாழ்ந்து, இறைவனின் இன்னருளைப் பூரணமாய்ப் பெறுபவன் மரண வேதனையினின்று விடுபட்டவனாய் இறுதித் தூக்கத்தில் பூரண அமைதி பெறுவான் என்பதைத் தெளிவாக்குகிறது இச் 'சக்கறாத்து நாமா' நூல். 'நாமா இலக்கிய வகைநூல்கள், மக்கள் இம்மையின் இன்பத்தில் மூழ்கி, இறைவழிப் பிசகி மறுமையில் அடையும் துன்பத்தைப் பற்றிப் பெரிதும், அச்சமூட்டி அச்சரித்து, மக்களை இறைநெறி வழுவாமல் வாழத் தூண்டி, இறைவழி நடக்க வழிகாட்டுகின்றன.

### முனாஜத்து இலக்கியங்கள்

'முனாஜத்து' எனும் அரபுச் சொல்லுக்கு "இரகசியமாய்ச் சொல்லுதல்" எனப் பொருள் கூறப்படுகிறது. இறைவனிடம்

மனமுருகிப் பிரார்த்தனை செய்தல் எனவும் இச்சொல்லுக்கு விளக்கம் தரப்படுகிறது. இதன் மூலம் முனாஜத்து என்பதற்கு இசுலாமியப் பக்திப் பனுவல் வாயிலாக இறையருள் வேண்டும், இறைவேட்டல் பாடல்கள் எனும் கருத்துப் பெறப்படுகிறது. இறையருளை இறைஞ்சும் இம் முனாஜத்துப் பாக்களை பெரும்பாலான முறையில் தமிழ்ப் புலவர்கள் பாடியிருக்கிறார்கள். தீன் நெறியாகிய இசுலாத்தின் கொள்கைகளையும், கோட்பாடுகளையும் சாதாரணப் பாமரரும் எளிதாகப் புரிந்து கொள்ளப் பெரிதும் உதவுவது இம் 'முனாஜத்துப்' பாடல்களேயாகும்.

இசுலாமியத் தமிழ் இலக்கிய வடிவங்களில் எண்ணிக்கையில் கிஸ்ஸா இலக்கியங்களுக்கு அடுத்தபடியாக மிக அதிக அளவில் இயற்றப்பட்டவை முனாஜத்து இலக்கியங்களே ஆகும். இறைவனின் 99 திருப்பெயர்களையும், அவற்றின் விளக்கங்களையும் தாங்கிய 12 முனாஜாத்துக்கள் அடங்கிய தொகுப்பை 'முனாஜத்து மாலிகை' என்ற பெயரில் செ.மு. செய்யது முகம்மது ஆலிப் புலவர் தொகுத்துள்ளார்.

ஒருமுறை சென்னை நகரில் கொடிய விஷபேதி நோய் பரவி மக்களை அலைக்கழித்தது. நோயின் கடுமையால் மக்கள் மிகுந்த துயருக்குள்ளாயினர். அப்போது சென்னையில் இருந்த பெரும் முஸ்லீம் தமிழ்ப் புலவரான புலவர் நாயகம் சேகனாப் புலவர் அவர்களை முஸ்லீம்கள் அணுகி, விஷபேதி நோயின் கொடுமையொழிய இறைவனை இறைஞ்சி முனாஜத்துப் பாடி, தங்களைத் துயரினின்றும் காக்குமாறு வேண்டினர். இன்னலுரும் மக்களின் நல்வாழ்வுக்கு அருள் செய்யுமாறு அல்லாஹ்வை நோக்கி இறைஞ்சும் வகையில் ("ஹக்கு பேரில் முனாஜத்து" எனும் பெயரில் ஒரு முனாஜாத்து நூலை இயற்றியளித்தார். இதிலுள்ள பாடல்கள் அனைத்தும் அல்லாஹ்வை நோக்கித் துதித்துப் பாடப்பட்டவைகளாகும். "ஹக்கு" என்ற அரபுச் சொல்லுக்கு 'உண்மை' என்பது பொருளாகும்.

## நவநீத புஞ்சம்

அடுத்து மிகச் சிறந்த முனாஜத்துப் பாடல்கள் அடங்கிய நூல் 'நவநீத புஞ்சம்' என்பதாகும். இந்நூலுள் திருப்புகழ்,

பிள்ளைத்தமிழ் மற்றும் மாணிக்க மாலை முதலிய பகுதிகள் இடம் பெற்றிருந்தாலும் இந்நூலுள் முனாஜத்துப் பாடல்களாகப் பல அமைந்து உள்ளன. அவை முனாஜத்துப் பதிகங்களாக அமைந்துள்ளதெனலாம். 'செய்யது முகியத்தீன் கவிராயர்' இயற்றிய இம்முனாஜத்துப் பாடல்கள் சொற்சுவையும் பொருட்சுவையும் நிறைந்து கருத்துச் செறிவோடு விளங்குகின்றன.

இக்கவிராயர் அல்லாஹ்வினிடம் தன் குறைகளைக் கூறி, அவற்றைப் பொறுத்துத்' தன்னை ஆட்கொள்ளுமாறு வேண்டுகிறார். இவர் குறிக்கும் குற்றங் குறைகள் சாதாரணமான மக்களிடையே காணப்படுவனவாகும். ஆயினும் பொதுமக்கள் செய்த குற்றங்களையெல்லாம் தானே செய்தது போலப் பாவித்து, அவற்றை அல்லாஹ்விடம் முறையிட்டுக் கழுவாய் தேடுவதன் மூலம் மக்களுக்கு இறையருள் வேண்டுகிறார்.

## முகியித்தீன் முனாஜத்து

'பகுறுத்தீன் புலவர்' இயற்றிய 'முகியித்தீன் முனாஜத்து' நூலில் இடம்பெற்றுள்ள 35 பாடல்களில் முதல் 30 பாடல்களில் அரபு அடிச்சுவடியிலுள்ள 29 எழுத்துக்களில் வரிசைக்கிரமமாக ஒவ்வொரு எழுத்தும் ஒவ்வொரு பாடலிலும் முதல் எழுத்தாக அமைந்துள்ளது. 21-வது எழுத்தான 'காப்' இரண்டு பாடல்களில் முதல் எழுத்தாக இடம் பெற்றுள்ளது. இப்பாடல்களின் இறுதி அடியின் இறுதிச் சொல் பெரும்பாலும் 'முகியித்தீன்' என்றே முடிகிறது.

பதினெட்டாவது அரபு எழுத்து 'ஐன்' என்பது ஆகும். ஒரு பாடலில் இந்த அரபு எழுத்தின் தமிழ் ஒலி பெயர்ப்பு அடியின் முதலில் இடம் பெற்றிருப்பதோடு, அஃதே முற்றும் மடக்காக நான்கு வரிகளிலும் வந்து கருத்து வளமூட்டுகின்றன.

ஐனது லாத்து ஐனிய பேமாய்
ஸாரி னுள்ளாய
ஐனது அவ்வ லான அஹ்மது
நபியுல் லாவின்

ஜனது ஆரி பான அவித தாம்
பொருளை யென்னுன்
ஜனதாற் காட்சி காண அருளும்
யாமுகி யித்தீனே [8]

என்பதாகும் அப்பாடல்.

இறைவனிடம் குறையிரந்து அருள்வேண்டும் பக்திப் பாடல்களான முனாஜத்து நூல்கள் தமிழில் பதினைந்துக்கு மேல் இயற்றப்பட்டுள்ளன. இஸ்லாமியத் தமிழ்ப் புலவர்களால் உருவாக்கப்பட்ட இம்முனாஜத்து நூல்கள் எளிய நடையில் அமைந்து, சாதாரணத் தமிழறிவுள்ள முஸ்லீம்களாலும் தெளிவாகப் புரிந்து கொள்ளும் வகையில் நாள்தோறும் பாடப்பட்டு வருகின்றன.

## படைப்போர் இலக்கியங்கள்

தமிழுக்கேயுரிய முறையில் தனித்துவமுள்ள புதுவகை இலக்கிய வடிவங்களைத் தமிழ்ப் பெயராலேயே தமிழில் தோற்றுவித்துத் தமிழைப் பலவாற்றானும் முஸ்லீம் தமிழ்ப் புலவர்கள் போற்றி வளர்த்துள்ளனர். அவற்றுள் 'படைப்போர்' என்பது குறிப்பிடத்தக்க இலக்கிய வடிவமாகும். இப்புதுவகைத் தமிழ் இலக்கிய வடிவத் தோற்றத்திற்கு மூலாதாரமாக அமைவது அரபி மொழியில் எழுந்த 'படைப்போர்' பற்றிய இலக்கியங்களாகும்.

ஆங்கிலத்தில் வழங்கப்பட்டு வரும் "வார்பேலட்" (War Ballad) எனும் இலக்கியவகையாகத் தமிழில் உருவானவையே 'படைப்போர்' இலக்கியங்கள் எனக் கூறலாம். இதிலுள்ள படை, போர் என்ற இரு சொற்களும் ஒரே பொருளைக் குறிக்கும்.

போர் நிகழ்ச்சிகளையும், படை நிலைகளையும், படை நடத்தும் பாங்கையும் வீரர்களின் ஒலி முழக்கங்களையும் அவர் தம் வீர உணர்வுகளையும், படை வீரர்களின் தோற்றங்களையும், படைக்கள வர்ணனைகளையும் அடித்தளமாகக் கொண்ட படை நூல்கள் தமிழில் இருப்பதாகத் தெரியவில்லை. இக்குறையை நீக்க எண்ணிய இசுலாமியத் தமிழ்ப்புலவர்கள் படைப்போர் இலக்கியங்கள் பலவற்றைத் தமிழில் யாத்துள்ளனர்.

படைப்போர் இலக்கியங்கள் தமிழில் எழுதுவதற்குத் தோன்றாத் துணையாக அமைந்த நூல் 'கிதாபுல் மகாஸி' எனும் அரபி மொழி நூலாகக் கருதப்படுகின்றது. முகம்மது இப்னுல் உமறுல் வாகிதி எழுதிய இந்நூல் பெருமானார் காலத்தில் நடைபெற்ற பல்வேறு போர்களைப் பற்றிய செய்திகளையெல்லாம் தொகுத்தளிக்கும் நூலாகும்.

சக்கூன் படைப்போர் என்ற நூல் படைப்போர் இலக்கியங்களில் காலத்தால் மிகவும் முற்பட்டதாகக் கருதப்படும் நூலாகும். மதுரையைச் சேர்ந்த 'வரிசை முகியித்தீன் புலவரால் இயற்றப்பட்டது. முந்நூறு ஆண்டுகட்கு முன்பாக இயற்றப்பட்டதாகக் குறிப்பிடப்படும் இந்நூலே படைப்போர் இலக்கிய வகையை முதன் முதலாகத் தொடங்கி வைத்ததோடு இவ்வகை இலக்கியங்கள் பலப்பலவாக உருவாக வழி காட்டியதாகவும் அமைந்துள்ளது.

காப்பிய இலக்கண அமைப்போடு தமிழில் முஸ்லீம் புலவர்களால் உருவாக்கப்பட்ட படைப்போர் இலக்கியங்களில் 'குஞ்சுமூசு லெப்பை ஆலிம்' புலவர் இயற்றிய "இரவுசுல் கூல் படைப்போர்", "செய்யிதத்துப் படைப்போர்" ஆகிய இரு படைப்புகளும் குறிப்பிடத்தக்கவைகளாகும். இவ்விரு நூலகளும் முறையாக நாட்டுப் படலம், நகரப்படலம் முதலியன அமைந்த காப்பியங்களாகும்.

'இரவு சுல் கூல் படைப்போர்' 45 படலங்களைக் கொண்டு 2383 விருத்தங்களால் ஆனது. ஒவ்வொரு படலமும் குறைந்த அளவு 10 பாடல்களையும் அதிகபட்சம் 189 செய்யுட்களையும் கொண்டது.

படைப்போர் இலக்கியங்களில் குறிப்பிடத்தக்க மற்றுமொரு நூல் 'ஐந்து படைப்போர்' ஆகும். அசன் அலிப் புலவரால் பாடப்பட்ட இவ்விலக்கியத்தில் ஐந்து படைப்போர்கள் அடங்கியுள்ளன. இசுலாமியப் படைகட்குத் தலைமை தாங்கிய அலி (ரலி)யை எதிர்த்து வந்த இசுலாமிய விரோதிகளான ஐந்து அரசர்களை எதிர்த்துப் போரிட்டு வெற்றி கொண்ட வரலாற்றை இது விரித்துரைக்கிறது. முஸ்லீம்கள் மீது படையெடுத்து வந்த முஸ்லீமல்லாதாருக்குத் தலைமையேற்றுப்

போரிட்ட அரசர்களான இபுனியன், உச்சி, தாகி, வடோச்சி, இந்திராயன் ஆகியோரின் பெயராலேயே இவ்வைந்து படைப்போர்களும் தனித்தனியாக அழைக்கப்பட்டாலும் இவ்வைந்தும் முஸ்லீம்களின் சார்பில் தலைமையேற்றுப் படை நடத்திய மாவீரர் அலி(சலி) அவர்களோடு பொருத காரணத்தினால் ஐந்து படைப்போர்களும் இணைந்த நிலையில் 'ஐந்து படைப்போர்' என அழைக்கப்படலாயின.

சுமார் இருநூறு ஆண்டுகட்கு முன் எழுதப்பட்ட இந்நூலின் ஆசிரியர் தென்பூவை எனும் ஊரைச் சேர்ந்த கந்தப்பிள்ளை என்பாரின் மகன் என்று நூலிலேயே குறிப்பிடப்பட்டுள்ளது.

## செயிதத்து படைப்போர்

படைப்போர் இலக்கியங்களுள் குறிப்பிடத்தக்க மற்றுமோர் நூல் 'செய்யிதத்துப் படைப்போர்' என்பதாகும். காப்பியத்திற்குண்டான இலக்கண வடிவமைப்புகளைத் தனனகத்தே கொண்ட இந்நூல், காப்பியமாகவே கணிக்கப்படுகின்றது. மொத்தம் 515 பாடல்களைக் கொண்ட இந்நூலை இயற்றியவர் 'இரவுசல்கூல் படைப்போர்' என்று அழைக்கப்பட்ட 'சல்காப் படைப்போரை' எழுதிய குஞ்சு மூசுப் புலவரேயாவார். முந்தைய நூலுக்குப் பெயரமைந்தவாறே இந்நூலுக்கும் 'செய்யிதத்து' எனும் பெண்பாற் பெயரையே நூலின் பெயராக அமைத்துள்ளார்.

சல்காவைப் போன்றே செய்யிதத்தும் முதலில் இசுலாத்தை எதிர்த்து நின்று, பின்னர் முஸ்லீமாகி, இசுலாத்தை எதிர்த்தவர்களோடு போரிட்டவர். எனினும் தொடக்கத்தில் இசுலாத்தை எதிர்ப்பவராக, பகைவராக விளங்கியமையால் இந்நூல் அவரது பெயராலேயே 'செய்யிதத்துப் படைப்போர்' என வழங்கலாயிற்று. இந்நூல் சுமார் 195 ஆண்டுகட்டு முன்னர் இயற்றப்பட்டதாகும்.

படைப்போர் இலக்கிய வரிசையில் நாட்டுப்புறப்பாடல் போக்கில் அமைந்த மற்றொரு குறிப்பிடத்தக்க இலக்கியம் 'காசீம் படைப்போர்' ஆகும். இந்நூல் எழுதப்பட்ட காலம் என்னவென்பது தெரியவில்லை. இந்நூல் 215 ஈரடிக்

கண்ணிகளால் ஆனது. முதல் மூன்று காப்புப்பாடல்கள் விருத்தப்பாடல்களாக அமைந்துள்ளன. எளிய சந்தப்பாடல்களாக அமைந்திருந்தாலும் பாமர வாசகர்களைத் தன்பால் பெரிதும் ஈர்க்கும் தன்மையுடையனவாய்ப் பாடல்கள் அமைந்துள்ளன. அடுத்ததாகக் குறிப்பிடப்படும் மற்றோர் படைப்போர் இலக்கியம் 'மலுக்கு முலுக்கு படைப்போர்' நூலாகும். இந்த இலக்கியத்தைப் படைத்தவர் தமிழ் இசுலாமிய இலக்கிய உலகில் யாராலும் மறக்க முடியாத பல நூல்களைப் பதிப்பித்த கண்ணகுமது மகுதூம் முகம்மதுப் புலவராவார். மற்றும் கொழும்புவைச் சேர்ந்த அ.வெ. அமீது என்பார் இயற்றிய 'இபுலீசுப் படைப்போர்' நூலும், செய்யது முகம்மதுப் புலவர் எழுதிய நபுஸீ படைப்போர் இலக்கியமும் குறிப்பிடத்தக்க வேறு சில படைப்போர் இலக்கியங்களாகும்.

தமிழுக்கென்றே தமிழ்ப் பெயரோடு தமிழ் முஸ்லீம் புலவர்கள் உருவாக்கிய புத்தம் புதிய இலக்கிய வடிவமான படைப்போர் இலக்கியங்கள் தமிழுக்கு மேலும் பொலிவும் வலுவும் சேர்க்கும் வகையிலேயே அமைந்துள்ளன என்பது மறுக்க முடியாத உண்மையாகும்.

நொண்டி நாடகத்தைப் பற்றி அறிவதற்கு முன்னால் இசுலாமிய மன்னர்கள் முறை வழங்கும் முறை எப்படிப்பட்டதாக இருந்ததென்பதை அறிவது முக்கியமாகும். மன்னர்கள் கொலு மண்டபத்தில் வழக்குகளை ஆராய்ந்து தீர்ப்பளித்துள்ளனர். இவ்வதிகாரத்தை முகலாய மன்னர்கள் முழுவதுமாகப் பயன்படுத்தியுள்ளனர். சாதாரணக் குடிமக்களும் மன்னரை அணுக முடியும் என்பது நடைமுறையில் இருந்திருக்கின்றது.

"அக்பர் நாமாவில் அக்பர் கொலு மண்டபக் கூட்டத்திலேயே சாதாரண வழக்குகளை ஆராய்ந்து தீர்ப்பளித்தார் என்றும், அயலார் சாட்சி, அவர்களைக் குறுக்கு ஆய்வு செய்தல் போன்றவை தேவைப்பட்ட முக்கிய வழக்குகளை முறை வழங்குவதற்கென்று குறித்த நாளிலே ஆராய்ந்து தீர்ப்பளித்தார் என்றும் குறிக்கின்றது. முறை வழங்குவதற்காக வியாழக் கிழமையை அக்பரும், செவ்வாய்க்கிழமையை ஜஹாங்கீரும், புதன்கிழமையை ஷாஜகானும் ஒதுக்கியிருந்தனர்.

அக்பரைப் பற்றிக் கூறவந்த அபுல்பாஸல் பின்வருமாறு குறிப்பிடுகின்றார். "திறந்தவெளி கொலு நடத்தி வாயில்களைத் திறந்து விட்டவர். ஒடுக்கப் பெற்றவர்களின் வழக்குகளை ஆயும்போது சான்றுகள் பிரமாணங்கள் ஆகியவற்றையே அவர் நம்பியிருப்பதில்லை. ஏனெனில் அவை எத்தர்களின் பயனுள்ள கருவிகளாகலாம். மாறாக, வழக்கை எடுத்துக்கூறும் போது தோன்றும் முரண்பாடுகள், மெய்ப்பாடுகள் (Physiognomy) தெளிந்த ஆய்வு, உய்த்தறியும் திறன் ஆகியவற்றைக் கொண்டு தீர்ப்பளிப்பது இவரது வழக்கம். வாய்மையே வென்றது. இவர் அப்பணியில் 1½ பஹர்கள் (4½) மணிநேரம் வரைக்கும் குறையாமல் செலவிட்டார்"[9] ஜஹாங்கீரைப் பற்றி ஹாக்கின்ஸீம் இதே போன்று குறிப்பிடுகின்றார். "கொலு மண்டபத்திலுள்ள மன்னர் எல்லா வழக்குகளையும் பொறுமையாகக் கேட்பார். நாள்தோறும் மன்னர் இரண்டு மணிநேரம் அளவிற்கு அங்கே தங்கியிருந்தார். இந்திய மன்னர்கள் நாள்தோறும் முறை வழங்குவர்"[10] என்று கூறப்பட்டுள்ளது. ஜஹாங்கிரின் முறை மண்டபம் குறித்துப் பிலேயட் கூறுகின்றபோது "ஒருமுறை (செவ்வாய்) முறை மன்றத்தில் அமர்ந்த மன்னர் அவர் முன் வந்த உரிமை வழக்குகள், குற்ற வழக்குகள் அனைத்தையும் பொறுமையுடன் கேட்டு ஒவ்வொன்றிலும் முடிவான தீர்ப்பு வழங்கினார்" என்று குறிப்பிடுகின்றார். ஹாஜஹானின் முறை வழங்கும் பாங்கினை லாஹீரி பின்வருமாறு வர்ணித்துள்ளார்.

> புதன்கிழமை தோறும் மன்னர் ஜரேகாயிதர்ஷனிலிருந்து தௌலத்கானாயி காஸிக்கும் செல்வார். அன்று முறைவழங்கு துறை அதிகாரிகள் ஃபட்வா அளிக்கவல்ல, தகுதி வாய்ந்த சமயப்புலவர்கள் நேர்மைக்கும், கடவுள் பற்றிற்கும் பெயர்போன சில பெரியோர்கள் எப்போதும் மன்னருடன் இருக்கும் சில பிரபுக்கள் ஆகியோர் தவிர வேறு எவரையும் அவர் கூட்டத்திற்கு அனுமதிப்பதில்லை. முறை வழங்கு துறை அதிகாரிகள் வழக்காளர்களை ஒருவர் பின் ஒருவராக மன்னர் திருமுன் கொண்டு வந்து நிறுத்தினர். அவர்கள் கூறுவதையெல்லாம் பொறுமையுடன் கேட்ட அரசர் அவர்களை நயமாகக் குறுக்கு ஆய்வு செய்தார். அதன்பின்னர் அங்கு வந்திருந்த உலாமாவின் சட்டவிளக்கத்திற்கிணங்க அவர் தீர்ப்புகள் வழங்கினார்".[11]

பிற்காலத்தில் வந்த பெர்னியரும் முகலாய அரசவையில் இதேபோன்ற நடைமுறையைக் கண்டு அது குறித்து எழுதியுள்ளார். அம்காஸில் (கொலு மண்டபத்தில்) குழுமியிருந்த கூட்டத்தினரிடமிருந்து பெற்ற விண்ணப்பங்களை மன்னரிடம் கொண்டு வந்து படித்துக் காட்டினர். வழக்கில் தொடர்புடையவர்களை மன்னர் தமதருகில் வரவழைத்து விசாரித்தார். பெரும்பாலும் இடருற்றவர்களுக்கு அவ்விடத்திலேயே அவர்களது துன்பத்தைத் தீர்த்து அனுப்பினார். வாரத்தில் ஒருநாள் நடக்கும் அதல்த்கானா என்னும் முறைமன்றக் கூட்டத்திற்கு இருமுதன்மை காஸிகளுடன் (அமைச்சர்) அவர் தவறாமல் சென்றார்."[12]

தண்டனைகள் வழங்குவதிலும் முகலாயமன்னர்கள் முகமதியச் சட்டத்தைப் பின்பற்றியுள்ளனர். மூன்று மன்னர்களுமே ஒரு சில வழக்குகளில் முகம்மதியச் சட்டத்திற்கும் புறம்பாக நடந்து கொண்ட போதிலும், காஸிக்களும், குற்ற வழக்கு நடுவர்களும் அளித்த தீர்ப்புகள் முகமதியச் சட்ட அடிப்படையிலே அமைந்துள்ளதாக இபின்ஹசன் குறிப்பிடுகின்றார்.

முகமதியச் சட்டப்படித் தண்டனைகள் நான்கு வகையாக இருந்தன.

1. கிசாஸ் (Qisas) பழிக்குப்பழி வாங்குதல். இது கொலை செய்தல், படுகாயப்படுத்துதல் போன்ற குற்றங்களுக்கான தண்டனைகளாகும்.

2. தியா அல்லது அக்கல் (Diya or Akal) கொலை செய்தவர் அல்லது உடலுக்கு ஊறு செய்தவர் அளிக்கும் குருதிப்பணம் அல்லது இழப்பீடு.

3. ஹத் (Hadd) சமயச்சட்டம் வகுக்கும் தண்டனை அல்லது கூட்டவோ குறைக்கவோ முடியாதவாறு சட்டம் நிர்ணயிக்கும் தண்டனை. சான்றாக (1). பிறன்மனை விழைந்ததற்காகக் கல்லால் அடித்தல் அல்லது கசையடிதருதல் (2) மணமான மங்கை மீது நடத்தை கெட்டவர் எனப் பொய்க் குற்றம் சாட்டியதற்காகச் சாட்டையடி தருதல் (3) திருட்டுக் குற்றத்திற்காகக் கைகளைத் துண்டித்தல், சூழ்நிலைக் கேற்றவாறு

களவிற்காகப் பலவகைத் தண்டனைகள் ஆகியவை இப்பிரிவில் அடங்கும். (4) தாஸிர் முறை நடுவருடைய மதிப்பீட்டிற்கு ஏற்ப வழங்கப் பெறும் தண்டனை சட்டத்தில் மாறாத தண்டனைக்குரியது எனக் குறிப்பிடப் பெறாத அல்லது கஃபாரா குறிப்பிடப்பெறாத குற்றங்களுக்குத் தண்டனை வழங்கப்பட்டது. ஐந்து வேளை தொழுகை செய்யாதிருத்தல், உண்ணா நோன்பு கடைபிடிக்காமை போன்ற சமயச் குற்றங்களுக்கும், ஏமாற்றுதல், பொய்ச்சாட்சி சொல்லுதல் போன்றவற்றிற்கும் இத்தண்டனை வழங்கப்பட்டது. சிறையிடல் நாடு கடத்தல், உறுப்புக் குறை செய்தல், கண்டித்தல், இழிவு செய்யும் நடவடிக்கை போன்றவை இவ்வகைத் தண்டனைகளில் குறிப்பிடப்பட்டுள்ளன.

கிசாஸ் அல்லது மரண தண்டனையைப் பொறுத்தவரை அக்பரும் அவரைத் தொடர்ந்து வந்த இரு முகலாயப் பேரரசர்களும் இத்தகைய தண்டனை வழங்கும் தடையற்ற அதிகாரம் காஸிக்கள் அல்லது மற்ற குற்றமுறை நடுவர்கள் கைக்கு மாறுவதை விரும்பவில்லை. அதனைத் தடுக்கப் பெரிதும் முயன்றனர். ஆளுநரிடமிருந்து இவ்வதிகாரத்தைப் பறிக்க வேண்டுமென்ற யோசனை அக்பரின் இருபத்தேழாம் ஆட்சியாண்டில் எழுந்தது. எனவே மரண தண்டனை நிறைவேறும் முன்னர் மன்னரின் ஒப்புதலைப் பெற வேண்டுமென்ற ஆணை பிறந்தது. அவருக்குப் பின் வந்தவர்களும் இப்பழக்கத்தைப் பின்பற்றினர். மரணதண்டனையை நிறைவேற்றுவதில் எப்போதும் முகமதியச் சட்டப்படியே தண்டனைகள் நிறைவேற்றப்பட்டன என்பது கூறமுடியாது. குற்றத்தின் தன்மையையும் வழக்கின் சூழ்நிலையையும் பொறுத்தே தண்டனை நிறைவேற்றப்பட்டது. மான்சிர் ரேட் பாதிரியார் தண்டனைகளின் தன்மை பற்றிக் குறிப்பிடும் போது "கடுங்குற்றம் புரிந்தவர்கள் யானையால் மிதிபட்டு இறந்தனர். கற்பழித்தவர்களும், பிறன் மனை விழைந்தவர்களும் கழுத்தை நெரித்துக் கொல்லுதல், கழுவேற்றல், தூக்கிலிட்டுக் கொல்லுதல் போன்ற தண்டனைகளைப் பெற்றனர்" எனக் குறிப்பிட்டுள்ளார்.[13] பலவகையான பணிகளுக்கு யானைகளைப் பழக்கியிருந்தனர். இவை பாகனுடைய குரலையுணர்ந்து அவர்களது கட்டளைகளின் படியே நடந்தன. முடிச்சு போடவும் அவிழ்க்கவும் அவை ஆற்றல் பெற்றிருந்தன. ஒன்றைத் தள்ளவும்,

தூக்கவும், இறக்கிவைக்கவும், திருப்பவும் அவற்றால் இயலும். சுருக்குகள் போடவும் அவிழ்க்கவும் அவை வல்லவையாக விருந்தன. சிறு வைக்கோல் துண்டு நாணயங்கள் போன்றவைகளைச் சேகரிக்கும் திறன் கொண்டிருந்தன. சுருங்கக் கூறின், இவை பாகன் சொல்வதைக் கேட்டு நடக்க ஆயத்தமாக இருந்தன. இத்தகைய பயிற்சி காரணமாக அவற்றின் மீது ஏறும் போது தவறி விழுபவர்களையும் இடறி விழுபவர்களையும் மிதிப்பதற்காகவே அவர்கள் தூக்கி எறியப்பட்டவர்கள் எனக் கருதி அவர்களை அவை மிதித்தழிக்கும் ஆபத்தும் இருந்து வந்தது."[14]

"தனது தீச்செயல்களால் மக்களை அச்சுறுத்தி உலகைத் துன்பத்தில் ஆழ்த்தும் தீயோர்களின் கைகளை அல்லது கால்களைத் துண்டித்தல் சரியானதே" என அய்னிக்கு எழுதிய முன்னுரையில் அபுல் பாஸல் வலியுறுத்தியுள்ளார் கண்டனம், அச்சுறுத்தல், சிறையிட போன்ற தண்டனைகள் பயன்தராமல் போகும் போது "தீயோனின் கேடுபயக்கும் உறுப்பினைக் களைய வேண்டும்; ஆயினும் அவனது உயிரைப் பறிக்கும் தீவிர நடவடிக்கையில் மன்னர் இறங்குதல் ஆகாது" என்று அபுல்பாஸல் கூறுகின்றார்.

> "மூக்கறுத்தல், காதைக் கொய்தல் போன்றவைகளைத் தடைசெய்யும் ஆணையொன்றை அரியணையேறியதும் ஜஹாங்கீர் வெளியிட்டுள்ளார். இத்தகைய தண்டனைகள் மூலம் யாரையும் மூளியாக்குவதில்லையென்று ஆண்டவரின் அரியணை முன்னால் உறுதி செய்து கொண்டோம் என அவ்வாணை குறிப்பிடுகின்றது. கண்களைப்பறிக்கும் தண்டனை வழங்கக்கூடாது என மாநில ஆளுநர்களுக்கு ஆறாம் ஆட்சியாண்டில் அவர் ஆணையிட்டுள்ளார்."[15]

குஜராத்தில் சுற்றுப்பயணம் செய்தபோது தமது பணியாளர் "ஊர்க்காரர் ஒருவரின் மிதியடிகளைப் பலவந்தமாகப் பறித்து வந்து விட்டான் என்பதற்காக, அப்பணியாளரின் பாதங்களைத் துண்டித்து வருமாறு அக்பர் கட்டளை இட்டார்."[16] "அதே போன்று முரட்டுத்தனமாக நடந்து கொண்டதற்காகவும், அவமதித்துப் பேசியதற்காகவும்

ஹம்சபானின் நா துண்டிக்கப்பட்டது."[17] "42ஆம் ஆட்சியாண்டில் இளவரசர் சலீமைத் தாக்கிப் பேசி அவமரியாதை செய்ததற்காகக் குவாஜா பூல் நுனி நாக்கை இழந்தார்." அதே ஆண்டில் இளம்பெண்ணின் கற்பைச் சூறையாடிய காஸிம் என்பானின் ஆண்மை பறிக்கப்பட்டது.[18]

முப்பத்தொன்பதாம் ஆண்டில் அரண்மனை அணி அலங்காரக் குழுவைச் சார்ந்த ஷிதா பெக் தவில்தார் என்பவன் அரண்மனைக் காவலுக்கு வராமல் இருந்துவிட்டான் என்பதற்காக அவனுக்குக் கயைடி தந்து பாமன் மாதக் குளிரில் அவன் மீது குளிர்ந்த நீரைக் கொட்டினர்- அவன் குளிர் தாங்க முடியாமல் மடிந்து போனான்.[19]

ஜஹாங்கீர் காலத்தில் இருமுறைதான் இதுபோன்ற தண்டனைகள் வழங்கப் பெற்றுள்ளன. பெண்ணைக் கெடுத்துக் கொலை செய்த குற்றத்திற்காக இராஜா விக்கிரம ஜித்தின் மகனான கல்யாண் என்பவனின் நா துண்டிக்கப்பட்டது. ஒரு முறை ஜஹாங்கீர் வேட்டையாடச் சென்று விலங்கை வீழ்த்தக் குறியெடுத்த சமயத்தில் தடையாக வந்த இரு கஹார்களின் கால்களை வெட்டிவிடுமாறு அவர் ஆணையிட்டார். அக்பர் அல்லது ஜஹாங்கீர் அவையில் பார்வையைப் பறித்தல், காது, மூக்கு அறுத்தல் போன்ற தண்டனைகள் அளிக்கப்படவில்லை. ஆயினும் இவை குறித்து ஜஹாங்கீர் இரு ஆணைகளைப் பிறப்பித்தார் என்றால் இத்தகைய தண்டனைகள் மாநிலங்களில் வழங்கப்பட்டிருக்க வேண்டும். எனவே தான் அவற்றைத் தடுத்து நிறுத்தத் தெளிவான ஆணைகள் அனுப்புவதன் அவசியம் உணரப்பட்டிருக் வேண்டுமென இபின்ஹசன் கூறுகின்றார்."[20]

நொண்டி நாடகத்தில் வரும் திருடன் பெற்ற தண்டனையைப் போல் திருடன் ஒருவன் பெற்ற தண்டனைகள் பற்றிய உண்மைக் குறிப்பு கிடைத்திருக்கின்றது. ஒருவேளை இந்த நிகழ்வை அடியொற்றி இசுலாமியப் புலவர்கள் நொண்டி நாடகம் எழுதியிருக்கலாம். பன்னிரெண்டாம் ஆட்சியாண்டில் ஜஹாங்கீர் அகமதாபாத்தில் தங்கியிருந்த போது நடந்த நிகழ்ச்சி இதுவென ஜஹாங்கீரின் துஸீக் இ ஜஹாங்கீரியில் அதன் ஆசிரியர் குறிப்பிடுகின்றார்

"நகரத்தில் காவற்தலைவர் கள்வன் ஒருவனைப் பிடித்துக் கொண்டு வந்து மன்னர் முன் நிறுத்தினார். அக்கள்ளன் ஏற்கெனவே பலமுறை திருடியிருக்கிறான். அதற்காக அவன் பல உறுப்புக்களை இழந்த நிலையில் இருந்தான். ஒருமுறை அவனது வலக்கை, மற்றொரு முறை அவனது இடக்கைக் கட்டைவிரல், பிறிதொரு சமயம் இடது காது, வேறொரு சமயம் மூக்கு என்று பலவற்றை ஒவ்வொன்றாக இழந்திருந்தான். ஒருமுறை அவனது பின்தொடை நரம்பினை வெட்டி அவனை முடமாக்கியிருந்தனர். இருந்தும் அவன் தனது தொழிலை விட்டபாடில்லை. நேற்றும் திருடுவதற்காகப் புல் வியாபாரி ஒருவன் வீட்டில் நுழைந்திருக்கின்றான். வீட்டிற்கு உரியவர் அவனைப் பார்த்துப் பிடித்துக் கொண்டார். ஆனால் அவன் அவரைப் பலமுறை கத்தியால் குத்திக் கொன்று விட்டான். அங்கு நடந்த கலவரத்திலும் குழப்பத்திலும் புல்வணிகருடைய உறவினர்கள் திருடனைத் தாக்கிப் பிடித்து விட்டனர். பழிவாங்குவதற்காக இறந்தவரின் உறவினர்களிடமே அவனை ஒப்படைக்குமாறு கட்டளையிட்டோம்."[21]

முகலாய மன்னர்கள் உறுப்புக் குறைப்பு செய்வதைச் சட்டமாக ஆக்கியிருந்துள்ளனர். நொண்டி நாடகத்தின் கருவும் இப்படியமைந்துள்ளது என்பதற்காக மட்டும் மேலே குறிப்பிட்ட குறிப்புக் கொடுக்கப்படவில்லை. இசுலாமிய மன்னர்களின் அரசு நடவடிக்கைகள் எல்லாவற்றையும் இணைத்துச் செயல்படும் போக்கிலும் தொழுகை நடத்துவதில் கண்டிப்பு, உண்ணா நோன்பிருக்க வலியுறுத்துவது போன்றவற்றை நடைமுறைப் படுத்தியுள்ளது இசுலாமிய அரசு என்பதனையும் உணர முடிகின்றது. இது போன்ற உண்மைச் சம்பவங்களை உள்வாங்கிக் கொண்ட நிலையில் இசுலாமியப் படைப்புக்கள் வடிவம் பெற்றுள்ளன.

## நொண்டி நாடகம்

முஸ்லீம் தமிழ்ப் புலவர்கள் உருவாக்கிய மற்றொரு தமிழ் இலக்கிய வடிவம் 'நொண்டி நாடகம்' என்பதாகும். இதைச் சிறப்பாகத் தம் ஆய்வுகளில் பல இடங்களில் கூறியுள்ளார் மயிலை சீனி. வேங்கடசாமி.

கதாநாயகன் ஒரு காலை இழந்தவனாக நொண்டிக் கொண்டு ஆடியபடியே தன் வரலாற்றை விரித்து உரைக்கும் முறையில் அமையும் ஒருவகைக் கூத்தே நொண்டி நாடகமாகும். இதற்காக ஆடுகளம் ஏறுவோன் தன் ஒரு காலை முழங்காலுக்கு மேல் மடித்துக் கட்டிக் கொண்டு, ஒற்றைக் காலில் தத்தித் தத்தி ஆடும் முறையில் அமைத்துக் கொள்வான். எனவே, இது 'ஒற்றைக் கால்' நாடகம் என்ற பெயராலும் அழைக்கப்படுவதுண்டு. தவறு செய்தவன் பாவமன்னிப்பு கேட்பதே நொண்டி நாடகமாகும்".

நொண்டி நாடகங்களில் முதலாவதாக உருவாக்கப்பட்ட நாடகம் 222 நொண்டிச் சிந்துக்களாலான 'செய்தக்காதி நொண்டி நாடகம்' என்பதாகும். இந்நாடகக் கதாநாயகரான செய்தக்காதி என்பவர் சீதக்காதி என அழைக்கப்படும் வள்ளல் பெருமகனாரான செய்கு அப்துல் காதிர் அவர்களாவார்.

செய்தக்காதி நொண்டி நாடகம் முழுவதும் இனிய சந்தப் பாடல்களாலாகியது. 'நொண்டி' பாத்திரத்தின் தன்மைக்கொப்ப அவன் பாடும் சந்தச் சீரும், பாடும்போது இடையிடையே தடைப்படுவது போன்று 'விட்டிசைத்தல்' முறையில் புனையப்பட்டுள்ளது. பரத்தையர் உறவு, களவு போன்றவற்றை அப்புறப்படுத்தும் போக்கில் இக்கருத்தை இசுலாமியப் புலவர்கள் இலக்கியமாக்கியுள்ளனர்.

## திருமண வாழ்த்து

முஸ்லீம் தமிழ்ப் புலவர்களால் தமிழில் புதிதாகத் தோற்றுவிக்கப்பட்ட மற்றொரு இலக்கிய வகை 'திருமண வாழ்த்து' என்பதாகும். தமிழ் இலக்கியங்களில் மணமக்களை வாழ்த்தும் பகுதிகள் இடம்பெற்றிருக்கலாம். ஆனால் 'திருமண வாழ்த்து' என்ற பெயரில் தனி வடிவமோ வகையோ உருவாக்கப்பட்டிருக்கவில்லை. இவ்வகையில் புதுவகையான இலக்கிய வடிவத்தைத் தோற்றுவித்து வளர்த்த பெருமை இசுலாமியத் தமிழ்ப் புலவர் பெருமக்களையும் சாரும்

இவ்வகையில் இயற்றப்பட்ட 'திருமண வாழ்த்து' நூல் எட்டயபுரம் உமறுகத்தாப் புலவரால் எழுதப்பட்ட 'செய்தக்காதி மரைக்காயர் திருமண வாழ்த்து' என்பது ஆகும் 448

கண்ணிகளாலான இத்திருமண வாழ்த்து தனிவகையான தொரு அமைப்புடைய இலக்கியப் படைப்பாக விளங்குகிறது.

இந்நூலைப் பின்பற்றி 19ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த அல்லாப் பிச்சைப்புலவர் என்பார் 'கதீஜா நாயகி திருமண வாழ்த்து' என்ற நூலையும், "பாத்திமா நாயகி திருமண வாழ்த்து" என்ற நூலையும் பாடியளித்துள்ளார். இந்நூல்கள் இரண்டும் முன்பெல்லாம் சாதாரணமாக முஸ்லீம்களின் வீட்டுத் திருமணங்களில் பெண்களால் இசையோடு பாடப்பட்டு வந்துள்ளன. இது போன்றே இலங்கையிலும் 'மண மங்கல மாலை' என்ற நூல் முஸ்லீம் புலவர் ஒருவரால் பாடப்பட்டு இசுலாமியர் இல்லங்களில் இசையோடு பாடப்பட்டு வந்ததாகத் தெரிகிறது.

நொண்டி நாடக வகை போன்றே இத்திருமண வாழ்த்து இலக்கிய வடிவத்தை அடியொற்றி முஸ்லீமல்லாத இந்து சமயப் புலவரான மாடசாமி ஆசிரியர் என்னும் துறவியாரால் 'நூதன கல்யாணப்பாட்டு' பாடப்பட்டுள்ளது.

## அரபுத் தமிழ்

தமிழக முஸ்லீம் மக்களாலும் இசுலாமியத் தமிழ்ப் புலவர்களாலும் தமிழ் மொழியில் உருவாக்கப்பட்ட இலக்கிய வடிவமே 'அரபுத் தமிழ்' என்பதாகும். அரபிமொழி எழுத்துருவில் (லிபி) தழிழை எழுதுவதே 'அரபுத்தமிழ்' ஆகும்.

தமிழ் மக்களின் உதிரக் கலப்புடன் ஒன்றுபட்டு விட்ட அராபியர்கள் தமிழர்களை ஏற்றது போல் தமிழ் மொழியையும் ஏற்றார்கள். தமிழைக் கற்று அதனை அரபிவடிவில் (லிபி) எழுதவும் செய்தனர். செம்மையிலா நிலையில் அரபிகள் பேசிவந்த தமிழை வரிவடிவில் எழுத நேர்ந்த போதெல்லாம் தாங்கள் நன்கறிந்திருந்த தங்கள் தாய்மொழியான அரபுமொழி வரிவடிவிலேயே தமிழை எழுதி வருவதை வழக்கமாகக் கொண்டனர். அண்ணல் நபிகள் நாயகம் காலத்துக்குப் பின்னர்த் தமிழகம் வந்த அராபியர்கள் இசுலாமியக் கருத்துக்களைத் தமிழ் மக்களிடையே எடுத்துச் சொல்லும் கட்டுப்பாடு உடையவர்களானார்கள். அப்போது இசுலாமியச் சிந்தனைகளை இங்குள்ள மக்களிடையே எடுத்துச் சொல்வதற்கு அரபு மொழி

வடிவிலமைந்த தமிழே அவர்கட்குப் பெருந்துணையாக அமைந்தது. அரபுத் தமிழில் பாடல்களை எழுதிக் குவித்தவர்களில் முதலிடம் பெறுபவர் தமிழிலும், அரபியலும் பெரும்புலமை பெற்ற காயல்பட்டணம் ஷாமு ஷிகாபுத்தீன் வலியுல்லா அவர்களே ஆவார். நூற்றுக் கணக்கான அரபுத் தமிழ்ப் பாமாலைகளை இயற்றியிருந்த போதிலும் அவற்றில் சுமார் இருபத்தைந்து அரபுத் தமிழ் நூல்கள் மட்டுமே அச்சு வாகனமேறியுள்ளன. அவற்றுள்

- ரசூல் மாலை
- அதபு மாலை
- பெரிய ஹதீது மாணிக்க மாலை
- சின்ன ஹதீது மாணிக்க மாலை என்பன

குறிப்பிடத்தக்க அரபுத் தமிழ்ப் படைப்புகளாகும்.

## அரபுத்தமிழ் நூல்கள்

காயல்பட்டணம் முஹம்மது லெப்பை ஆலிம் அவர்கள் "ஆனந்தக்களிப்பு" என்னும் நூலை அரபுத்தமிழில் யாத்துள்ளார். அதேபோன்று சின்ன உவைஸ்னா ஆலிம் அவர்கள் 'ஹக்கீத் மாலை" எனும் அரபுத் தமிழ் நூலை எழுதியுள்ளார். கீழக்கரை செய்யது முஹம்மது ஆலிம் அவர்களும் தைக்கா சாபிபு அவர்களும், இசுலாமியச் சட்டங்களை விரித்துரைக்கும் நூல்களை அரபுத் தமிழில் எழுதியுள்ளார்கள். பெண்பாற் சூஃபிக் கவிஞர்களுள் ஒருவராகக் கூறப்படும் கீழக்கரை அல்ஆரிபு செய்யிது ஆசிபா உம்மா அவர்கள் எழுதிய மெஞ்ஞான தீப இரத்தினம் என்னும் அரபுத்தமிழ் நூல் மெய்ஞானச் சிந்தனைக் களஞ்சியமாகும். நபிகள் நாயகம், அபூக்கர் (ரலி), கல்வத்து நாயகம் (வலி), அஜ்மீர் முயினுத்தீன் ஆண்டகை ஹஸன் ஹீசைன், ஆரிபு நாயகம் மற்றும் மழை, தாலாட்டு, அடைக்கலம், பிரார்த்தனை முதலாக எண்பத்தைந்து தலைப்புகளில் கண்ணி, விருத்தம், ஆனந்தக் களிப்பு, கும்மி, வெண்பா, பதிகம், மாலை ஆகிய பாவகைகளில் அரபுத்தமிழில் பாடியளித்துள்ளார். முஸ்லீம்கள் படைத்துள்ள கலம்பக நூல்களுள் இசுலாத்துக்கு முரணான சில அகப்பொருள் துறைகள் விடப்பட்டிருக்கின்றன.

'களி'ஈண்டு நோக்கத்தக்கது. கட்குடியர் கள்ளையும் அஃது உண்டார்கும் தென்னை முதலியவற்றையும் சிறப்பித்துக் கூறுவது இது. மக்காக் கலம்பகம் போன்றவற்றில் இது இடம்பெறவில்லை. பிச்சியர், கொற்றியார், வலைச்சியர் முதலியன இசுலாத்துக்கு முரணானதால் கலம்பகங்களில் அவை இடம்பெறவில்லை.

மக்கா கலம்பகம், மதீனா கலம்பகம், திருமதீனக்கலம்பகம், பதாயிகு கலம்பகம், குவாலீர் கலம்பகம், திருக்கோட்டாற்றுக் கலம்பகம், திருபகுதாது கலம்பகம் போன்ற கலம்பக நூல்கள் தமிழில் உள்ளது போன்றே ஊரின் பெயரால் அமைந்தவைகளாக உள்ளன.

இவற்றில் உள்ளடக்க நிலையில் மட்டும் ஒற்றுமை, வேற்றுமைகள் காணப்படுவதால் அவை பாடப்பட்ட ஊர், தலைவன், வரலாற்று நிகழ்ச்சி என்ற வகைகளில் அடங்குகின்றன.

மக்காக்கலம்பகம் நபிகள் மக்காவுக்குச் செல்லும் புனிதயாத்திரை (ஹஜ் யாத்திரை) யின் முக்கியத்துவத்தைப் பற்றி எடுத்துரைக்கின்றது.

## அந்தாதி

மதீனாக் கலம்பகம் மதீனா - (பட்டணம்) நபிகளின் அடக்கவிடம் (புதைவிடம்), அதன் சிறப்பு முதலியனவற்றையும் பேசுகின்றது.

இசுலாமியக் கலம்பகங்கள் தொடர் பொருளுடையதாக அமையவில்லை. இசுலாமின் அடிப்படைக் கருத்துக்களை வலிந்து கூறுவனவாக உள்ளன. இது தனிச்சிறப்பாக அமைகின்றது. இவ்வாறு தமிழ்க் கலம்பகங்களில் அமைந்திருக்கவில்லை.

மூன்று நிலைகளில் பாடலின் பொருளமைவு வெளிப்பாடு காணப்படுகின்றது.

1. அகப்பொருள்
2. புறப்பொருள்
3. அகப்புறம் என்ற நிலைகளில் பொருள் வெளிப்பாட்டு முறை அமைகின்றது. அதோடு இசுலாமியக்

கலம்பகங்களில் 18 உறுப்புகளின் எண்ணிக்கை காணப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இசுலாமியக் கலம்பகங்களில் வரலாற்று நிகழ்ச்சிகள் அதிகமாகக் காணக் கிடக்கின்றன.

புரவலராற்றுப்படை (1901) - குலாம் காதிறு புலவரால் இயற்றப்பட்டதும், செய்கலாவுதீனின் - புரவலராற்றுப்படையும் இசுலாமியர்களின் சிறப்பு வாய்ந்த சிற்றிலக்கியச் செல்வங்களாக அமைகின்றன. பொன்னரிய மாலை என்ற இலக்கியம் முகம்மது நபி அவர்கள் விண்ணுலகம் எய்தும் முன்னர்க் கூறிய பொன்மொழிகளைக் கெண்டுள்ளதால் இப்பெயர் பெற்றுள்ளது. இது 'ஒசியத்' என்றும் அழைக்கப்படுகிறது. மரணப்படுக்கையில் இருக்கும் ஒருவர் தம் உற்றார் உறவினருக்குக் கூறும் புத்திமதிகளையே ஒசியத் என்பர். இவ்விலக்கியத்தில் பறைசாற்றுவோர் தமிழ் மரபுக்கிணங்க வள்ளுவர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளனர். ஏசல் எனும் சொல் இகழ்தல் எனும் பொருளதாய் ஏசலொப்பன. கோகிலப் பறவைகள் இசைத்தல் எனக் கந்தபுராணம் குறிப்பிடும். வெகுளி, இளிவரல் போன்ற மெய்ப்பாட்டுச் சுவை தோன்றவும் பாடப்பெறும் ஏசல்.

சாஹில் ஹமீதுப் புலவர் - நபிகள் நாயகம் பேரில் காதல் பாடல்களையே அடிப்படையாகக் கொண்டுள்ளதற்கு வள்ளி தெய்வானை ஏசல், எட்டிக்குடி ஏசல் போன்றவை இதற்கான சான்றுகளாகும்.

பாக்கள் பூமாலை போல் தொடுக்கப்பட்ட சிற்றிலக்கியமே மாலை எனப்படும். இசுலாமியப் பிரபந்தங்களில் மாலை நூற்களே அதிகம். ஏறத்தாழ 150 மாலைகள் பாடப்பட்டுள்ளன. பாடு பொருளால் அவை பல்திறத்தன. முதுமொழி மாலை நபிகள் நாயகத்தைப் போற்றிப் புகழ்பவை. இரசூல்மாலை இசுலாமிய விழாக்களில் ஓதப்படுபவையாக உள்ளன. அபுத மாலை அகந்தெளியும் மாலை போன்றவை முஸ்லீம்களின் மார்க்க அறிவை வளர்க்கும் பொருட்டு எழுதப்பட்டுள்ளன.

ஒசியத்து மாலை போன்றவை இழவு வீடு போன்ற இடங்களில் கூடியிருக்கும் அனைவரும் அறியும் பொருட்டுப் படிக்கப்பட்டிருக்கின்றன பொன்னரிய மாலை இராஜணி

மாலை, போன்றவை இசுலாமியர் கடைப்பிடித்து ஒழுக வேண்டிய நெறிகளைக் கூறுகின்றன. திருமணி மாலை, கனகாபிஷேக மாலை போன்றவை காப்பியம் போல் எழுதப்பட்டுள்ளன.

குறம் என்ற இலக்கிய வகையைச் சார்ந்த மூரான் கனி அண்ணாவியாரின் குறமாது என்ற நூலில் புலவர் குறத்தி ஒருத்தியைக் கற்பனையாகப் படைத்து, அவள் அராபத மலையில் இருந்துவந்து அண்ணல் நபிகளைத் தரிசித்து இசுலாத்தைத் தழுவியதாகப் பாடுபொருள் அமைந்திருக்கும்.

முருகனைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு அண்ணாமலை ரெட்டியாரால் 19ம் நூற்றாண்டில் காவடிச்சிந்து முதன் முதலாகப் பாடப்பெற்றது. இசுலாமிய நெறிமுறையில் காவடி எடுக்கும் வழக்கின்மையின் அந்த இலக்கிய வகையினை இசுலாமியம் தோன்றப் படைக்க எண்ணிய முஸ்லீம் புலவர்கள் பூவடிச் சிந்து பாடினர். இதன் இசைவகை அனைத்தும் காவடிச் சிந்து மெட்டிலேயே அமைந்திருக்கும்.

## இசுலாமியச் சிறுகதை, நாவல், உரைநடை, கவிதை இலக்கியம்

நாவல் இலக்கியத் துறையில் இசுலாமியரின் படைப்புகள் தனித்துவம் பெற்று நிற்பதைக் காணமுடிகின்றது. இசுலாமியத் தத்துவங்களை தொனிப் பொருளாகக் கொண்டும், அவ்வாறன்றி பொதுவாகவும் இவர்களது நாவல்கள் அமைகின்றன. எனினும் 'இசுலாமியப் படைப்பாளி' தான் வாழும் சமூகத்தின் கண்ணாடியாக நின்று அதன் பிம்பத்தைப் பிரதிபலிக்கின்றான்' இன்றைய இசுலாமியப் படைப்பாளிகள் தம்படைப்புகளில் சமூக ஊடாட்டங்களைத் தமிழகப் பின்னணியில் படைத்து வருகின்றனர். தூயவன், தோப்பில் முகம்மது மீரான், ஜே.எம்சாலி, மகுதூம், கருணா மணாளன், இருகூரான், மலையாளத்து வைக்கம் முகம்மது பஷீர், ஜே.எம். சேக்கோ, ஆர்பி மல்லாரி, ஜெய்புன்னிஸா, அப்துல் ரஹீம் இப்படி இசுலாமியப் படைப்பாளிகளின் வரிசை நீளும்.சிறுகதை இலக்கியத்தைப் பெறுத்தவரை செல்வாக்கு குறைவாகவே காணப்படுகின்றது. முஸ்லீம் முரசு, பிறை போன்ற

பத்திரிக்கைகள் சிறுகதைகளை வெளியிட்டு வந்தன. தமிழ் முஸ்லீம் மக்களின் வாழ்க்கைப் பிரச்சினைகள், திருமணம், வரதட்சணை, மணமுறிவு, வாணிபம், இறைமார்க்கம் போன்றவையே இவர்கள் தம் படைப்புகளின் கருப் பொருள்களாக அமைகின்றன. காதல், பாலியல் போன்றவற்றைத் தம் படைப்புகளில் கையாளாமல் ஒட்டுமொத்த வாழ்க்கை மற்றும் இறைநெறியை ஆதாரமாகக் கொண்டே இவர்தம் படைப்புகள் அமைகின்றன.

தாமிரப்பட்டணம் எனும் நாவலே இசுலாமியரது முதல் படைப்பாக நாவல் இலக்கியத்தில் கருதப்படுகின்றது. மகான் மாப்பிள்ளை லெப்பை ஆலிம் என்பவரால் படைக்கப்பட்ட இந்நாவல் சிறுபத்திரிக்கை ஒன்றில் தொடராக வெளிவந்த நாவல் ஆகும். இது வரலாற்று நாவலாகச் செய்யுள் வடிவில் அமைந்துள்ளது. தமிழில் முதல் நாவல் இதுதான் என்ற சர்ச்சைக்கு ஆளாகிய படைப்பாகக் கூறப்படுகின்றது. கவிதை இலக்கியம் என்ற வகையில் முகையாதீன் புலவர், வாப்பு மரைக்காயர், ஹஸன், கோட்டாறு, பீர் முகமது சாஹிப், அப்துல் ரஹ்மான், மதனி சாஹிப், ஏ.எம்.அலி, இன்குலாப், பொதிகை ஹமீது, சீர்காழி இறையன்பன் ஹெச்.வி. ரசூல், முஸ்தபா போன்றோரின் பங்களிப்புகள் சிறப்பாகக் காணப்படுகின்றன.

நாடக இலக்கியத்திலும் இசுலாமியப் புலவர்கள் தம் பங்களிப்பைச் சிறப்புடன் செய்துள்ளனர். செய்தக்காதி நொண்டி நாடகம் சிறப்பு மிக்க நாடகம் ஆகும். எனினும் இசுலாமிய மார்க்கப் பெரியோர்கள் நாடக இலக்கியத்தை விரும்பி ஆதரித்ததாகத் தெரியவில்லை என்று கூறும் ஜெகாதா அவர்கள் தம் 'இதயம் தொட்ட இசுலாமிய இலக்கியம்' எனும் நூலில் அதற்கான காரணமாக ஒரு ஆண்மகன் பெண்ணைப் போல் வேடமிடுவதும் பெண் ஆணைப் போல் வேடமிடுவதும் இசுலாத்தில் விலக்கப்பட்ட செயலாகும்.[21] இது போன்ற காரணங்களால் நாடகங்களுக்கு எதிர்ப்பு தெரிவிக்கப்பட்டதாகக் கூறியுள்ளார். எனினும் அப்பாசு நாடகம், அலிபாத்துஷா நாடகம், தையார் சுல்தான் நாடகம், சந்தரூபி நாடகம், சீறா நாடகம், நொண்டி நாடகம் போன்றவை சிறப்புப் பெற்ற நாடகங்களாகும்.

### கவிதைகள்

16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஆலிப் புலவர் என்பாரிலிருந்து இசுலாமியக் கவிதை இலக்கியம் துவக்கம் பெறுகின்றது. பேரா. மு.சாயுபு மரைக்காயர் எண்ணப்பூக்கள், மழலைச்செல்வம், புதியதோர் உலகம் செய்வோம் போன்ற கவிதை நூல்களை எழுதியுள்ளார்.

அப்துல் ஹாதியின் பறவையின் பதில், முகம்மது மூசாபின் நாயகத் திருமேனி, அருட்வி முகமது தாஹாவின் கவிதைக் கனிகள், திருவை அப்துல் ரஹ்மானின் சொர்க்கத்து மாமலர்கள், சீர்காழி இறையன்பனின் விடிவெள்ளியே விழித் தெழு போன்றவை சிறந்த படைப்புகள் ஆகும்.

இவர்களையன்றி, இலந்தை இப்ராஹிம், பொன்னகரம் சுல்தான், நாகூர் சலீம், புலவர் சிக்கந்தர், சாந்திதாதன், அப்துல் ஃபாருக் போன்றோரும் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர். புதுக்கவிதை எனும் துறையில் அப்துல் ரகுமானின் பால்வீதி, நேயர் விருப்பம் போன்றவை சிறந்த படைப்புகள் ஆகும். கவிஞர் மு. மேத்தா ஏராளமான கவிதைகளை வெளியிட்டுப் பெருமை சேர்த்தவர் ஆவார். டாக்டர் பீ.மு. அப்துல்லாவின் மௌனத்தின் நாவுகள், அந்தர நடை என்ற ஒன்று ஆகியவை புதுக்கவிதைத் துறையில் ஈடு இணையற்றவை.

### குழந்தை இலக்கியம்

இவ்வகை இலக்கியத்தில் முனனோடியாகத் திகழ்ந்தவர் ஷாம் ஷிகாபுத்தின் வலிபால்லா ஆவார். இவரது "தொழுகையில் தூண்கள் என்னும் நூல் சிறுவர்க்கான சிறந்த நூலாகும். மேலும் சேகனாப்புலவரின் "சொர்க்கநீதி", ஆலிம் சாஹிப்பின் "இசுலாமியப் பால போதம்", மதிதாசனின் "கத்திக்கப்பல்", ஈந்த மரைக்காயர் புலவரின் "எண்ணெய்ச் சிந்து" போன்றவை சிறந்த படைப்புகளாகும். அகமது பஷீரின் இசுலாமியக் குழந்தை இலக்கியம் பராட்டத்தக்க நூலாகும்.

### இசுலாமியத் தமிழ்ச் சிறுகதைகள்

இருபதாம் நூற்றாண்டில் தமிழுக்கு அறிமுகமான புத்திலக்கிய வகைகளுள் புனைகதைத் துறையும் ஒன்றாகும்.

சிறுகதை, புதினம் எனப்படும் இருவகை இலக்கியங்களைக் குறிக்கும் பொதுச் சொல்லாகப் புனைகதை (Fiction) கருதப்படுகின்றது. இவற்றுள் சிறுகதை என்பது ஏதேனும் ஓர் நிகழ்ச்சி, ஓர் உணர்ச்சி, ஒரு சிக்கல், ஒரு பாத்திரப்படைப்பு என்பனவற்றுள் ஒன்றினை மட்டும் அடிப்படையாகக் கொண்டு மக்கள் வாழ்க்கையைக் கலையழகுடன் படம்பிடித்துக் காட்டும் ஒரு அரிய சாதனமாக விளங்குகின்றது.

19ஆம் நூற்றாண்டிலேயே மேனாடுகளில் பரவத் தொடங்கிய சிறுகதை, தமிழில் அறுபதாண்டுகளுக்கு முன்னர்தான் வேரூன்றத் தொடங்கியது எனலாம். தற்பொழுது தமிழில் ஆண்டுக்கு ஐயாயிரத்துக்கும் மேற்பட்ட சிறுகதைகள் வெளிவருகின்றன. தமிழ்ப் பத்திரிக்கைகள் சிறுகதைகளுக்குச் சிறப்பிடம் தந்து வெளியிடுகின்றன.

கதைகள் எல்லோருக்கும் பொதுத்தன்மை உடையன. சிறுகதைகளின் மூலம் சொல்லப்படுகின்ற கருத்துக்கள் உலகம் முழுவதும் வாழ்கின்ற மக்களுக்கே உரியனவாகும்.

அரபு நாட்டுக் கதைகள், இந்தியக் கதைகள், பிரெஞ்சுக் கதைகள், ருஷ்யக் கதைகள் என்று பகுத்துப் படிப்பது, அந்தந்த நாட்டின் பண்பாட்டையும், பழக்க வழக்கங்களையும் நாம் எளிதில் அறிவதற்குத் துணைபுரிகின்றது. அது போன்றே காந்தியக் கதைகள், மார்க்சியக் கதைகள் என்ற பகுப்பு அவ்வத் தத்துவங்களை நாம் உணர்வதற்குத் துணை புரிகின்றன. அவ்வாறே 'இசுலாமியச் சிறுகதைகள்' இசுலாத்தை வாழ்வியல் நெறியாகக் கொண்டே எழும் தமிழ் முஸ்லீம்களின் பண்பாடுகளையும், பழக்க வழக்கங்களையும் கண்டறிவதற்குத் துணை புரிகின்றன.

எனவே முஸ்லீம்களின் சமய, சமூகப் பண்பாட்டுப் பழக்க வழக்கங்களை, முஸ்லீம்களின் வாழ்க்கைப் பின்னணியை அடிப்படையாக் கொண்டே விளங்குகின்ற தமிழ்ச் சிறுகதைகளை 'இசுலாமியத் தமிழ்ச் சிறுகதைகளை' என்று அழைக்கலாம். இசுலாமியத் தமிழ்ச் சிறுகதை இலக்கியம் ஏறக்குறைய 40-ஆண்டுக்கால வரலாற்றினைப் பெற்றிருக்கிறது.

"தமிழ்நாட்டுக் கதைகளில் முஸ்லீம் வாழ்க்கை சித்திரிக்கப் பெறாததற்குக் காரணம், எழுத்தாளர்கள் அவர்களைப் பற்றித் தெரிந்து கொள்ளாதது தான். தெரிந்து கொள்வதும் அவ்வளவு எளிதல்ல. முஸ்லீம்களின் மத உணர்ச்சி மிக நுண்ணியது. வாழ்க்கை முறை கட்டுத் திட்டமுள்ளது. முஸ்லீம்களைத் தவிர மற்றவர்கள் எளிதில் புரிந்து கொள்ள முடியாதது. ஆகவேதான் முஸ்லீம் அல்லாத எழுத்தாளர்கள் பொதுவாக இதுபற்றி எழுதத் தயங்குகின்றார்கள்"

என்று எழுத்தாளர் அகிலன் கூறுவதும் எண்ணத் தகுந்தது.

ஆகவே முஸ்லீம் அல்லாதவர்கள் இசுலாமியத் தமிழ்ச் சிறுகதைகளை எழுதுவது சற்றே கடினமான செயலாகும். வ.வே.சு. ஐயர் (அனார்க்கலி), கு.ப. ராசகோபாலான் (நாருன்னிசா) போன்றோர் எழுதிய இசுலாமியத் தமிழ்ச் சிறுகதைகளில் முஸ்லீம் பெயர்களைக் காண முடிகின்றதே தவிர, இசுலாமியக் குடும்பப் பின்னணியைக் காணமுடியவில்லை.

## இசுலாமியத் தமிழ்ச் சிறுகதைகளின் தோற்றம்

1940ம் ஆண்டு முதல் 1950ம் ஆண்டு வரையிலான பத்தாண்டுகளை இசுலாமியத் தமிழ்ச் சிறுகதை இலக்கியத்தின் தொடக்ககாலம் எனலாம். இக்கால கட்டத்தில்தான் சிறுகதைகள் ஒரு அமைப்புக்குள்ளும், வடிவத்திற்குள்ளும் படைக்கப்பட்டன. 1940 ஆண்டுகட்கு முன்பே கதைகள் படைக்கப்பட்டன என்பது உண்மையாகும். ஆனால் அவை வடிவத்திலும் அமைப்பு முறையிலும் சிறுகதைகளாக, முழுமையாக அமையவில்லை.

இக்குறிப்பிட்ட காலத்தில் இசுலாமியப் போதனைகள் அடிப்படையில் சில கதைகள் வெளிவந்தன. சில மொழிபெயர்ப்புக் கதைகளும் வெளிவந்தன. 1921ம் ஆண்டு வெளிவந்த 'தாருல் இஸ்லாம்' என்ற பத்திரிக்கையின் ஆசிரியராக விளங்கிய அறிஞர் பா.தாவூத்ஷா, கதைகள் பலவற்றை இயற்றியுள்ளார். 'அல்ஃபு லைலா வலைலா' என்னும் ஆயிரத் தொரு இரவு அரபுக்கதைகளையும் மொழிபெயர்த்துள்ளார். மதுரைப் புலவர் மு.க.மு.காதரின் முகியித்தீன் மரைக்காயர்,

டி.எப்.ஆர். ஆளஆலி சாகிப் போன்றோரும் இவ்விதக் கதைகளை எழுதியுள்ளனர்.

இவ்வாறு தொடக்கக் காலத்தில் அதிக அளவில் சிறுகதைகள் வெளிவரவில்லை. அதற்குப் பல காரணங்களைச் சொல்லலாம். அவை :

1. கற்பனை, புனைந்துரை கதைகளுக்குத் தமிழ் முஸ்லீம் வாசகர்களிடையே நல்ல வரவேற்பு கிடைக்கவில்லை.

2. முஸ்லீம் பத்திரிக்கைகள் தொடக்கத்தில் ஒன்றிரண்டே வெளிவந்தன. சிறுகதைகளை வெளியிடுவதில் அவை ஆர்வம் காட்டவில்லை.

3. பத்திரிக்கை படிக்கும் பழக்கம் முஸ்லீம்களுக்கு அதிகம் இல்லை.

4. நமது பெரியவர்கள் சமூகச் சார்புடைய நூல்களைப் படிப்பதையே முக்கியமாகக் கொண்டவர்கள். பயனற்ற செய்திகளைப் படிப்பதை அவர்கள் விரும்பவில்லை. சிறுகதைகளும், கீழ்த்தரமான செய்திகளும் விரும்பித் தகாத விளைவுகளை உண்டு பண்ணும் என்று அவர்கள் கருதினார்கள். இந்தக் காரணத்திற்காக அவர்கள் சிறுகதையை விரும்பவில்லை.

5. கட்டுத்திட்டமான முஸ்லீம் வாழ்க்கை முறைகள், பழக்க வழக்கங்கள் ஆகியவைகளுக்கு உட்பட்டு எழுத வேண்டும் என்ற கட்டாய நிலை மற்றுமொரு காரணமாகும். இத்தகைய காரணங்களாலும், கட்டுப்பாடுகளாலும் தொடக்கக் காலத்தில் இசுலாமியத் தமிழ்ச்சிறுகதைகள் வெளிவரவில்லை. 1945ம் ஆண்டுக்குப் பிறகே சிறுகதைகள் வடிவத்தோடும், வளப்போடும் வெளிவரத் தொடங்கின.

இந்தக் காலக்கட்டத்தில் முஸ்லீம் வாசகர்களிடம் முதன்முதலாகச் சிறுகதை படிக்கும் ஆர்வத்தைத் தூண்டியவர் திருச்சி ரசூல் அவர்களே. இவர் சிறந்த பத்திரிக்கையாளராகவும் விளங்கினார். இவருடைய முதல் சிறுகதைத் தொகுதியான 'இரு எலும்புக் கூடுகள்' திருவனந்தபுரத்தில் பன்னூல் பதிப்பகத்தாரால் 1948ம் ஆண்டு வெளியிடப்பட்டது. இஸ்லாமியத் தமிழ்ச் சிறுகதை நூல்களில் இந்நூலே முதல் நூலாகும். பத்துக்

கதைகளைக் கொண்ட இந்நூலில் இசுலாமியப் பின்னணியில் அமையாத சில கதைகளும், உருதுமொழித் தழுவல்களாகச் சில கதைகளும் உள்ளன.

1949இல் ரசூலின் இரண்டாவது சிறுகதைத்தொகுதியாகிய பாழடைந்த பள்ளி வாயில் வெளியானது. எட்டுக் கதைகளைக் கொண்ட இந்நூலில் ஐந்து கதைகள் மட்டுமே இசுலாமியப் பின்னணியில் அமைந்தவை. 1950ஆம் ஆண்டு இவர் தம் மூன்றாவது சிறுகதைத் தொகுதியான 'ஈத் முபாரக்' ஆறு கதைகள் கொண்டதாக வெளி வந்துள்ளது.

இவ்வாறு அடுத்தடுத்து மூன்று சிறுகதைத் தொகுப்புகளை வெளியிட்டு இசுலாமியத் தமிழ் சிறுகதைக்கு வித்திட்டவர் திருச்சி ரசூல் ஆவார். அவருடைய சிறுகதைகள் உணர்ச்சியூட்டும் படைப்புகள் என்று அந்நாளிலேயே பாராட்டுப் பெற்றுள்ளன. சமுதாயச் சீர்திருத்தமே அவருடைய சிறுகதைகளின் கருப்பொருள் எனலாம். ஆயினும் தொடக்கத்தில் அதிகமான சிறுகதைகளை எழுதியவர், காலப்போக்கில் சிறுகதை எழுதுவதையே அடியோடு நிறுத்தியுள்ளார்.

## இசுலாமியத் தமிழ்ச் சிறுகதைகளின் வளர்ச்சி

1950ம் ஆண்டிற்கும் 1960ம் ஆண்டிற்கும் இடைப்பட்ட 10 ஆண்டுக் காலத்தை 'இசுலாமியத் தமிழ்ச் சிறுகதைகளின் பொற்காலம்' எனலாம். தொடக்கக் காலத்தில் தளர் நடை போட்ட சிறுகதைகள், காலப்போக்கில் 'முஸ்லீம் முரசு' 'மணிவிளக்கு' 'பிறை' ஆகிய மூன்று இதழ்கள் தோன்றியதால். அவற்றின் மூலம் மறுமலர்ச்சி பெற்று வளரத் தொடங்கின.

இவ்விதழ்கள் எழுத்தாளர்களிடையே சிறுகதைப் போட்டிகளை நடத்தி, இசுலாமியத் தமிழ்ச் சிறுகதைகளை வளர்த்தன. அதனால் முஸ்லீம் தமிழ் எழுத்தாளர்கள் புதிய ஊக்கமும், எழுச்சியும் பெற்றனர். முஸ்லீம் வாசகர்களிடையே சிறுகதை படிக்கும் ஆர்வம் வளர்ந்தது.

சமூகச் சிறுகதைகள், சரித்திரச் சிறுகதைகள், நகைச்சுவைச் சிறுகதைகள், உருவகக் கதைகள், அங்கதக் கதைகள் எனப் பல பிரிவுகள் இசுலாமியத் தமிழ்ச் சிறுகதைகளில் தோன்றின.

1950ம் ஆண்டிற்கும் 1960ம் ஆண்டிற்கும் இடைப்பட்ட பத்தாண்டு காலத்தை, இசுலாமியத் தமிழ்ச் சிறுகதைகளின் பொற்காலமாக மாற்றிய எழுத்தாளர்களுள் வி.நூர் முகம்மது, திருச்சி ரசூல், ஜமீலா, ஆர்.பி. மல்லாரி, மஹதி, ஜோபெம், ஷேக்கோ, மகுதூம் ஆகிய எட்டு எழுத்தாளர்களையும் தமிழ்நாட்டுக் கதை பிரம்மாக்கள் எனக் குறிப்பிடலாம் என்று இலங்கையைச் சேர்ந்த ஆய்வாளர் எம்.எச்.எம். சம்ஸ் என்பவர் குறிப்பிட்டுள்ளார். இசுலாமியச் சிறுகதையை வடிவோடும், வனப்போடும் தந்தவர்களில் முஸ்லீம் எழுத்தாளர்களுக்கு முன்னோடியாக விளங்குபவர் வி. நூர்முகமது ஆவார். 1952ஆம் ஆண்டு இவருடைய "சம்மதமா?" என்ற சிறுகதைத் தொகுதி வெளிவந்தது. இந்நூலில் எட்டுக்கதைகள் இடம்பெற்றுள்ளன. "காக்கை கருநிறத்தில் தான் இருக்கவேண்டும். கதைகளும், பட்டவர்த்தனமாக உண்மையோடு உருவாகியே செல்ல வேண்டும். என் கதைகளில் இன்றைய சமூகத்தின் வாழ்க்கை பெரிதும் எதிரொலிக்க வேண்டும்'' என்று இந்நூலின் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார். பெண்ணின் பெருமையும், பெண் உரிமையுமே இவர் கதைகளின் கருப்பொருளாக அமைந்துள்ளன.

எம். கிஸ்மத் பாட்சா எழுதிய "வாழ்வுப் போராட்டம்" என்னும் சிறுகதைத் தொகுதியும் 1952ம் ஆண்டில் வெளிவந்தது. 'ஒலி பரப்பப்படாத செய்தி' 'திரை' என்னும் இரண்டு கதைகள்மட்டுமே இசுலாமியப் பின்னணியில் எழுதியுள்ளார். முதல் கதை இந்து முஸ்லீம் ஒற்றுமையையும், இரண்டாம் கதையில் இசுலாம் விதித்துள்ள பர்தா முறை பற்றிப் புதிய தலைமுறைக்கும், இளைய தலைமுறைக்கும் இடையே நடைபெறும் போராட்டத்தையும் விவரித்துள்ளார்.

கல்கியின் பாராட்டுக்களைப் பெற்ற முஸ்லீம் எழுத்தாளர் மஹதி ஆவார். 1957ம் ஆண்டு "இமயத்தின் சிரிப்பு" என்ற சிறுகதைத் தொகுதியை வெளியிட்டார். 15 கதைகளைக்கொண்ட இந்நூலில் 12 சிறுகதைகள் இசுலாமியப் பின்னணியில் அமைந்தவை. இவர் வரலாற்றுக்கதைகள் படைப்பதில் சிறந்து விளங்கினார்.

இசுலாமியச் சிறுகதைகளைப் படிக்க வேண்டுமென்ற ஆசையை மற்ற சமயத்தார்களுக்கு முதலில் ஏற்படுத்தியவர்

முஸ்லீம் எழுத்தாளர் 'ஜமீலா' என்ற புனைப்பெயர் கொண்ட 'மஸ்ஹருதீன்' ஆவார். 'கலைமகள்' பத்திரிக்கையின் வளர்ப்புப் பிள்ளைகளுள் ஒருவராகச் சிறுகதை உலகிற்கு அறிமுகமானவர். அவருடைய கதைகள் முஸ்லீம் பத்திரிக்கைகளில் வெளியானதைவிடக் 'கலைமகள்', 'கல்கி', 'ஆனந்த விகடன்' போன்றவற்றில் வெளியானதே அதிகமாகும். 1957ம் ஆண்டில் இவரது 'பெருநாள் பரிசு' என்னும் கதைத் தொகுதியைக் கலைமகள் காரியாலயம் வெளியிட்டது. நல்ல சில உணர்வுகள், அவை வாழ்வில் இயைந்துள்ள இயைபுகள், அவற்றிற்கு அமைந்த தெளிவான கலை வடிவங்கள் என்று இவருடைய சிறுகதைகளை மு.வ. பாராட்டியுள்ளார்.

கலைமகள் மூலம் சிறுகதை உலகுக்கு அறிமுகமான மற்றொரு முஸ்லீம் எழுத்தாளர் ஆர்.பி. மல்லாரி ஆவார். 1959ல் "மழலைச் சித்திரம்" என்ற இசுலாமியச் சிறுகதைத் தொகுதியை வெளியிட்டார். வாழ்க்கையில் நான் வாழ்ந்த, மற்றவர்கள் வாழ, நான் கண்ட சிறு சம்பவங்களையும் பின்னணியாகக் கொண்டு சற்று மெருகும் மாற்றங்களும் கொடுத்துக் கதை வடிவங்கள் கொடுத்திருக்கிறேன் என்று தம் சிறுகதையைக் குறிப்பிட்டுள்ளார். அரபு, உருதுச் சொற்கள் இவரது கதையில் அதிகமாகக் காணப்படுகின்றன

இசுலாமியத் தமிழ்ச் சிறுகதைகளுக்கு முன்னோடியாக விளங்கிய மற்றொரு முஸ்லீம் எழுத்தாளர் ஜெயம். 1960ல் 'இஸ்லாமியக் கதைகள்' என்னும் அவரது சிறுகதைத் தொகுப்பு வெளியானது. திருக்குர்ஆன் கருத்துக்களும், நபிகள் நாயகத்தின் நல்லுரைகளும் இவரது பல கதைகளில் காணப்படுகின்றன. கைக்கூலி முறையைக் கண்டித்தல், முஸ்லீம் பெண்களிடம் வேரூன்றி விட்ட பேய், பிசாசு மூட நம்பிக்கைகளையும், சமாதி வழிபாடுகளையும் சாடுதல், குடும்பத்தைப் பிரிந்து வெளிநாடுகளில் வாழும் முஸ்லீம்களின் குடும்ப வாழ்க்கை, சமூகச் சீர்திருத்தம் ஆகியவைகளையே கருப்பொருளாகக் கொண்டு சிறுகதைகளை இயற்றியுள்ளார்.

அதிகமான அளவில் இசுலாமியத் தமிழ்ச் சிறுகதைகளைப் படைத்த முஸ்லீம் எழுத்தாளர் ஷேக்கோ ஆவார். ஏறத்தாழ இருநூறு முஸ்லீம் சிறுகதைகளை எழுதியுள்ளார். அவை

'சொர்க்க வாசல்' 'நெஞ்சில் ஓர் இடம்' 'இசுலாமியக் கதைச் செல்வம்' 'ஷேக்கோவின் சிறுகதைகள் என்னும் நான்கு தொகுதிகளாக வெளிவந்துள்ளன.

மகுதூம் மற்றொரு முஸ்லீம் முன்னோடி எழுத்தாளர். 1943ம் ஆண்டில் 'பிரசண்ட விகடன்' மூலம் அறிமுகமானவர். தொடர்ந்து ஆனந்த போதினி, தோழன், கலைமகள் போன்ற எண்ணற்ற சிறு பத்திரிக்கைகளில் சிறுகதைகளை எழுதியுள்ளார். இவரது கதைகள் நெல்லை மாவட்டத்து மண்ணின் மணம் கமழ்கின்றன. இவரது கதைகள் பலவும் கணவன்-மனைவி உறவில் ஏற்படும் சிக்கல் பற்றியதாகவும், மணமுறிவு பற்றியதாகவும் அமைந்துள்ளன.

இசுலாமியச் சிறுகதைப் படைப்பாளராகவும், தொகுப்பாளராகவும், திறனாய்வாளராகவும் சிறந்து விளங்கி வருபவர் ஜெ.எம்.சாலி ஆவார். இவர் 'விலங்கு' 'சாயல்' என்னும் இரண்டு தொகுப்புகளை வெளியிட்டுள்ளார். புகழ்பெற்ற முஸ்லீம் சிறுகதை எழுத்தாளர்களின் சிறந்த கதைகளைத் தொகுத்துத் 'தமிழக முஸ்லீம் சிறுகதைகள்' என்ற நூலாக வெளியிட்டுள்ளார்.

இவர்களேயன்றி ஆர்.பி.எம். கனி, சீதக்காதி, மகனீ, ஷாஹா டி.ஸி. துபாஸ், எம்.ஏ. அக்பர், கஷஸ், எஸ்.எஸ்.அலி, ஹஸன், எம்.ஆர்.எம். முகம்மது முஸ்தபா, எம்.அப்துல் வகாப், ஏ.கே. ரிபாயி, சாரண பாஸ்கரன், கா. அப்துல் சத்தார், கே.பி. செய்குத்தம்பி, இரு கூரான், ஜியாவுதீன், ஆவூர் முகியித்தின், நூருன்னிஸா, ஜெய்புன்னிஸா, டி.கே.எம். காதர் போன்ற நூற்றுக்கும் மேற்பட்ட முஸ்லீம் எழுத்தாளர்கள் தரமான இசுலாமியத் தமிழ்ச் சிறுகதைகளைப் படைத்துள்ளனர்.

### மலேசியா, ஈழத்து இசுலாமியத் தமிழ்ச் சிறுகதைகள்

தமிழகத்தில் மட்டுமின்றி மலேசியா, இலங்கை போன்ற அயல் நாடுகளில் வாழ்கின்ற எழுத்தாளர்களும் முஸ்லீம் குடும்பங்களைப் பின்னணியாகக் கொண்டு இசுலாமியத் தமிழ்ச் சிறுகதைகளைப் படைத்துள்ளனர்.

1973ல் "இறைவன் இவர்களை மன்னிப்பானா" என்ற தலைப்பில், மலேசியாவிலிருந்து ஒரு சிறுகதைத் தொகுப்பு வெளியானது.

இந்நூலை ஆ.கி. முகம்மது இபுறாகிம் (திருகிம்) என்ற எழுத்தாளர் எழுதியுள்ளார். இதில் பத்துக் கதைகள் காணப்படுகின்றன. இவர் எழுதிய மற்றொரு சிறுகதைத் தொகுப்பாக "எண்ணங்கள் சோதிக்கப்படுகின்றன" விளங்குகிறது.

தமிழகத்திற்கு நிகராக இலங்கையிலும் இசுலாமியத் தமிழ்ச் சிறுகதைகள் தோன்றியுள்ளன. 1898ம் ஆண்டு "ஹைதர் ஷா சரித்திரம்" என்ற நூலைக் கொழும்பு ஐதுரூஸ் லெப் என்பவர் எழுதியுள்ளார். இச்சிறுகதைத் தொகுப்பு ஆறுகதைகளைக் கொண்டுள்ளது. 1930ம் ஆண்டுக்குப் பின்னரே ஈழத்துத் தமிழ்ச் சிறுகதை இலக்கியம் வளரத் தொடங்கியது.

பின்னர் 1951ல் "இரு உருவங்கள்" என்ற சிறுகதைத் தொகுதியை எம்.எம். ஷாகுல் ஹமீது வெளியிட்டுள்ளார். 1960ல் டி.எம்.பீர் முகம்மது எழுதிய "சிறுகதைகள் ஆறு" என்ற தொகுதியும், 1970ல் மருதூர் வாணன் எழுதிய "முதலிரவு" என்ற சிறுகதைத் தொகுதியும் வெளியிட்டுள்ளனர்.

1964ல் 14 எழுத்தாளர்கள் எழுதிய இசுலாமியத் தமிழ்ச் சிறுகதைகளைத் தொகுத்து "முஸ்லீம் கதை மலர்" என்ற தலைப்பில் யூ.எல். தாவூத் வெளியிட்டார். 1977ல் அ.ஸ. அப்துஸ் ஸமது "எனக்கு வயது பதின்மூன்று" என்ற சிறுகதைத் தொகுதியை வெளியிட்டு உள்ளார். இந்நூல் 11கதைகளைக் கொண்டது. இவர் நான்காவது, இசுலாமிய இலக்கிய மாநாடு நடைபெற்ற போது இலங்கையிலுள்ள 27 முஸ்லீம் எழுத்தாளர்களின் சிறுகதைகளைத் தொகுத்துப் "பிறைப்பூக்கள்" என்ற நூலாக வெளியிட்டார்.

1979ஆல் ஆண்டில் மருதூர் ஏ.மஜீத் என்பவர் "பன்னீர் வாசம் பரவுகிறது" என்ற சிறுகதைத் தொகுப்பையும் 1983ம் ஆண்டில் எஸ்.ஐ.நாகூர்கனி என்பவர் "தூரத்து பூபாளம்" என்ற சிறுகதைத் தொகுதியைம் வெளியிட்டுள்ளனர்.

### தற்கால இசுலாமியத் தமிழ்ச் சிறுகதைகள்

தற்கால இஸ்லாமியத் தமிழ்ச்சிறுகதைகளில் சிறந்து விளங்குபவர்களில் கருணாமணாளன், ஆரூர் ஜலால், தோப்பில் முகம்மது மீரான், கே.எம். முகம்மது ஆகியோர்கள் குறிப்பிடத்தக்கவர்கள்.

கருணாமணாளனின் ஏழு சிறுகதைகளைக் கொண்ட "கருணாமணாளன் கனிரசக் கதைகள்" என்ற தொகுப்பும், 22 கதைகளைக் கொண்ட "மௌனத்தின் நாவுகள்" என்ற இரண்டு தொகுதி மட்டும் நூல்வடிவில் வெளிவந்துள்ளன. இவர் ஐந்நூறுக்கும் மேற்பட்ட சிறுகதைகள் படைத்துள்ளார். அவைகளில் பல இதழ்களில் அதிகமாக வெளிவந்துள்ளன.

"முஸ்லீம் முரசு" என்ற இதழின் சிறப்பாசியராகப் பணியாற்றியவர் ஆரூர் ஜலால் ஆவார். இவர் 1977ம் ஆண்டில் 14 சிறுகதைகளைக் கொண்ட "மினாராக்கள் நிமிர்ந்து நிற்கின்றன" என்ற தொகுப்பை வெளியிட்டுள்ளார். இவர் தம் "நாலூரும்மா" ஓர் அருமையான சிறுகதைத் தொகுப்பாகும்.

தோப்பில் முகம்மது மீரான் எழுதிய கதைகளில் 'பிரசிடெண்ட் சுல்தான் பிள்ளை", "பொன்னரைஞான்" ஆகிய கதைகளும் கே.எம். முஹம்மதின் "பாறையும் கரைந்தது" "நம்பிக்கை" போன்ற கதைகளும் சிறந்து விளங்குகின்றன. மேலும் "அன்புக்கு முதுமை இல்லை" என்ற சிறுகதைத் தொகுப்பைத் தோப்பில் முஹம்மது மீரான் வெளியிட்டுள்ளார். பேராசிரியர் மு. சாயபு மரைக்காயர் "பருவம்" "இளைய பாரதக்கதைகள்" "மணமகள் யாரோ" என்ற மூன்று சிறுகதைத் தொகுதிகளை வெளியிட்டுள்ளார்.

எம்.கோ.மவுலானா "கல்லறை விழா" என்ற கதைத் தொகுப்பை வெளியிட்டுள்ளார். இந்நூல் 5 சிறுகதைகளைக் கொண்டுள்ளது.

முதுபெரும் எழுத்தாளர்களாகிய ஓ.கே.ரிபாயி அவர்களின் "இஸ்லாமியச் சிறுகதைகள்" என்ற தொகுப்பும், கே.பி. செய்குதம்பி எழுதிய "பூப்பந்தல்" என்ற தொகுப்பும் நூல்வடிவில் வெளிவந்துள்ளன.

டி.கே.எம். காதர் "கண்கள்", "கண்ணீர் நெருப்பு" என்னும் இரண்டு தொகுப்புக்களை வெளியிட்டுள்ளார். ஈழத்து எழுத்தாளரான திக்குவல்லை கமால் எழுதிய 'கோடையும் வரம்புகளை உடைக்கும்", ஜியாவுடீன் படைத்துள்ள "பெருநாள் பிறை", ஹனிப் எழுதிய "இனிய உதயம்", "வாணியம்பாடி முகம்மது சரீபு வழங்கியுள்ள "ஒரு மேய்ப்பனின் கதை",

அடியற்கை ஹமீதா மைந்தனின் "பரிகாரம்" ஆகிய நூல்கள் தற்காலத்தில் வந்த இசுலாமியத் தமிழ்ச்சிறுகதைகள் ஆகும்.

"விருந்து", "ருசி", "நாற்று" என்ற மூன்று சிறுகதைத் தொகுதிகளையும் டாக்டர் ஹிமானா சையத் வெளியிட்டுள்ளார். தமிழ் மல்லாரி பதிப்பகத்தின் மூலம் சிறுகதைப் போட்டி நடத்தி, பத்து இளம் எழுத்தாளர்களின் கதைகளைத் தொகுத்து "விடியலை நோக்கி" என்ற நூலை வெளியிட்டுள்ளார்.

அப்துல் மாலிக் எழுதியுள்ள "திரை வலகிய போது" என்ற சிறுகதைத் தொகுப்பையும், முற்போக்குச் சிந்தனை நிறைந்த கதைத் தொகுப்பு ஒன்றையும் களந்தை பீர் முகம்மது வெளியிட்டுள்ளார்.

பேராசிரியர் ஹ.மு. நத்தர்சா "சின்னறு சின்ன ஆசை", "உறவுப்பறவைகள்" என்ற இரண்டு கதைத் தொகுதிகளை வெளியிட்டுள்ளார். பெண் எழுத்தாளர்களுள் கே.ஜெய்புன்னிசா ஏறத்தாழ ஐந்நூறு கதைகளைத் தொகுத்து "மல்லிகை மொட்டுகள்" என்ற நூலாக வெளியிட்டுள்ளார்.

இவர்களேயன்றி மெஹர் சிராஜீல் ஹஸன், மு.இ. அகமது மரைக்காயர், டாக்டர் கே.மு. முகம்மதலி, மேலப்பாளையம் ரசூல்கான், திட்டச்சேரி அன்வர், திருநள்ளாறு இ.ஜே.தின் போன்ற ஏராளமான முஸ்லீம் எழுத்தாளர்கள் இசுலாமியச் சிறுகதைகளைப் படைத்து வருகின்றனர்.

"முஸ்லிம் முரசு", "பிறை", "மணிவிளக்கு", "சமரசம்", "மதிநா" "நர்கிஸ்", "இஸ்மி" போன்ற இசுலாமிய இதழ்கள் இசுலாமியத் தமிழ்ச் சிறுகதைகளைத் தொடர்ந்து வெளியிட்டு ஊக்கமூட்டி வருகின்றன.

## குறிப்புகள்

1. மு. அருணாசலம், "தமிழ் இலக்கிய வரலாற்றிற்கு ஓர் அறிமுகம்", ப.127.
2. உவைஸ், 'இஸ்லாமியத் தமிழ் இலக்கியவரலாறு', தொகுதி-3, ப.200.
3. அப்துல் ரகுமான் "குணங்குடியார் பாடற்கோவை", ப.72.

4. ச.வே.சு., "தொல்காப்பியத் தெளிவுரை", நூற்பா எண்.14 ப.195.
5. பாரதியார் கவிதைகள், பாடல் 61.
6. சா. நசீமா, "இஸ்லாமியச் சிற்றிலக்கியம்" (ஆய்வுக்கட்டுரை), ப. 72.
7. ந.வீ. செயராமன், "சிற்றிலக்கியச் செல்வம்", ப. 80.
8. முகைதீன் முனாஜத்துப் பாடல், ப.90.
9. இபுன் ஹஸன், "முகலாயப் பேரரசின் மைய அமைப்பு", ப.369.
10. இபுன் ஹஸன், "முகலாயப் பேரரசின் மைய அமைப்பு", ப.369.
11. மேலது.
12. மேலது.
13. மேலது, ப.210.
14. மேலது, ப.387.
15. மேலது, ப. 372.
16. மேலது, ப.389.
17. மேலது, ப.29.
18. மேலது, ப.577.
19. மேலது, ப. 735.
20. மேலது, ப.666.
21. ஜெகாதா, இதயம் தொட்ட இஸ்லாம், ப.22.

# 3. கதைப்பாடல், கதையமைவு, கதையாடல் முறைமைகளில் இசுலாமிய இலக்கியங்கள்

உலகிலுள்ள அனைத்து மொழிகளிலும் எழுத்து இலக்கியம் தோன்றுவதற்கு முன்னரே நாட்டுப்புற இலக்கியங்கள் தோன்றி வளர்ந்துள்ளன என்பது அனைவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒன்று. அவ்வாறான நாட்டுப்புற இலக்கிய வகைகளுள் ஒன்றான கதைப்பாடலின் தோற்றம் குறித்து அறிஞர்பலர் பல்வேறு கருத்துக்களை உணர்ந்துள்ளனர்.

மனிதன் தான் கண்டவற்றை இசை நயத்துடன் எடுத்துச் சொல்லும்போது கதைப்பாடல் தோற்றம் கொண்டிருக்கலாம்.

> கதை கேட்கும் இயல்பு எல்லோருக்கும் அமைந்த ஒன்று. மனிதனின் வாழ்க்கை தொடர்பான கதைகள் மக்களால் ஆர்வத்துடன் வரவேற்கப்படுகின்றன. எதிர்பார்ப்புணர்வும் (Expectations) வீரவுணர்வும் (Adventure) மிக்க கதைகளுக்குச் சமுதாயத்தில் செல்வாக்கு இருந்தது. கதையுடன் இசையையும் கலந்து சுவைப்பதை மக்கள் மிகவும் விரும்பினர். இத்தகைய விருப்பத்தின் காரணமாக நிரம்பக் கதைப்பாடல்கள் ஆசிரியரால் படைக்கப் பெற்றன"[1]

எனக் கதைப்பாடல் தோன்றுவதற்கான காரணங்கள் சுட்டிக் காட்டப் பெறுகின்றன.

> ஒவ்வொரு மொழியிலும் எழுத்து தோன்றுவதற்கு முன்பு பாடல்களும் கதைகளும் தோன்றத் தொடங்கின. அவற்றில் சில கதை வடிவில் பாடப்பட்டன. இவ்வாறு தான் கிரேக்கக் காவியங்கள் தோன்றின[2]

என ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர்.

பண்டைக் காலத்தில் பாணர், கூத்தர், விறலியர் போன்றோர் இசைக்கருவிகளை மீட்டியும், பாடல்களைப்

பாடியும் ஆட்டங்கள் ஆடியும் அரசனை மகிழ்வித்துப் பரிசுப் பொருள்கள் பல பெற்றுச் சென்றதாகச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. பாணர் அரசவைகளிலும் பாசறைகளிலும் உள்நாட்டு நிகழ்ச்சிகளைப் பாடல் வடிவில் பாடத் தொடங்கிய போது கதைப்பாடல்கள் தோன்றின எனக் கொள்ளலாம்."

கதைப்பாடலின் தோற்றம் குறித்து ஆராயும் போது புகழேந்தியின் காலத்தைக் கருத்தில் கொண்டு தற்காலத்தில் நமக்குக் கையில் கிடைத்துள்ள கதைப்பாடல்கள் கி.பி. 14ஆம் நூற்றாண்டுக்குப் பிறகுதான் தோன்றியிருக்க வேண்டும் என்று மு. அருணாசலம் கருதுகிறார்.

> மக்களின் முக்கியமான பொழுதுபோக்குச் சாதனமாகக் கதைப்பாடல்களைக் கருதலாம். சுமார் 16ஆம் நூற்றாண்டில் இவை தமிழ்நாட்டில் மிகப்பெரும் வழக்காக இருந்திருக்க வேண்டும். ஆனால் கதைப்பாடலின் தோற்றம் இதற்கு இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்தே இருக்கலாம். நாடறிந்த நல்ல கதைப்பாடலான 'அல்லி அரசாணி மாலை' இப்பொழுது கிடைக்கப்பெறும் கதைகளில் முதலாவதாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது. இதைத் தொடர்ந்து பவளக்கொடிமாலை, புலந்திரன் களவு மாலை, அபி மன்னன் சுந்தரிமாலை, புலந்திரன் தூது, ஏணியேற்றம், பொன்னுருவி மசக்கை முதலிய பல கதைகள் தோன்றியுள்ளன. இவற்றின் காலம் கி.பி. 1575 முதல் கி.பி. 1625 வரை இருக்கலாம்[4]

என்று மு. அருணாசலம் கருதுகிறார். இசுலாமியக் கதைப்பாடல்களான மாலை, அந்தாதி, கிஸ்ஸா, முனாஜத்து, படைப்போர் போன்றவை கதைப்பாடல் மரபினை அடிப்படையாகக் கொண்டு வருபவைகளாகும்.

### கதைப்பாடல் - விளக்கம்

உலகமொழிகளில் கதைப்பாடலுக்கான பெயர்கள் பலவாக வழங்கி வந்துள்ளன. கதைப்பாடல் என்ற தமிழ்ச் சொல்லுக்கு நிகராக ஆங்கிலத்தில் Ballad எனவும், Ballade எனப் பிரெஞ்சிலும், Ballata என இத்தாலியிலும், romance என

ஸ்பெயினிலும், vice என டென்மார்க்கிலும், duma என உக்ரேனிலும் bi line என ரஷ்யாவிலும், Volkslised என ஜெர்மனியிலும், Folkevise என டேனிஸிலும் சொற்கள் வழங்கப்பட்டு வந்துள்ளன[5].

கதையினைப் பாடல் வடிவில் கூறுவது கதைப்பாடல் ஆகும். இது நாட்டுப்புற இலக்கிய வகைகளுள் ஒன்று. நாட்டுப்புற மக்களில் கற்பனை வளம் கொண்ட சிலர், தங்கள் வாழ்வில் கண்டவற்றையும் பிறர்வழிக் கேட்டவற்றையும் பாட்டுருவில் சுவைபட வெளிப்படுத்தினர். அதுவே கதைப்பாடல் என்ற புதுவடிவம் கொண்ட நாட்டுப்புற இலக்கியமானது.

கதையும் பாடலையும் அடிப்படைக் கூறுகளாகக் கொண்டமைகின்ற ஒரு வடிவத்தை ஏ.என். பெருமாள் அவர்கள் விவரிக்கின்ற போது "ஒரு பழங்கதையைச் சொல்லுகின்ற சாதாரணப் பாடலே அல்லது செய்யுளே கதைப்பாடல் என்பர்" என்று கூறுகின்றார்.[6]

"மக்களின் மனதைக் கவர்ந்துவிட்ட ஒரு நிகழ்ச்சி பேச்சு மொழியில் அதிக அலங்காரமின்றி எடுத்துரைக்கப் பெறும் போது அது கதைப்பாடல் என்ற பெயர் பெறுகிறது".[7]

கதைப்பாடலை ஆங்கிலத்தில் பாலட் என்பர். இச்சொல் "பாலே" என்ற இலத்தீன் மொழியிலிருந்து பிறந்தது. கதைப்பாடல் தெலுங்கில் "கிராமகீதம்" அல்லது பதம் என்றும், வங்க மொழியில் 'கீதகீதா' என்றும், தமிழில் 'அம்மானை' என்றும் அழைக்கப்படுகிறது.

இது நாட்டுப்புற மக்களின் வரலாற்றையும் பண்பாட்டையும் அறிய உதவும் செய்திக் களஞ்சியம் ஆகும். சண்முக சுந்தரம் "கதைப்பாடல் நாட்டுப்புற இலக்கியத்துள் காப்பியம்" என்கிறார்.[8]

கதைப்பாடலுக்கு விளக்கம் கூறுகின்றபோது,

> "இது நாடோடி இலக்கியப் பரம்பரையைச் சேர்ந்த கவிதை வகை. எளிய கதையைப் பொருளாகக் கொண்ட இது தலைமுறை தலைமுறையாகப் பாமர மக்களால் பாடப்பெற்று வழங்கிவரும். அன்றாட வாழ்க்கையில்

நிகழும் சாதாரணச் சம்பவங்களை அடிப்படையாகக் கொண்டு எளிய நடையில் அமைந்திருக்கும். இதன் பாத்திரங்கள் சாதாரண மக்களாகவே இருப்பர்"

என்று தி.சு. அவினாசிலிங்கம் குறிப்பிடுகின்றார்.

ஆரம்பத்தில் குழுவாக இணைந்து ஆடும் நடனப்பாடலைக் குறிக்கவே 'Ballad' என்ற சொல்லை இடைக்காலத்து உரோமானியர் வழங்கியதாகக் கூறப்படுகின்றது.

பதினைந்தாம் நூற்றாண்டுக்குப் பிறகே இந்தச் சொல் மக்களின் சாதாரணப் பாடலின் ஒரு வகையைக் குறிப்பதாக அமைந்தது. இதற்கு முன்னர் இது ஆங்கிலத்தின் குழுப் பாடலையும், பிரெஞ்சு மொழியின் தொடக்க நிலைப் பாடலையும் குறித்தது. 18ஆம் நூற்றாண்டுக்குப் பிறகே இச்சொல் கதைப்பாடல் என்ற ஒன்றை மட்டும் தெளிவாகக் குறிப்பதாக வளர்ந்தது.

இசைத் துறையில் இச்சொல் கற்பனை வயப்பட்ட அவல உணர்ச்சியை வெளிப்படுத்தும் பாடலைக் குறித்து அமைந்தது. இவ்வாறாக 'Ballad' என்ற கதைப்பாடலை உணர்த்தும் சொல் முதன் முதலில் நடனக்குழுப் பாடலைக் குறித்தது. பிறகு கதையை அடிப்படையாகக் கொண்ட கற்பனை வயப்பட்ட காதல், வீரம் போன்ற உணர்ச்சியை வெளிப்படுத்தும் பாடலைக் குறித்து நின்றது. இக்காலத்தில் 'Ballad' என்ற இச்சொல் எளிய, காதல்-வீர உணர்ச்சி மிக்க பாடல்களைக் குறிக்கின்றது.

## கதைப்பாடல்கள் அறிமுகம்

நாடகவுத்தியுடன் ஒரு கதையையோ, பலகதைகளையோ உள்ளடக்கிய தொடர்நிலைச் செய்யுள் கதைப்பாடல். இது வழிவழியாக மக்களால் சொல்லப்பட்ட புராணம், வரலாறு, சமுதாயம் ஆகியவற்றை உள்ளடக்கிய இலக்கியக்கூறாகும். இலக்கணம் கற்றறிந்த புலவர்களால் உருவாக்கப்படும் செம்மாந்த இலக்கிய நடையிலிருந்து முற்றிலும் மாற்றம் பெற்று, எழுதப்படிக்கத் தெரிந்த அனைத்து மக்களுக்கும் புரியும் வகையான இலக்கிய நடையில் அமைந்தது. இக்கதைப்பாடல் இரண்டு வடிவமாக உள்ளது: (1) நிகழ்த்துகலை வடிவம் (2) இலக்கிய வடிவம்.

நாயக்கர் காலத்தில் மலர்ந்து ஐரோப்பியர் காலத்தில் நன்கு பரவியுள்ள இக்கதைப் பாடல்கள் இதிகாசப் பாத்திரங்களையும் தம் கற்பனைக்கு ஏற்ப வார்த்துள்ளன. அதிலும் குறிப்பாக, பாரதக்கதைகள் கதைப்பாடல்களாக முகிழ்க்கும் போது பாத்திரங்களின் பண்பும், நிகழ்ச்சிகளும் விளக்கம் பெறுகின்றன. பாரத மாந்தர்களோடு புதுப்பாத்திரம் இணைந்த கதைப்பாடல்கள், பாரத நிகழ்ச்சிகளைக் கொண்டு புனைந்த புதுக்கதைப் போக்குகளாலமைந்த கதைப்பாடல்கள் என ஏராளமான வடிவங்களில் வெளிப்பட்டுள்ளன. தொடக்கக் காலத்தில் நிகழ்த்துகலையாக இருந்த இந்தக் கதைப்பாடல் மரபு பிற்காலத்தில் எழுத்துருவம் பெற்றுள்ளது.

### கதைப்பாடலின் வகைகள்

கதையில் பொருளினை அடிப்படையாகக் கொண்டு கதைப்பாடலைப் பலவகையாக அறிஞர்கள் பிரிக்கின்றனர். "பெலிக்ஸ் ஜே. ஓய்னாஸ் (Felix J. Oinas) மந்திரக் கதைப் பாடல் (Shamaristic), வீரர் கதைப்பாடல் (Heroic), காதல் கதைப்பாடல் (Romantic), வரலாற்றுக் கதைப்பாடல் (Historic) என நால்வகையாகக் கதைப்பாடலைப் பகுத்துக் கொள்கிறார். சோமலெ அவர்கள் சமூகக் கதைப்பாடல், காவியக் கதைப்பாடல், வரலாற்றுக் கதைப்பாடல் என்று மூவகைப் படுத்துகிறார்.

ஏ.என். பெருமாள் புராணக் கதைகள், வீர உணர்வுக் கதைகள், வரலாற்றுக் கதைகள், சமூக உணர்வுக் கதைகள், அறவுணர்வுக் கதைகள் என்று பகுத்துக் கூறுகிறார்.

### கதைப்பாடலின் பெயரமைப்பு

கதைப்பாடல்கள் பல்வேறு பெயர்களைக் கொண்டு முடிகின்றன. கதைப்பாடலின் பெயர்கள் கதையின் பாடுபொருளை அடிப்படையாகக் கொண்டும், சில நேரங்களில் கதையின் தலைமை மாந்தர்களின் பெயர்களைத் தாங்கியும் இடம்பெறுகின்றன. கதைப்பாடல்கள் பெயர்களுக்கு ஏற்றவாறு சற்று மாறுபட்ட அமைப்பை உடையனவாகவும், எடுத்துரைக்கும் முறையில் வேறுபட்டும் காணப்படுகின்றன.

கதைப்பாடல்கள் பல பெயர்களில் வழங்கி வந்தாலும் அம்மானை என்ற கதையம்சம் அக்கதைப்பாடல்களில் அமைந்துள்ளது எனக் கூறுகின்றனர். அம்மானை கதை தழுவிய காரணத்தால் "கதை" (நல்ல தங்காள் கதை) என்றும் பாட்டு வடிவில் இருப்பதால் "பாட்டு" (காமன் பாட்டு) என்றும் கதையானது பாட்டு வடிவில் இருப்பதால் "கதைப்பாடல்" (வீரபாண்டிய கட்டபொம்மு கதைப்பாடல்) என்றும் தொகுத்துச் சொல்லப்படுவதால் "மாலை" (பவளக்கொடி மாலை) என்றும் சொல்லப்படுவது என்ற பொருளில் "வாக்கியம்" (கபோத வாக்கியம்) என்றும் கதையை இசை கலந்து பாடுவதால் "கீர்த்தனை" (கபில சரித்திர கீர்த்தனை) என்றும், கதையின் மையப்பொருளை அடிப்படையாகக் கொண்டு "சண்டை" (கன்சாகிபு சண்டை) என்றும் யாகத்தை அடிப்படையாகக் கொண்டதால் 'யாகம்' (அசுவமேத யாகம்) என்றும் தூது சொல்வதைக் கதையாய்க் கொண்டதால் 'தூது" (புலந்திரன் தூது) என்றும் கதைப்பாடல்களின் பெயர்கள் அமைவதாக சு. சண்முக சுந்தரம் குறிப்பிடுகிறார்.

கதைப்பாடலின் பெயர்கள் பலவிதமாக முடிவு பெறுவதைக் காணலாம்.

| | | |
|---|---|---|
| 1. கதை | - | ஐவர் ராசாக்கள் கதை, வெள்ளைக்கார சாமி கதை. |
| 2. கதைப்பாடல் | - | கட்டபொம்மன் கதைப்பாடல், காத்தவராய சாமி கதைப்பாடல். |
| 3. அம்மானை | - | இராமப்பய்யன் அம்மானை, கள்ளழகர் அம்மானை. |
| 4. மாலை | - | அல்லியரசாணி மாலை, பவளக் கொடிமாலை. |
| 5. சிந்து | - | பூலுத்தேவன் சிந்து |
| 6. தூது | - | புலந்திரன் தூது, கிருஷ்ணன் தூது. |
| 7. போர் | - | இரவிக்குட்டிப்பிள்ளை போர் |

| | | |
|---|---|---|
| 8. படைப்போர் | - | செய்தத்துப் படைப்போர், நபுசு படைப்போர் |
| 9. சண்டை | - | கர்ணமகராஜன் சண்டை |
| 10. குறம் | - | துரோபதை குறம், மின்னொளியாள் குறம். |

இத்தகைய பொது முடிவுகளைப் பெறாத சிறப்புப் பெயர்களைப் பெற்றுவரும் கதைப்பாடல்களும் உண்டு. இவை பெரும்பாலும் கதைப் பொருளை அடிப்படையாகக் கொண்டு அமைகின்றன. எடுத்துக்காட்டாகப் பஞ்சபாண்டவர் வனவாசம், பொன்னுருவி மசக்கை, ஏணியேற்றம் போன்ற கதைப்பாடல்களைக் கூறலாம்.

இதனைக் கொண்டு கதை, கதைப்பாடல், மாலை, வாக்கியம், கீர்த்தனை, சண்டை, யாகம், தூது, அம்மானை, சிந்து, போர், படைப்போர், குறம், கும்மி, வில்லுப்பாட்டு, கணியான் கூத்து அல்லது மகுடாட்டம், இலாவணி என்ற பல பெயர்களில் கதைப்பாடல்கள் வழங்கி வருவதைக் காணலாம். (அம்மானைப்பாட்டு, கப்பல், காவியம், ஒப்பாரி, சோபனம், மான்மியம், மசக்கை, தாலாட்டு, வெற்றி, ஏற்றம் என்ற பெயர்களிலும் கதைப்பாடல்கள் இருக்கின்றன).

### கதைப்பாடலின் பாடுபொருள்கள்

ஒவ்வொரு கதைப்பாடலும் ஒரு கருத்தை அல்லது சிக்கலை மையமாகக் கொண்டு படைக்கப்படுகிறது.

> "கதையில் வரும் சிக்கல்கள் பலவிதமாக இருக்கும். சமயம், சமூகம், பொருளாதாரம், உளவியல், ஏற்றத்தாழ்வு, நம்பிக்கை, பண்பாடு என ஏதாவது ஒரு நிலையில் சிக்கல் தோன்றலாம். அது சிறியதாகவோ பெரியதாகவோ இருக்கலாம். ஆனால் சிக்கல் இல்லாமல் கதைப்பாடலைச் சுவைக்க முடியாது. யாரும் சுவையில்லாதவற்றைப் படைப்பதில்லை. கதைப்பாடலில் மிகுதியாகக் காணப்படும் சிக்கல் காதலை அடிப்படையாகக் கொண்டே வருகிறது"[12]

என அ.நா. பெருமாள் கூறுகின்றபோது 1. வியப்புறு நிகழ்ச்சிகள் 2. அதிர்ச்சியுறும் செயல்கள் 3. இரக்கத்தை ஊட்டும் அவலங்கள் போன்றன கதைப்படலின் பாடுபொருளாக அமையும் என்கிறார். (ப.4)

1. துன்பத்தில் முடியும் காதல் 2. இன்பத்தில் முடியும் காதல் 3. குடும்பச் சிக்கல்கள் 4. தூய்மையான அதி அற்புதம் 5. மதக்கருப் பொருள்கள் 6. தீரச் செயல்கள் 7. வீரம் 8. இழிவான மோசடி போன்றவையே கதைப்பாடல்களுள் ஊடாடிக் கிடப்பதாக மு. அருணாசலம் கூறுகின்றார்.

> வரலாற்றுப் பாத்திரங்களின் வீரதீரச் சாகசச் செயல்கள், ஒரு வரலாற்று நிகழ்ச்சி, ஒருரில் நிகழ்ந்த காதல் கதை, அரசனோ பெரும் செல்வந்தனோ பெண் கேட்டுக் கொடுக்க மறுத்ததால் விளைந்த போர், பிறர்மனை நயத்தலால் விளைந்த கொலை, உயர்ந்த சாதிக்காரன் தாழ்த்தப்பட்ட பெண்ணை (அ) நிலவுடைமை வர்க்கப் பெண்ணை உழைப்பாளி வர்க்க ஆடவன் சிறையெடுத்த தகராறு, உடைமை வர்க்கத்தினருக்கிடையே சொத்துடைமைத் தகராறால் நிகழ்ந்த கொலைக்குப் பழிக்குப்பழி, முற்பிறவியியல் தன்னைக் கொன்றவனை அடுத்த பிறவியில் பழிவாங்கும் தெய்வம், தெய்வங்களுக்கும், பூதங்களுக்கும் இடையே நிகழ்ந்த போர் போன்றவற்றைப் பாடுபொருள்களாகக் கொண்டு கதைப்பாடல்கள் அமைகின்றன

என்று தே. லூர்து குறிப்பிடுகின்றார்.

கதைப்பாடலைச் சமூகவியல் நோக்கில் ஆராய்ந்த கோ. கேசவனின் வகைப்படுத்தலில். 1.ஆண் பெண் உறவு 2. சாதிக்குள்ளே மண உறவு 3. பிறவியில் குல வேறுபாடு 4. ஆண் சொத்துரிமை 5. பிறவியில் தொழில் நிர்ணயம் 6. சகுனங்கள், மரபுவழி நம்பிக்கைகள் முதலியனவற்றைக் கதைப்பாடலின் பாடுபொருள்களாக எடுத்தாளுகிறார்.

### கதைப்பாடலின் தன்மைகள்

நாட்டுப்புறப் பாடல்களின் தன்மைகளைக் கொண்ட கதைப்பாடல்கள் அவற்றிற்கு இல்லாத சில சிறப்பியல்புகளையும் தன்னகத்தே கொண்டு விளங்குகின்றன

நாட்டுப்புற மக்களின் பேச்சுமொழி, பண்பாடு, நாகரிகம் ஆகியவற்றைப் கதைப்பாடல்கள் உள்ளடக்கி உள்ளன. கதையினை உயிர்நாடியாகக் கொண்ட இக்கதைப்பாடல்கள் பெரும்பாலும் இசைக்கருவிகளின் துணையோடு பாடப்படுகின்றன. மேலும் இக்கதைப்பாடல்கள் நாடகப் போக்கில் அமைந்துள்ளன.

கதைப்பாடல்கள் வாய்மொழியாகப் பல தலைமுறைகளால் வழங்கப் பெறுவதனால் சில காலத்திற்குள் பல புராண, இதிகாச, சமூக நிகழ்ச்சிகளை உட்கொண்டு ஒரு காப்பியமாக உருவாகிவிடுகின்றன. மேலும் கதைப்பாடல்களில் ஒரு பொதுவான தன்மையினைக் காணமுடிகிறது. கதைப்பாடல்களில் தலைமைப் பாத்திரத்தின் பிறப்பு, அசரீரி, அசாத்தியச் செயல், வீர தீரச்செயல், மீவியல் பண்புகள் போன்றவற்றினைக் கூறலாம்.

## கதைப்பாடலின் உறுப்புக்கள்

கதைப்பாடல் காப்பியம் போல் சில அமைப்புகளைக் கொண்டமைகிறது. மரபுவழிப் பின்னணியால் இவை அமைந்திருக்கலாம். இதன் பொதுவான கூறுகள்:

1. காப்பு - கவிஞர்கள் தம் கவிதைப்பணி சிறக்கத் தங்கள் வழிபடு கடவுளரைத் துணை நின்று அருள்புரிய வேண்டிப் பாடுவது.
2. இறைவணக்கம் - தங்கள் வழிபடு கடவுளரை முதலில் வணங்கிய பின் கவிஞர் தம் சுற்றுப்புறத்தின் கடவுளை அருள் வேண்டிப்பாடுதல்
3. அவையடக்கம் - தமது படைப்பில் ஏதாவது குற்றங்கள் இருந்தால் பொறுத்தருள வேண்டுமென்று பாடி அரங்கேற்றுதல்.
4. நுதலிப் புகுதல் - கவிஞன் இன்ன பொருளைப் பற்றி எடுத்தோதப் போகிறான் என்பதைக் கதைத் தொடக்கத்தில் ஓரிரு வரியில் சுருக்கமாக, தெளிவாக உரைக்கப் பெறுவது.

5. கதையோட்டம் - கதைத்தலைவன் பிறப்பு, வளர்ப்பு, அவன் எதிர்நோக்கி இருக்கும் சிக்கல், அச்சிக்கலுக்கான தீர்வுகள், முடிவுகள் என வரிசையாக அமைந்திருத்தல்.

6. வாழி பாடுதல் - நாடு, நகரத்தை வாழ்த்திப் பின்பு அதைக் கேட்டவர் எந்த விதக் குறையுமின்றி அனைத்து நலன்களும் பெற்று இனிது வாழ்வர் என்று கூறி அமைதல்.

இவை மட்டுமல்லாமல் கதைப்பாடலின் பொதுச் சிறப்புகளாக அதன் குறிப்பிட்ட அடிவரையறை இல்லாத தன்மை, மரபு வழிப்பட்ட மற்றும் நாட்டுப்புற யாப்புவகை, உவமை, உருவகம் முதலிய அணிநலன்களையும், எண்வகைச் சுவை, மூலக் கதையோடு நேரடித் தொடர்புடைய, தொடர்பற்ற துணைக்கதைகள், வீரதீரச் செயல்கள், ஒருவரோ, இருவரோ, குழுவோ இணைந்து இரவிலோ, பகலிலோ பாடுதல் என்பவற்றைக் குறிக்கலாம்.

## கதைப்பாடலின் பயன்கள்

கதைப்பாடல் படிக்கின்ற, கேட்கின்ற மக்களுக்கு பொழுதுபோக்குத் தன்மையுடன் நல்ல கருத்துக்களை உணர்த்தும் அறிவுப் பெட்டகமாகத் திகழ்கின்றது. ஒரு காலத்தின் வரலாறு, பண்பாடு, நாகரிகம் ஆகியவனவற்றை அறிந்து கொள்ளலாம். இதனால் மக்களுக்குப் பக்தி உணர்வு தூண்டப்படுகிறது. இதன்வழியாக ஊர்களின் பெயர்களையும், அதற்கான வழித்தடங்களையும் மிகத் துல்லியமாகக் கண்டறியலாம். மக்களின் நம்பிக்கைகளான கனவு, சகுனம், நரபலி, திருஷ்டி முதலியவற்றை அறியலாம். மேலும் இவை, ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தின் கூடி வாழும் பண்பையும், எண்ணங்களையும் எடுத்துரைக்கின்றன.

16-20ஆம் நூற்றாண்டு வரை தமிழகத்தில் இருந்த சமுதாய, சமய, வரலாற்று, கலை, பழக்க வழக்கப் பண்பாட்டு நிலைகளை அறிய உதவும் இலக்கிய, வரலாற்றுச் சான்றுகளாகக் கதைப்பாடல்கள் அமைந்துவருகின்றன.

காப்பியம் முதலாகப் புராணம் மற்றும் சிற்றிலக்கிய வடிவங்களாக வெளிப்பட்டுள்ள கோவை, அந்தாதி, ஆற்றுப்படை, ஏசல், கலம்பகம், குறம், பள்ளு, சிந்து போன்றவைகளும் , கிஸ்ஸா, மசலா, முனாஜத்து, நாமா, படைப்போர் போன்ற இலக்கிய வடிவங்களும் 'இசுலாத்தை' மையமாகக் கொண்ட கதைப்பாடல்களைப் போன்றே வெளிப்பட்டுள்ளன. வெவ்வேறு வகையிலான கதை சொல்லும் வழிமுறைகள் இவற்றினுள் அமைந்திருக்கின்றன. மற்றும் செய்யுள் வடிவிலான அமைப்பிற்குள் நின்று கொண்டு திறம்படக் கதையினை விளக்கி வரும் முறைமையினில் வெற்றி பெற்றவைகளாக இவ்விலக்கியங்களின் கதை சொல்லும் கட்டமைப்புகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. கதைப் பாடல்களின் தன்மையினைப் பெற்று ஏறக்குறைய 700-க்கும் மேற்பட்ட எண்ணிக்கையில் இசுலாமியத் தமிழ் இலக்கியங்கள் இயற்றப்பட்டுள்ளன. கதைப்பாடல் கட்டமைப்பினுள் இவை வெளிப்படுத்தியுள்ள கதையாடல் தன்மைகள் வேறுபட்டவைகளாகவே உள்ளன.

மிகச்சிறந்த வகையில் கதையாடலை உள்ளடக்கிய வடிவங்களாகக் காப்பியம், புராணம், படைப்போர் போன்ற இலக்கியங்கள் இசுலாம் சார்ந்து வெளிப்பட்டுள்ளன. இறுக்கமாகக் கட்டமைக்கப்பட்ட கதையமைப்பில் எளிமையாக ஒன்றோடு ஒன்றை இணைத்து நிற்கக் கூடியனவாக இவை உள்ளன. இலக்கியக் கட்டமைப்பின் அழுத்தமென்பது எண்ணற்ற உட்கூறுகளான, கதைத்தளம், கதையின் கிளைத் தளங்கள், அதிசயிக்கத்தக்க நிகழ்வுகள், மனித சக்தியின் உன்னதத் தன்மைகள், போர்க்களங்கள், சமூகத்தில் அவன் பெற்றிருக்கின்ற மேம்பாட்டு நிலைப்பாடுகள் போன்ற அனைத்திலிருந்தும் வெளிப்படுகின்றது. அவற்றவற்றுக்குரிய அழகினாலும், ஒன்று மற்றொன்றினோடு முட்டி மோதிக் கொள்வதினாலும், மற்ற ஒன்றினை ஊடுருவிச் செல்வதினாலும், ஒன்று மற்றொன்றினோடு இணைத்துக் கொண்டு செல்வதினாலும் முகத்தோடு முகம்நோக்கி நடந்தேறும் வாழ்க்கை நிகழ்வுகள் போல் கடந்து செல்கின்றன. ஆனால், கதைக் கட்டமைப்பென்பது எளிமையான முறையில் நகர்வதாகவும், இணைப்புடையவையாகவும் இருந்து கொண்டு வெளிப்படுகின்ற

நிகழ்வுகளின் வழி அர்த்தங்களையும் அது உள்ளடக்கிய சிறப்பம்சங்களையும் விளக்கி நிற்கக் கூடியதாகும்.

கிஸ்ஸா, மசாலா என்ற பல்வேறு வடிவங்களில் வெளிப்பட்டுள்ள இசுலாமிய இலக்கியங்களில் அடிப்படையாக உள்ளது கதைப்பாடலாகும். அதே நேரத்தில் வாழ்க்கைக் கூறுகளோடு இணைந்து நிற்பனவாகவும் உள்ளன. கதையாடல் வழி வெளிப்படும் கூறுகள் அல்லது நிகழ்வுகள் வாழ்க்கையின் காலக்கட்டத்திலிருந்து வெளிப்படுகின்றன. நமக்குச் சொந்தமான உலகின் அதாவது அது நம்முடைய வாழ்க்கையிலிருக்கின்ற காலத்தை எடுத்துக் கொண்டு அர்த்த வெளிப்பாடுகளுக்காக வெளிப்படுகின்ற போது அதற்கன காரணங்களைத் தேட வேண்டியவர்களாக நம்மை ஆக்குகின்றது. ஒரு காவியத்தில் கதை முடிவு பெறுவதில்லை. வாழ்க்கை நிகழ்வுகளைப்போல அதன் முடிவே அதன் தொடக்கமாக இருக்கின்றது. கதை நடந்து செல்லும் ஒழுகியல் நிலையே காவியக் கதையாடலை நேர்த்தியான புனைவியலுக்கு உள்ளாக்குகின்றது.

வாழ்க்கை என்பது கொடுக்கப்பட்டுள்ள கருத்தாக்கத்தின் (theme) மேலான கதையாடல் என்று சொன்னால் யாருடைய கதையை நடத்துவதற்காக யாரால் அனுப்பப்பட்டவர்கள் நாம்? நிகழ்வுகள் ஒன்றுக்கு மேல் ஒன்றாக நடந்து கொண்டு செல்கின்ற போது நம்மேல் நடக்கின்ற நிகழ்வுகளைக் கட்டுப்படுத்த இயலாதவர்களாக, அவற்றை ஒருங்கிணைத்துக் கொண்டு செல்ல இயலாதவர்களாக ஆகின்றோம். இந்நிலைதான் அர்த்தமற்ற வாழ்க்கை அல்லது யாருடைய பொறுப்பிற்கும் உட்படாத யாரிடமும் உதவி பெறமுடியாத வாழ்க்கை என்றாகின்றது. இந்நிலைதான் எங்கேயோ வாழ்வதாக, வாழ்ந்ததாகக் கருதப்படுகின்ற நிலையில் நம்முடைய விரல்களை உயர்த்தி உரத்துச் சுட்டமுடிகின்ற நிலைக்குக் கொண்டு செல்கின்றது.

இதனுள்தான் நடப்பியலை உணர்வனவும், நடப்பியலாக உணரப்படுவனவும் இருக்கின்றன. இவை இரவு பகலாக நம்மைக் கடந்து செல்கின்ற காலம் பொழிகின்ற நீராக நம்மேல் பொழிந்து சரியான அர்த்தங்களைப் பிடிகொடுக்காமல் அர்த்தங்களிலிருந்து தப்பித்துச் செல்பவையாக இருக்கின்றன. மேகத்தோடு மிக நெருக்கமானவர்களாக நம்மை நிறுத்தி ஆனால்

நமக்குச் சொந்தமற்றதெனக் கூறக் கூடியன. உலகத்தோடு சொல்லாடல்களை, விவாதங்களை மேற்கொண்டே அவை பதிவு செய்யப்படாதவைகளாகவும், வேறுபாடற்றவைகளாகவும் கூட நிறுத்தக் கூடிய புனைவியல் தன்மையை நடத்திச் செல்லக் கூடியனவாகக் கதையாடல் தன்மைகள் அமைந்துள்ளன.

உலகளாவிய இலக்கியங்களின் கதையாடல் தன்மைகளை ஒப்பிட்டு உற்று நோக்குகின்ற போது உலகம் தழுவிய நிலையில் கதை கூறும் இலக்கியத் தன்மை பெற்றுத் தேசம், மொழி போன்ற இழைகளால் ஊடுருவப்பட்டுக் கதைக் கட்டமைப்பைப் பெற்று விளங்குபவையாகவும் இருக்கின்றன. பைபிள், குரான், பகவத்கீதை போன்ற நூல்கள் இயல்பாகவே கதைக் கட்டமைப்பை உள்ளடக்கிய இலக்கியங்களாகக் கலாச்சாரப் பரிணமிப்பில் உயர்ந்திருக்கின்றன. இதனால் இந்திய வரலாறு, இலக்கியம், திரைப்படம் இந்தியக் கலைகள் அனைத்திலுள்ளும் இவற்றின் அம்சங்களை ஏதோ ஒரு வகையில் நேர் மறையாக அல்லது எதிர்மறையாகக் கையாளுவதன் வெளிப்பாடுகள் இருந்து வருகின்றன.

ஒவ்வொரு மதமும் கையாளுகின்ற புனிதநூல் என்பது அதன் அடிப்படைக் கதையாடலாக இருந்து கொண்டு பல்வேறு இலக்கிய வகைமைகளை வெளிப்படுத்திக் கொண்டு உள்ளது. இதனுள் நிலவி வரும் கதையாடலின், வரலற்றுவீரியம் (Historical power) தான் அதனை நிலை நிறுத்திக் கடந்தேறச் செய்வதாகும். அதுவே கதையாடல் தன்மையினைத் தக்க வைத்துக் கொள்வதாகவும் இருக்கின்றது. நிலைநிறுத்தப்பட்ட கதையாடல் வரலாற்றை ஒரு போதும் உருவாக்குவதில்லை.

ஒரு சமுதாயம் அல்லது குழு அடையாள விரிவாக்கம் பெறும் பொழுது உருவாகின்ற வரலாற்றில் கதையாடல் என்பது தனிச்சையாகத் தன் பங்கைச் செலுத்திக் கொள்கின்றது. இவற்றின் அடிப்படைக் கூறுகளாக அதன் கதையும், கதை சார்ந்த விவரணைகளும் இடம்பெறுகின்றன. ஒரு பிரதி வாய் வழி வந்த மொழியாக்கமாக ஒரு சமுதாயத்தின் கதையாடலாக விரிவாக்கம் பெறுவதற்கு அதன் அனைத்துக் கூறுகளும் துணை புரிவனவாகச் செயல்படுகின்றன. இதுவே குறிப்பிட்ட அச்சமுதாயத்தின் வரலாற்று விரிவாக்கத்திற்கும் ஆனதாக

அமைகின்றது. கதையாடல் என்பது பரவலான நிலையில் தன்னை, வெளிப்படுத்திக் கொள்வதாகும். ஒரு தேச உருவாக்கத்தில் வரலாற்று நிலையில் இக் கதையாடல்கள் தங்களை இணைத்துக் கொள்கின்றன. அதாவது காலக் கடந்தேறல்களில் நம்முடைய வரலாற்றின் ஒரு பகுதியாகப் பேசப்படக் கூடிய அளவில் அவை தங்களை வளர்த்தெடுத்துக் கொள்கின்றன. வரலாற்றில் இருந்து விலக்கி வைக்க முடியாதவைகளாகப் பெரிய இடத்தைக் கடந்த காலத்தின் வழியாகப் பெற்றுக்கொள்கின்றன. தேசம் என்பது ஒரு கதையாடல். இதனைப்போல் கதையாடல் என்பதும் கற்பனைரீதியாக ஒரு குழு அமைப்பினுள் தன் கட்டமைப்பைப் பதித்துக் கொண்டிருக்கின்றது. ஒருவரின் இருத்தலை மற்றொருவர் முழுவதுமாக உணர்ந்து கொள்ளமுடியாத கட்டமைப்பினுள் வளர்த்தெடுக்கப்படுகின்ற பிரதியை முன்னோடியாகக் கொண்டு 'நாம்' என்கின்ற தோரணையில் பலவகையான கதையாடல்கள் தொடர்ச்சியாகப் பின்னப்பட்டுக் கொண்டே வருகின்றன.

முன் முடிவுகளை உள்ளடக்கமாகக் கொண்டு கட்டமைக்கப்பட்ட கதையாடலின் கற்பனைச் சமூக மக்கள் ஒரு தொடர் புனைகதை வெளிக்குள் கொண்டுவரப்படுகின்றனர். இதுவே, இக்கட்டமைப்பே இவர்களின் யதார்த்தம் ஆகின்றது. குறிப்பிட்ட கதையாடலை ஏற்றுக் கொண்டு அதனைத் தங்களின் அடையாளங்களாகப் பதிவு செய்ய முனைபவர்கள் கதையாடல்களின் பிரதிநிதிகளாகவும் தங்களைப் பதிவு செய்து கொள்கின்றனர். ஒரு சமூகத்தின் காலம் மற்றும் வெளியைக் கடக்க ஏதுவாக இருந்து கொண்டு தொடர்ச்சியான, பின் விளைவுகளைத் தரக்கூடிய சான்றாதாரங்களாகவும் பிரதிநிதித்துவம் பெற்றுக் கொள்கின்றனர். பூக்கோவின் அணுகுமுறையில் அறிவு என்கின்ற சொல் பௌதிகம், இரசாயனம், சமூகவியல் போன்ற விஞ்ஞானத் துறைகளுக்கு மட்டுமின்றி, அழகியல், ஒழுக்கவியல், தத்துவம், சட்டவியல் போன்ற எல்லா வகைச் சிந்தனைகளுக்கும் பயன்படுத்தப்படுகின்றது. குறிப்பிட்ட ஒரு காலத்தில் உற்பத்தி செய்யப்படும் அறிவுகளை, அக்காலக்கட்டத்தில் பேசும்மொழிகள் (Parole) என்று கொள்ளலாம். இதன்படி

இசுலாமிய இலக்கியங்கள் அந்தக் காலக்கட்டத்தின் அறிவைப் பிரதி நிதித்துவம் செய்த பேசும் மொழிகள் என்பது புரியலாகும். அதனால் அவற்றின் உள்ளமைப்பை மட்டும் தனிமைப்படுத்தி அவற்றின் மொத்த அமைப்பைக் கண்டுபிடித்து விட முடியாது. இந்தியாவின் ஒட்டுமொத்தச் சிந்தனையிலும், கலாச்சாரத்திலும் இணைந்து பிணைந்து கிடக்கும் சமூக அமைப்பின் வழியாகத்தான் காண முற்படவேண்டும். அப்படிக் காணுகின்ற போது இசுலாமிய அறிவார்ந்த உற்பத்திக்கு ஒரு பொதுக்கூட்டம், அறிவமைப்பு அல்லது அறிவின் தோற்ற அமைப்பு இருப்பதைக் கண்டறிய முடியும். அது குர்ரான் அல்லது நபிகள் நாயகம் என்பதையும் உறுதியாகச் சொல்ல முடியும்.

குர்ரான் அல்லது நபிகள் நாயகம் என்பது இரண்டாவது ஆதாரம் தான். ஆனால் இதன் வழி இசுலாம் முன்வைக்கின்ற அறிவதிகாரம் அல்லது ஆளுமை என்பதுதான் வாழ்வின் அனைத்துக் கூறுகளினோடும் நேரடித் தொடர்புடையதாக இருக்கின்றது. இசுலாம், கிறித்துவம், இந்துசமயம் போன்ற அறிவதிகார இலக்குகளுக்குள் மொழி, இலக்கியம், சமூக ஒழுக்கங்கள், சமூக மதிப்புகள் என்று பரந்துபட்ட கலாச்சார வாழ்வில் ஆதிக்கம் செலுத்தும் நோக்குடனேயே அவை சார்ந்த அறிவுகள் உற்பத்தி செய்யப்படுகின்றன. அவற்றின் புறவயத்தன்மை என்பன இசுலாமியர்களின், திருமணம், மக்கா செல்லுதல், படைப்போர் வருணனை என்பனவையாகத் தோற்றமளிக்கும்.

கதை கூறுதல் என்பதன் பேரில் உள்ளவற்றை அடையாளம் கண்டு கொள்வதற்குக் கதை நிகழ்வுகளின் அமைவு முறைகளை அறிய வேண்டும். இவற்றைக் கதை வெளிப்பட்டுள்ள முறைமைகளிலிருந்து தான் அறியவேண்டும். இப்படி அறிய முற்படும் பொழுது ஒரே கதையை வெவ்வேறு அமைவுகளோடு, வெவ்வேறு நோக்குகளோடு, வெவ்வேறு மதிப்பீட்டு நிலைத் தீர்மானங்களோடு வெளிக் கொண்டுவர முடியும் என்பதனையும் உணரமுடியும். இவ்வாறே இசுலாமியத் தமிழ் இலக்கியங்களின் முனாஜத்து, நாமா, கிஸ்ஸா போன்ற இலக்கிய வகைகள் ஒரே கதைக் கருவைப் பல கோணங்களில் கூறியிருக்கின்றன. நவீன

புதினத்துவக் கதையாடல்களில் ஒரு புதினம் தனக்குரிய இருத்தலைத் தானே நிர்ணயித்துக் கொள்ள இயலாது. வாசகனின் அறிவார்த்த விசாரணைக்கு உட்பட்ட வாசிப்பின் கீழ் மட்டுமே அது அதன் இருத்தலை நிலை நிறுத்திக் கொள்ள முடியும். ஆனால், இசுலாமியத் தமிழ் இலக்கியங்கள் முன்கூட்டி முடிவு செய்யப்பட்ட கருத்தமைவுகளைப் பெற்றிருக்கின்ற காரணத்தினால் வாசகன் உள்ளதை உள்ளவாறு உணர்ந்து கொண்டால் போதும் என்ற மனநிலைக்குக் தள்ளப்படுபவனாக இருக்கின்றான். அதிக வேறுபாடுகளை உட்கொள்ளாத கதையாடல்கள் ஒரே மாதிரியான புனைவியல் நிலைகளின் விளக்கங்களாக இருப்பதால் ஒரு பிரதிக்குள் உள்ள கதையாடல் தன்மைகளின் வலு குறைந்து சொல்லாடல்களைத் தனக்குத்தானே வரையறைப்படுத்திக் கொள்கின்றனவாகவே இருக்கின்றன. ஆனால் பெருங் கதையாடல் என்ற நிலையில் இசுலாமிய இலக்கிய வகைகளின் காப்பியம், புராணம் போன்ற இலக்கிய வகைகள் தங்களைச் சரியாக வெளிப்படுத்தியுள்ளன.

இசுலாமிய இலக்கியச் சிந்தனைகள் ஒரு சுழற்சியினை, சுழல் பண்பினை அடியொற்றி அமைந்துள்ளன. கதை கூறும் முறையிலும் கதைசார் சிந்தனைகளை வளர்த்துச் செல்வதிலும், கருப்பொருள் தேர்விலும், அவற்றின் உள் அமைவு சுழல் தன்மை கொண்டனவாகவே இருக்கின்றன. இன்றைய ஆய்வு முறைகள், கலாச்சார அமைப்பாக்கம், அரசியல் சார்ந்த அமைப்பாக்கத்தோடு தொடர்புற்று இருப்பதை எடுத்துக் கூறுபவையாக இருக்கின்றன. இருபதாம் நூற்றாண்டின் வரலாறு, அரசியல் மற்றும் இவற்றோடு தொடர்பு கொண்டிருக்கும் தொழில் நுட்பம், பொருளாதாரம் போன்றவற்றால் உலகம் எப்படி ஒற்றை ஆதிக்கத்தையோ (Uni-polar) அல்லது இரட்டை ஆதிக்கத்தையோ எதிர்பார்த்து வாழ வேண்டிய இரங்கத்தக்க நிலையை எட்டியுள்ளது என்பதை இயல்பாக வெளிப்படுத்தி நிற்கின்றது. இந்த நிலையில் ஆதிக்கத்திற்கு வெளியில் கிளர்ந்தெழும் சிந்தனைகளும் உள்ளன. ஆதிக்கம் என்ற ஒன்று இருப்பில் இல்லை என்பதை முன்வைக்க ஆதிக்கத்தைச் சுற்றி வளைத்துச் செயல்பட்டு அதனை இல்லாமல் ஆக்க முயன்று போராடிக் கொண்டிருக்கும் மாற்றுச் சிந்தனைச் செயல்பாடுகளும் வெளிப்பட்டுக் கொண்டிருக்கின்றன

மேற்கத்திய, கிழக்கத்திய என்ற அணுகுமுறைகளினால் இவற்றினுள் நிலவி வரும் சுழல் வேறுபாட்டை அறியலாம். ஆனால் இலக்கியங்களை இதுவரை அணுகிவந்துள்ள முறைமைகள் பொதுவானவைகளாகவே இருந்திருக்கின்றன. மனித சிந்தனையின் அடிப்படைக் கட்டுமான உள் இணைவுகள் உபபாகங்கள் அவற்றிற்கிடையேயான தொடர்புறவுகள் பற்றித் தொகுத்துப் பார்க்கப்படவில்லை. அவ்வாறு பார்க்க முயலுகின்ற போது ஆதிக்க உறவுகள், இணை அமைப்புகள், ஒற்றைப் போக்கான மாற்றங்கள், உள்வேறுபாடுகள் மேல் தளத்தில் அழிக்கப்படுதல், பருண்மைகள், குணரூபங்கள் ஆக்கப்படுதல், இணைக் கோட்பாட்டு உருவ அமைப்புகள், கால வரையறைகள், ஊடு செல்லும் போக்குகள் போன்றவற்றின் அடிப்படையில் ஆயிரத்துக்கும் மேற்பட்ட இலக்கியங்கள் எவ்வாறு படைக்கப்படுகின்றன என்பதனை உணரமுடிகிறது. ஒரே மாதிரியான பிம்ப மதிப்பீட்டை நிலைநிறுத்த முயலுகின்ற போக்கில் இசுலாமியத் தமிழ் இலக்கியங்கள் கூறுகளின் ஏற்றத்தாழ்வுகளைச் சமாதான நிலையில் முன்வைக்கின்றவைகளாகச் செயல்படுகின்ற விதங்களையும் அறிய முடிகிறது.

தமிழில் தொல்காப்பியம் முதலான இலக்கண நூற்களனைத்தும் கவிதையியலை விளக்கி வந்துள்ளன. இடையில் சிறுசிறு கூறுகளின் வேறுபாடுகளை முன் வைப்பதல்லாமல் இந்த இலக்கண நூல்கள் கவிதையியல் சிந்தனைகளின் சுழற்சிப் பண்பைத் தொடர்ந்து உச்சரிப்பவையாகவே இருக்கின்றன. ஆனால் இன்றைய நவீன இலக்கியத்தின் வளர்ச்சிக்கும் சர்ச்சைக்கும் பயன்படும் விதத்தில் ஒரு நவீன இலக்கியத் திறனாய்வைத் தொல்காப்பிய அடிப்படையிலிருந்து உருவாக்க யாரும் முன் வரவில்லை என்று தமிழவன் அவர்கள் குறைபட்டுள்ளார்கள். ஆனால் இன்றைய திறனாய்வுப் போக்குள் அமைப்பியல் பார்வையினால் தொல்காப்பியத்தின் கவிதையியலைக் கணக்கில் கொண்டு செயல்படத் தொடங்கியுள்ளது. இதன் விளைவாக ஒரு இலக்கியத்தைப் "பிரதி" என்கிற நிலையில் கண்டு அதனுள் பிரதியின் அகவய நிலையினையும் (Subjectivity) புறமொழியையும் இணைத்துக் காணும் போக்கு வளர்ந்துள்ளது. ஏனென்றால் அமைப்பியலின் இயல்பான போக்கு இயல்பாகவே

சுழல் தன்மையில் அமைந்து விடுகின்ற கட்டமைப்புகளின் உட்கோணங்களை ஆராய்ந்து அறிவதாகும். சமஸ்கிருதத்தில் ரஸ, அலங்காரம், தொனிபற்றிப் பேசுகின்ற சிந்தனை இரண்டாம் நூற்றாண்டின் நாட்டிய சாத்திரத்திலிருந்தே வழங்கி வருதல் போலத் தமிழிலும் பதினெட்டாம் நூற்றாண்டு வரையிலான கவிதையியல் சிந்தனைமரபு இருந்து வருகின்றது. ஆனால் இவை சமஸ்கிருதக் கவிதையியலில் இருந்து மாறுபட்டவைகளாக அகம்/புறம் மற்றும் அவற்றின் திணை, துறைகள் என்ற பெரிய மரபின் வழித் தொடர்ந்து வருகின்றன. புறப்பொருளைப்பற்றிப் புறப்பொருள் வெண்பாமாலையும், பன்னிரு படலமும் கூறுகின்றன. அகப்பொருள் சார் கவிதையில் இறையனார் அகப்பொருள், தமிழ் நெறிவிளக்கம், நம்பி அகப்பொருள், களவியல் காரிகை, மாறனகப்பொருள் போன்றவை கூறுகின்றன. இவற்றோடு வீரமாமுனிவரின் தொன்னூல் விளக்கம் மற்றும் சுவாமிநாதம் சேர்கின்ற போது தமிழின் கவிதையியல்சார் சிந்தனைத் தொடர்ச்சி என்பது பதினெட்டாம் நூற்றாண்டு வரை தொடர்ந்து வருகின்ற நிலையினை உணரமுடிகின்றது.

அகம், புறம் சார்ந்த கவிதையியல் மரபினைத் தாண்டித் தமிழ் இலக்கியங்கள் மிகப் பெரிய புராணங்கள் மற்றும் காவியங்களைத் தழுவிய நிலையில் தங்கள் போக்கிற்கு ஏற்பக் கட்டமைத்துக் கொள்கின்ற வழக்கமும் இருந்து வந்திருக்கின்றது. இராமாயணக் கதையை ஒவ்வொரு இந்திய மொழியும் தனக்கேற்ப உள்வாங்கிக் கொண்டு புதிய கட்டமைப்பில் கொடுத்திருப்பதுபோல் இசுலாமியத் தலைமைப் பாத்திரத்தை உள்வாங்கிக் கொண்டு பல மொழிகள் கற்பனா ரீதியான இலக்கியங்களைப் படைத்திருக்கின்றன. கதை அமைப்பைத் தத்தம் மொழிகளுக்கு ஏற்பத் தழுவிக் கொண்டு, மறு அமைப்பு செய்து கலாச்சார அடித்தளத்தை அமைத்துள்ளன. புழக்கத்தில் இல்லாத அரபு, பாரசீக மொழிகளில் உள்ள வழக்குகளைத் தமிழ்க் கலாச்சாரத்திற்குத் தேவையான சிறுசிறு வேறுபாடுகளுடன் தமிழ் இலக்கியப் புனைவுகளாக மாற்றி இசுலாமிய இலக்கியங்கள் என்ற ஒரு வகை புதிதாய்த் தோன்றியுள்ளது. ஆனால் ஏற்கெனவே இருந்த அகம்/புறம் என்ற அடிப்படை எல்லைகளைக் கடக்காமல் திணை துறையின் உள் வகைகளை மறு அமைப்பு செய்து கொண்டு இயக்கத்திற்கு

உட்பட்ட கவிதையியல் ஒன்றினை நீளச் செய்துள்ளது. "இது ஒரு வகையில் திரும்ப வருதல்" (தொல்காப்பியத்தில் வந்த திணைகளும் துறைகளும், கருத்துக்களும் அப்படியே பிற்கால நூல்களில் வருவதைக் குறித்தும்), மாற்றம் (புதிய திணை, துறைகள் வந்து சேருதல்), ஒருங்கிருத்தல் (அதாவது பழையதும் புதியதும் ஒருங்கிருத்தல்) என மூன்று நிலைகளில் அமைந்து ஒரு சுழற்சிக் கவிதையியலைத் தமிழ்க் கவிதை உலகிற்குத் தந்துள்ளது. காப்பியம், புராணம், சிற்றிலக்கியம் என்கின்ற இலக்கிய வகைப்பாடுகளில் சிறுசிறு மாற்றங்களை முன்வைத்துக் கொண்டு இசுலாமியத் தமிழ் இலக்கியங்கள் மிக நீண்ட கவிதையியலின் தொடர்ச்சியாக வளர்ந்து கொண்டு வந்திருக்கின்றன.

ஆங்கிலக் காலனிய வரலாற்றிலிருந்து இந்திய நாட்டின், தமிழ் நாட்டின் வரலாறு பிரித்தறிய முடியாதது போல் அறிவார்த்தத் துறைகளின் வரலாறும் விளங்குகின்றது. ஒரு கலாச்சாரம் பிறவற்றின் தாக்கம் இல்லாமல் எப்போதும் தன்னை விளக்கி வைத்துக் கொள்ள முடியாது என்பது உண்மை.

முகலாயப் படையெடுப்பு அல்லது இசுலாமியர்களின் ஆதிக்கம் இந்தியாவையும், தமிழ்நாட்டையும் ஆட்கொண்டபோது கலாச்சார வெளிப்பாடான இலக்கியத் துறையிலும் இதுதான் சம்பவத்திருக்கின்றது. ஒரு கலாச்சார வரலாற்றில் இயல்பிற்கு மாறானவை அதிகாரச் சார்போடு வந்து ஒன்றுகின்ற போது அவை மிகப் பெரிய அளவில் வேறுபட்டு, வெளிப்பட்டுத் தோன்றும். சிற்றிலக்கியங்கள் பெரும்பான்மையாகச் சிற்றின்பத்தை மையமிட்டனவாகத் தமிழில் வெளிப்படுகின்ற போது இசுலாமியத் தமிழ் இலக்கியங்கள் பேரின்பத்தை மட்டும் வெளிப்படுத்தக் கூடியனவாகக் கட்டமைக்கப்பட்டுள்ளன. இதற்கான காரணம் என்பது காலனி ஆதிக்கம் விரித்து கால்பரப்பிக் கொள்ளப் பிரித்தானியம் கிறித்தவச் சமயத்தை முன்வைத்துக் கடவுள் கொள்கையை ஆழப்படுத்தியது போல இசுலாமியத் தமிழ் இலக்கியங்கள், சிற்றிலக்கியங்களிலும் பல வகைகளில் கடவுள் கொள்கையை நிலை நிறுத்தின. புதிதாகப் பல சிற்றிலக்கிய வகைகளைப் பாரசீக, அரபு மொழிகளிலிருந்து புரட்டி எடுத்துத் தமிழுக்குள் திணித்தனர். ஒரு கலாச்சாரக் கட்டமைப்பினுள்

இன்னொரு கலாச்சாரச் சம்பவங்கள் தங்களை வலுக்கட்டாயமாக இணைத்துக் கொள்வதன் இரகசியத்தை இதன் வழி இயல்பாக உணர முடியும். இசுலாமியர்கள் தமிழுக்குத் தொண்டு செய்ததாகவும், கிறித்தவர்கள் தமிழுக்குத் தொண்டு செய்ததாகவும் பார்க்கின்ற மேலோட்டமான போக்கினை விடுத்துக் கலாச்சார வெளிப்பாடுகளுள் ஒன்றான இலக்கியங்களின் மேல் போக்குகள், உள்போக்குகள், தாக்கங்கள், பிம்பங்கள், சமிக்ஞைகள் வழி உள்-இணைவுகள் போன்ற அனைத்துத் தளங்களின்வழி நோக்குகின்ற போது இசுலாம், கிறித்தவம் போன்ற சமயங்கள் மட்டுமல்லாமல் இந்து சமய இலக்கியங்களின் வெளிப்பாட்டுக் காரணங்கள் என்னவென்பதையும் உணரமுடியும்.

கலை வெளிப்பாட்டு நுட்பத்தளங்களில் அரசியலின் கூர்மை எவ்வாறு செயல்பட்டுத் தன்னைத் தீட்டி நின்று கொள்கின்றது. காலனியாதிக்கத்திற்கு முன்புவரை தங்களைத் தமிழகத்தில் நிலைநிறுத்திக் கொண்ட இசுலாமியர்களின் இலக்கிய வெளிப்பாடுகள் குடிமக்கள் காப்பியம் போன்றோ, சீவகனின் எட்டுத் திருமணத்தை வர்ணிப்பது போன்றோ, மணிமேகலையின் பசி நீக்கும் பௌத்த சமயப் பரவலாகவோ இல்லாமல் நபிகள் புகழ்பாடுவதை மட்டும் மையமாகக் கொண்டமைவதன் சிந்தனை வெளிகள் எந்தப் பிரிவாகின்றன என்பதையும் உணரமுடியும். வரலாற்றை நிலைநிறுத்தும் முனைப்போடு நடக்கின்ற சுய சொல்லாடல்களுக்கு இலக்கியம் பெருமளவில் துணை புரிந்திருக்கின்றது. ஆனால் இசுலாமியத் தமிழ் இலக்கியங்களின் மையக் கருத்து ஒன்றாக இருக்கின்ற காரணத்தால் கருத்தாக்க நிலையில் ஒற்றைத் தன்மையுடையதாகவே வெளிப்பட்டிருக்கின்றன. தமிழ் நாட்டிற்குள் வாழ்ந்த இசுலாமிய இலக்கியச் சிந்தனை தனக்குள்ளே பேத உணர்வைக் கொண்டிருந்தது (சைவ, வைணவ இலக்கியங்களைப் போல) என்றும் இதனைக் கூறலாம். சமய இலக்கியங்களின் புறவயக் கூறுகளின் மீதான அபாரத் தன்மைகளை அனுபவத்துச் சிலாகிக்க இலக்கியத் திறனாய்வுப் போக்கில் இடமளிப்பது போல் அகவயக் கூறுகளின் மேலான சிலாகிப்புத் தன்மையை வைக்க இயலாது. இந்த உண்மைக் கட்டுமானத்தில் தான் இசுலாமியத் தமிழ் இலக்கியங்கள் தங்களின் எல்லைகளைச் சுருக்கிக் கொள்கின்றன.

அடிப்படையில் வெளியிலிருந்து வந்த ஒரு இனத்தவர் பிறிதொரு நாட்டில் காலூன்றிய நிலைப்பாடு என்ற ஒன்று இருக்கின்றது. பல இலக்கிய வரலாற்று ஆசிரியர்கள் அவற்றை அப்படியே ஏற்றுக் கொண்டுள்ளனர். சிலர் ஏற்றுக் கொள்ளவில்லை. மட்டுமல்லாமல் இசுலாமிய இலக்கியங்கள் அதிகார ஆளுமையை உள்மறைத்துக் கொண்டு செயல்படுவதை உணர்த்தி நிற்கின்றன. ஆணாதிக்கச் சிந்தனை மரபிலிருந்து வெளிப்படும் இந்த இலக்கியங்களைத் தமிழ் இலக்கிய வரலாற்று ஆதிக்கத்தின் இயல்பான வளர்ச்சிப் போக்கு நிலையில் ஏற்றுக் கொள்வதும் கடினமாகும். மேலும் தமிழ்க்கலாச்சாரத்தின் சிந்தனை முறை மரபில் இசுலாமிய இலக்கியங்கள் தங்கள் தொடர்ச்சியை அமைத்துக் கொள்ளவில்லை என்பதும் உண்மையாகும். மிகக் குறைந்த இலக்கியங்களே பொதுமைப் பார்வைக்குள் வருவனவாக இருக்கின்றன. அவற்றுள்ளும் சிறுகதை, நாவல் போன்ற புது இலக்கிய வகைகளே இடம் பெறுவனவாக இருக்கின்றன. மலையாள எழுத்தாளரான வைக்கம் முகம்மது பஷீரின் ‘மூக்கொண்ட மூக்கு’, ‘எண்டே தங்கம்’ போன்ற கதைகளைப் போல அவருடைய நூற்றுக் கணக்கான கதைகள் எதனுள்ளும் ‘இசுலாம்’ என்று ஒன்று தொக்கிக் கொண்டிருக்கவில்லை. அவருடைய ‘பாத்துமாவுடெ ஆடும்’ கூட நமக்கு முன்வைப்பது இசுலாமியத்தையல்ல. இந்நிலையில் இசுலாமியத் தமிழ் இலக்கியங்கள் எந்த இடத்திலும் வரலாற்றோடு தம்மை இணைத்துக் கொள்ளாமல் தாமே, ஒதுங்கிக் கொள்கின்றன என்பதை அறிய முடியும். பாரபட்சமற்ற சிந்தனைகளால் படைப்பாளன் வெனிஸைப் பற்றிக் கூறினாலும் அரசவையின் முட்டாளைப் பற்றிக் கூறினாலும் என்றென்றைக்கும் எல்லா மக்களாலும் எடுத்தாளப் படுபவனாகின்றான். மொழி என்பது சிந்தனை மரபிற்குரியது. இதனுள் தேசம் சார்ந்த சிந்தனைகள் வருகின்ற போது துணைத் தேசங்களைப் பற்றிய சிந்தனைகள் விரிவடைந்து கொள்ளும். துணைத் தேசங்கள் பிற உள்விரிசல்களை அகலப்படுத்திக் கொண்டே செல்லும். இன்றைய அறிவார்த்தச் சூழலில் சமயம் சார்ந்த சிந்தனைகள் இலக்கியம் என்கின்ற மிகப்பெரிய வெளியை அகலத்தில் சுருக்கிக் குறுக்கி நேர் கோட்டுத் தன்மைக்குள் செல்வதோடு அந்த நேர்கோடு ஒரு முள்ளின்

முனையில் சென்று முடியும் முற்றுப் புள்ளியாகவும் ஆகிவிடுகின்றது.

சமயம் தழுவிய நிலையில் மக்களின் அன்றாடப் பழக்க வழக்கங்கள் இருப்பதென்பது வேறு. கம்பராமாயணம் போன்ற இலக்கியங்களில் அரக்கர் குலத்தை அநாகரீகமாக எல்லைகள் கடந்து ஒரு கவிஞன் வர்ணிப்பது என்பது வேறு; இதனை இசுலாம் மாற்று வழியில் செய்திருக்கின்றது. அதாவது ஒரு கொள்கை வெளிப்பாட்டை நிலைநிறுத்த எதிராளியைத் தூற்ற வேண்டும் அல்லது எதிராளியைப் பற்றியே பேசாமல் விட்டுவிட வேண்டும். இதில் இரண்டாவது போக்கைத் தான் இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்கள் செய்துள்ளன. "நாம் மொழி நூல் (Philology) துறையின் வழிவந்து இலக்கியத்தைப் படிக்கின்றோம். அந்த இலக்கியம் 'தேசம்-அரசு' முதன்முதலாக உருவான காலத்தில் தேசம் என்பதின் அடிப்படையில் உருவாயிற்று. தமிழ் இலக்கிய வரலாறுகள் தொடர்ச்சியாக ஒற்றைத் தன்மையினாலான விஷயங்களைப் பதிவு செய்து வைத்துள்ளதைக் குறைகூறத் தயங்குவதைப் போல் இசுலாமியத் தமிழ் இலக்கியங்களின் குறைகளையும் எடுத்துச் செல்லத் தயங்குவது தவறாகும். பார்ப்பனர், பார்ப்பனரல்லாதார் என்கின்ற போக்கு தமிழ் இலக்கிய வரலாற்றுக் கட்டமைப்பில் வேண்டுமென்றே உருவாக்கப்பட்டது போலச் சமய இலக்கியங்கள், இந்துக்கள்-இந்துக்களல்லாதோர், இசுலாமியர்-இசுலாமியரல்லாதோர், கிறித்தவர், கிறித்தவரல்லாதவர் என்ற போக்குகளை வளர்க்கின்றன. இந்தப் போக்குகள் மறைத்திருப்பதெல்லாம் இயல்பான வழக்காறுகளை உள்ளடக்கிய எளிய மக்களின் சொல்லாடல்களைத்தான் என்பதில் ஐயமில்லை. ஒன்றைப் பற்றிய ஒருமித்த சிந்தனை என்பது தேசம் பற்றிய பழமைவாதிகள் முன்வைத்த ஒற்றைக் கருத்தாடலோடு இணைந்ததாகும் இது மேற்கத்தியர்களால் தமிழுக்குள் இறக்கப்பட்டதாகும். எளிதில் இழக்க, உடைக்க, மாற்றியமைக்க முடியாததான இந்தக் கட்டமைப்பு கல்வி நிறுவனங்களின் கட்டமைப்பைப் போல் இறுக்கமான நிலையில் அனைத்தையும் ஒழுங்குக்குக் கொண்டுவர முயலுவதாகும். இதன் வழியாகத் தான் மேற்கத்தியவர்கள் இன்றும் கிழக்கத்தியர்களை அடக்கியாளுகின்ற சூழ்ச்சி நடந்தேறுகின்றது. தாகூரின் தேசம்

என்கின்ற சிந்தனை மனிதர்களை நல்ல வழியில் கொண்டு சேர்க்காது என்பதை உணர்ந்தே அது சார்ந்த பிரக்ஞையை அவர் ஆதரித்துத் தம் படைப்பில் விளக்கியுள்ளதைப் போல இசுலாமியப் படைப்பாளிகள் சமயம் சார்ந்த எடுத்துரைப்புக்கள் பல் வண்ணங்களையும், பன்முகத் தன்மையையும் பெறாது என்பதை உணர்ந்தே வெளிப்படுத்தியுள்ளார்கள்.

ஒரு பிரதிக்குள் கதையாடல் என்பதைத் தாண்டிக் 'கதை' என்று ஒன்று தனித்தும் தன்னைச் சுயமாக இருத்திக் கொள்ளத்தக்க திறன் பெற்றதாகும். கதையாடலால் அது தன்னை விளக்கமுறச் செய்து கொள்ளும். அவ்வளவுதான். ஆனால் அதனுள் அமைந்திருக்கும் உட்கூறுகள் விவரணைகளை விளக்குகின்ற பணியினை மேற்கொள்வனவாக அமைந்துவிடும். ஆனால் இசுலாமிய இலக்கியங்களைப் பொறுத்தவரை அவை முன்முடிவு செய்யப்பட்ட கருத்தாக்கங்களைப் பெற்றிருப்பதினால் உட்கூறுகளின் பணிகளைப் பிரித்துப் பார்த்து அணுகமுடியாத நிலையில் கதையாடல் தன்மைகளில் இணைவுத் தளங்கள் அமைந்து விடுகின்றன. 'இயேசு' 'கிருஷ்ணன்' 'அல்லா' கண்ணகி, என்கின்ற என்ற பன்முகத தன்மையுடைய போராளிகளுக்கும் உள்ள வேறுபாட்டை உணர்ந்தால் இலக்கியங்களின் கதையாடல்கள் எதை நிலைநிறுத்த முயன்று கதையாடல் திறனில் எங்கே தோற்றுப்போகின்றன என்பதைப் புரிந்து கொள்ள முடியும். சைமல் என்கின்ற ஆய்வாளர் சமூக வளர்ச்சியின் இனப்பெருக்கமாகச் சமூகவியலைக் காண்கின்றார். இன்றைய சமூகம் மிகுந்த சிக்கல்களையும், நெருக்கடிகளையும், குழப்பங்களையும் எதிர்நோக்க வேண்டியுள்ள நவீன சமூகமாக இருப்பதனால் சமூகத்தைப் பற்றிய அறிவியல் பார்வை என்பது அவசியமாகின்றது. கலாச்சாராம், சமயம் அல்லது பொருளாதாரம் என்பதனைப் பிரசவகின்ற ஒரு சமூகத்தினை ஒரு போதும் ஒரு தனிமனிதனின் ஒற்றைக் கண்ணோட்டத்தில் காணமுடியாது. தனிப்பட்ட பங்களிப்புகள் அல்லது தனி நாயகத் தன்மை (Heroic Quality) போன்றவை சமூக வரலாற்றை நிர்ணயிக்கின்ற அடிப்படை ஆதாரங்களாக முடியாது என்பதனை இன்றைய வரலாற்றில் கண்டு கொள்ள இருக்கின்றோம். மேலும் அறிவாராய்ச்சி நிலையில் அழுத்தி

முன்வைக்கப்படும் கடவுள் என்கின்ற கருத்தாக்கமும், நிலைபெறாத ஒன்றாகி விட்டதனையும் உணரமுடிகிறது. இந்நிலையில் மனிதர்கள் தங்களின் வாழ்தலைச் சிக்கல்கள் நீங்கிய ஒன்றாக அமைத்துக் கொள்வதற்கான விளக்க முறைகளைத் தேடுவதற்குப் பலவற்றைப் பகுத்தாரய வேண்டிய நிர்ப்பந்தத்தில் இருக்கின்றனர். இந்நிலையில்தான் இசுலாமிய இலக்கியங்கள் என்பதனையும் தமிழ்க் கலாச்சார நீரோட்டத்தினுள் இழைகின்ற ஓர் அம்சமாகக் காண வேண்டியவர்களாகின்றோம். இன்றைய சிறுபான்மையர்களில் தங்களின் அடையாளத்தைத் தீவிரநிலையில் நிலைநிறுத்திக் கொள்ள முயலுகின்ற இவர்களுக்கு இசுலாமியத்தை ஆழ்மன நிலையில் நிலைநிறுத்துகின்ற ஆதாரக் குறிப்புகளாக இவை இருக்கின்றன.

பல்வேறு சமூக நிகழ்வு வெளிப்பாடுகளும், தனிமனித மைய வெளிப்பாடுகள் அல்ல. அவை பல்வேறு காரண காரியம் மற்றும் சமூக எத்தனிப்புகளோடு இணைந்தவைகளாகும். ஆனால் ஒவ்வொரு தனிமனித நிகழ்வின் பங்களிப்பு இணைவுகளால் ஆனதே ஒட்டுமொத்த சமூக நிகழ்வுகளாகும். இணைவுகளின் அமைவுகளில் இவை தனிமனித எல்லைகளைக் கடந்து சமூகப் பங்களிப்பாகின்றன. இந்நிலையிலேயே மொழிசார்ந்த பங்களிப்புகளையும் காணமுடிகிறது. ஒரு மொழியென்பது யாராலும் கண்டுபிடிக்கப்பட்டது அல்ல. அதுபோலவே யாராலும் கட்டுப்படுத்தக்கூடியதும் அல்ல. இந்நிலையில் வியாபார நோக்கிற்காக வந்த இசுலாமியர்கள், அரபு, பாரசீக மொழிகளைத் தங்களின் மொழியாகக் கொண்டிருந்தாலும் இன்னொரு நாட்டினுள் தங்களுடைய தாய்மொழியைக் கொண்டு செயல்பாட்டு ரீதியில் எதனையும் பதித்து வைத்துக் கொள்ள முடியாது என்பதனை உணர்ந்ததனால் அவர்களின் கலைவெளிப்பாடுகள் வல்லமைகளை நிலைநிறுத்த முடியாத நேர்கோட்டுத் தன்மைக்குள் உள்ளடங்கிப் போன நிலையைக் காணமுடிகின்றது. அக்பர் நாமா, ஜாஹாங்கீரி, பாதுஷா நாமா போன்றவைகளும் நிகழ்வு விளக்கங்களாகச் சட்ட நியதிகளின் எடுத்துரைப்புகளாக மட்டுமே நின்று போனதற்குக் காரணமும் இதுவே. இதனையும் தாண்டிக் கிரீஷ்கர்னாட் "முகமதுபின்

துக்ளக்கைப் பார்த்தது போல், இந்திரா பார்த்தசாரதி, ஔரங்கசீப்பைப் பார்த்தது போல் புத்தாக்கப் பார்வையுடன் முகலாய மன்னர்களைப் பார்க்க இசுலாமிய எழுத்தாளர்களால் முடியாமல் போனதற்கு நேர்கோட்டுத் தன்மையினாலான அவர்களின் சிந்தை வெளிப்பாடுகளே காரணமாகும். ஆனால் பிஸ்மில்லா கானின் ஷெனாய், ஷகீர் ஹுசேனின் தபேலா, எம்.எஃப் ஹுசேனின் தூரிகை போன்றவை தனிமனித ஒற்றைத் தன்மையினாலான நேர்கோட்டுத் தன்மையினைக் கடந்து பன்முகத்தன்மையான பரிமாணங்களுக்கு மனிதமனங்களை இட்டுச் சென்று உலக அளவிலான பார்வையை முன்வைப்பதில் வெற்றியடைந்திருக்கின்றன. ஆத்மார்த்த அழகியல் ஈடுபாட்டில் உலக உயிர்களின் தேடலை ஒன்றிணைக்கும் மகத்துவத்தை இந்தக் கலைஞர்கள் சரிவரச் செய்திருக்கிறார்கள் என்றே சொல்லமுடியும்.

சமூகம் என்பது இயங்க முடியாத பொருளல்ல. நிலை நிறுத்தப்பட்ட அமைப்புக்கு உட்பட்டதல்ல. தனிப்பட்ட ஒரு அறிவார்ந்த நிலையிலான கூறும் அல்ல. பொருள்களையும், அமைப்புகளையும் இணைவித்து ஒன்றொடு ஒன்றை உறவாடச் செய்கின்ற பன்முகத் தன்மையிலான முறைமையாகும். ஓர் அம்சம் இன்னொரு அம்சத்தோடு உறவாடுவதனால் மட்டும் சமூக இயக்கம் முறைமை ஆகின்றது. உறவாடுதலின் அடிப்படையில் ஒன்று இன்னொன்றோடு கொள்ளும் தொடர்பு வடிவத்திற்கு உள்ளாகின்றது. இது உலகின் அனைத்து முனைகளிலும் உள்ள செயல்பாட்டுத் தளங்களின் இயக்க அடித்தளமாகின்றது. உலகின் அனைத்து நிலைப்பாடுகளும் உறவுநிலைகளின் அடிப்படையில் ஒவ்வொன்றின் தனித்துவத்தோடும் பேச வைக்கின்றது. கருத்து மையங்கள்தான் சமூகத்தின் எல்லா வேலைப்பாடுகளின் மூலம் விளக்கம் பெறுபவைகள் ஆகின்றன. சமூகத்தின் சாராம்சங்கள் ஆகின்றன. ஆனால் சைமல் தனிமனிதர்களின் ஆர்வங்களும் அணுகுமுறைகளும் கருத்துருவங்கள் ஆகின்ற போது அவை சமூக இயல்புத் தன்மைகளை இழந்தவையாகின்றன என்கின்றார். இசுலாமியத் தமிழ் இலக்கியங்களும், சைவ, வைணவ இலக்கியங்களும் சமூக இயல்புத் தன்மைகளை இழந்த ஒற்றை மையங்களாகிப் போனவைதான். பெருங்கதையாடல்கள் என்ற

நோக்கத்தில் மட்டுமல்லாமல் இவை நிலைபேறு உடையவைகள் என்ற சிலவற்றை முன்வைப்பதன் பேரில் மனிதச் சமூகத்தை அமைதியினுள் நிலைநிறுத்த முடியாதவைகளுக்கு அடிகோலுகின்றன. இசுலாமிய இலக்கியங்களின் வடிவங்கள் தமிழ் இலக்கியங்களைப் பிரதிபலித்தாலும் கருத்தமைவுகளில் பன்முகத் தன்மைகளோடு பிரதிநிதித்துவம் பெற இயலாமல் போயின. அவை தனிப்பட்ட சமூதாயத்தைத் தனிப்பட்ட சுயத்தை முத்திரை இட்டு மூடிக்கொண்ட தனித்த அறைகளாக உள்ளன.

இசுலாமியத் தமிழ் இலக்கியங்கள் ஒவ்வொன்றையும் எடுத்துக் கொண்டு அவற்றின் கதையாடல் தன்மையினை விரிவாக்கம் செய்வதற்கேற்ற வாய்ப்பு வசதிகள் அறிவாராய்ச்சி நிலையில் போதுமான சூழல்கள் இன்றைக்கும் வெளிப்படாத காரணத்தினால் ஒட்டுமொத்தமாகப் பின் நவீனத்துவ நோக்கில் கதையாடல்கள் என்பன எந்த நிலையைப் பெற்றுள்ளன என்பதை விரிவாக ஆராய்ந்தோமானால் இசுலாமியத் தமிழ் இலக்கியங்களின் கதையாடல் தன்மைகள் இன்றைய சூழலில் எந்த இடத்தைப் பெறுகின்றன என்பதை உணர முடியும். இந் நோக்கை மனத்தில் கொண்டு மட்டுமே பின்நவீனத்துவமும் கதையாடலும் என்ற இறுதிப்பகுதி பேசப்பட்டுள்ளது.

## பின் நவீனத்துவமும் கதையாடலும்

பின்நவீனத்துவச் சிந்தனை என்பது தோற்றுவாய்களின் (மூலங்களின்) மேல் ஐயுறவுத் தன்மையை வைக்கக் கூடியது. முழு முதல் காரணி, அடிப்படை, மூலம்-போன்றவை முன்வைக்கக் கூடிய அறிவெல்லை. கடந்த பரப்புக்களில் நின்று விளக்கக் கூடியவைகளுக்குத் தலைவணங்கக் கூடிய நிலையினை மாற்றியமைக்கக் கூடியதாகும். கடவுளைப் புதுப்பிப்பதன் மூலம் "கடவுளின் இறப்பு" என்ற தத்துவத்தை வெற்றி பெறச் செய்வதாகும். இவை மூலங்களை, இடைமறிக்கும் நிலை மற்றும் கருத்தாதிக்கச் சார்பு நிலையுடைய "முடிவுகளைப்" பற்றிய சிந்தனைகளுக்கு நம்மை இயல்பாகக் கொண்டு செல்லக்கூடிய ஒன்றாகவும் இருக்கின்றது. பின் நவீனத்துவ முடிவுகள் முடிந்த முடிபுகளாக எதையும் முன்னுரைப்பதில்லை. அடிக்கடி சர்ச்சைக்கு உள்ளாக்குகிற, குறைபாடுகளைத் தொடர்ந்து பேசிக்

கொண்டிருக்கின்ற - கிடைக்கக்கூடிய குறைந்த பட்ச வெளிகளுக்குள் எல்லைகளைக் கடந்த நிலையில், ஆனால் இருக்கின்றவைகளை ஓயாமல் தொந்தரவு செய்து கொண்டிருக்கின்ற கருவியாக அல்லது பயிற்சியாகப் பின் நவீனத்துவச் சிந்தனை என்பது இருக்கின்றது. தனக்குத் தானே முடிவுகளைத் தேடியுரைக்கும் தத்துவப் பேருரைகளை முடிவுக்குக் கொண்டு வருகின்றது. இதனை இறந்து போவதற்காக எடுக்கும் தயாரெடுப்பு என்று கூடச் சொல்லலாம். தொடங்கும் இடமும், இறக்கும் இடமும் ஒன்று. தூக்கி எறிவது அப்புறப்படுத்துவதென்பது புதுப்பித்தலுக்கான சாதகத்தைக் கொடுப்பது. தத்துவம் என்பது நிராகரிக்கப்படுகின்ற இடத்தில் எதிர்வினை ஆக்கச் செயற்பாட்டிற்கான தளத்தை வைப்பது. பிரெஞ்சுத் தத்துவவியலாளர்கள் தத்துவங்களின் முடிவைக் கணக்கிலெடுக்கவில்லை. ஒரு இடத்தில் ஒரு தனிமனிதச் செயல்பாடு என்ன என்பதை மதிப்பீடு செய்வதை மட்டுமே கணக்கில் கொண்டனர். கில்லெல் 'ஒரு தத்துவத்தைக் கடந்து போவது பெரிய விஷயமல்ல. ஒரு தத்துவத்தைப் பற்றிய சொல்லாடல்களை முன் வைத்து விவாதிப்பது சலிப்பூட்டக் கூடிய ஒன்றே' என்கிறார்.

டெரிடா தற்சமயத்தில் மிக எளிதாகச் சொல்லிக் கொண்டிருக்கின்ற Death of Philosophy என்பதிலும் மனிதன், புத்தகம், இவை இறந்து போனதாகச் சொல்வதில் எனக்கு நம்பிக்கையில்லை. ஏனென்றால் இறந்து போனவற்றிற்குப் பிரத்யோக சக்தி இருக்கின்றது.

இறுக்கமான நிலையிலான தத்துவங்கள்தங்களுக்கான மரணத்தைத் தாங்களே தேடுவதை இது உணர்த்துகின்றது. தத்துவங்கள் பின்நவீனத்துவத்தோடு இணைக்கப்படும்போது நீட்சேவிற்குப் பிந்தைய தேசாந்திரத் தத்துவங்களின் (Continental philosophy) ஒட்டு மொத்த முடிவுகள் - தீர்க்கமான முறையில் தங்களின் மரணத்திற்கான ஒத்திகைகளை நிர்ப்பந்தித்து நடத்துகின்ற நிழல் நாடகங்களாக வெளிப்படுகின்ற நிலையைக் காட்டுகின்றன. பின் நவீனத்துவத்தின் மற்றைய விலக்குதல்களைப் போலல்லாமல் படைப்பு முன்வைக்கும் "முடிவுகள்" அல்லது கருத்தியல்களைப் பேசும்போது

தத்துவங்களின் தளர்ச்சி நிலையில் அதன் பிறப்பிடமும், இறப்பிடமும் ஒன்றென்பதை உணர்த்துகின்றது. தத்துவங்கள் தூக்கி எறியப்படுவது அல்லது அப்புறப்படுத்தப்படுவதென்பது புதுப்பித்தலுக்கான சாதகத்தைக் கொடுக்கின்றது. தத்துவம் என்பது நிராகரிக்கப்படுகின்ற இடத்தில் எதிர்வினையாக்கச் செயல்பாட்டிற்கான தளத்தை முன்வைக்கின்றது.

பின்-யுத்த காலப் பிரெஞ்ச் தத்துவவியலாளர்கள் தத்துவங்களின் மரணத்தை ஏற்க மறுத்தனர். லூசி இரிகாரே அவற்றை "அவசியமற்ற மதிப்பீடுகளுக்கான மதிப்பீடு" என்று எள்ளி நகையாடினார். இல்லெஸ் டெலியூஸ் மற்றும் பெலிக்ஸ் கட்டாரி என்ற இருவரும் "தத்துவங்களை எதிர்கொள்வதும், கடந்து போவதும் எங்களுக்குப் பெரிய விஷயமல்ல. ஆனால் அவைகள் கருத்தாக்கங்களை விவரிப்பதாகச் சொல்லிச் சலிப்பூட்டுகின்றன என்றனர். இன்னும் குறிப்பாக இவற்றைப் பற்றி, ஜேக்ஸ் டெரிடா கூறுகின்ற போது, "இன்று தத்துவங்கள் மரணிப்பதாகக் கூறப்படுவதை நான் நம்புவதில்லை (அது போன்று எளிதாக ஒரு விஷயம் இறந்து போய்விடுவதாக - அதாவது ஒரு நூல், மனிதன், அல்லது கடவுள் இன்னும் பல இறந்து போவதாகக் கூறப்படுவதன் மூலம் அவை தனியாளுமையைக் கைக்கொள்ளக் கூடும்) என்றும், "ஒரு நூலின் முடிவில்தான் அந்நூல் எழுதப்படுகின்றது'' என்றும் வெளிப்படுத்துகின்றார். ஒரு நூல் என்பது ஒட்டு மொத்தக் கருத்தாக்கங்களின் விவரணைகளாகின்ற போது, ஒரு கருத்தாக்கம் என்பது எழுத்தாக்க உணர்வின் தடங்காணா ஆழத்தில் அறியப்பட்ட ஒன்றாகவே இருக்கின்றது. ஒரு நூலில் இறையியல் குணம் நிரம்பிய ஒற்றைக் கல்லால் ஆன அறிவாராய்ச்சி நிரம்பிய நிலைப்பாட்டை உட்கிரகித்து, சிதறடிக்கச் செய்ததோடு எதிர்க்கட்டளையிடுவதன் மூலம் எழுத்தின் ''தொல்பழநிலை வீர்யம்'' தென்படுவதாக அறிவிக்கின்றார்.

இது ஒன்றை மறுதலித்து ஒன்றை ஏற்றுக்கொள்கின்ற முறை வழிப்பட்டதல்ல; மாறாக ஒன்றின் அமர்வில் மற்றொன்று மீண்டெழுகின்ற தன்மையினதாகும். இதனால் எழுத்தானாலும் நூலானாலும் அது அதனுடைய முதலையும் முடிவையும்

உண்மையாகக் கூற முடியும். இதனால் டெரிடா ஒரு நூலுக்கான மிக உண்மையான கருத்தை முன்னுக்குக் கொண்டு வருகின்றார். அதாவது, அறுதியிட்டுக் கூறப்படுகின்ற ஒற்றைநிலையிலான ஒரு முடிவை விட அறுதியிட்டுக் கூறமுடியாத பல தொடர் நிலைகளை அனுமதிக்கின்றார்.

இது முடிவைத் தேடி நடக்கும் பயிற்சி முறையல்ல, முடிவுற்ற நிலைக்கும், புதுப்பிக்கும் நிலைக்குமிடையிலான அச்சுக் கோர்வையாகும். இந்த அச்சுக் கோர்வையை வெளிக்கொண்டுவரப் பின் நவீனத்துவக் கொள்கை வெளிப்பாடுகள் மேற்கத்திய மரபுகளின் மேல் விரிவான ஆக்கிரமிப்பை நிகழ்த்துகின்றன. அறிவென்பது கணிப்புகளைக் கேள்விக்குட்படுத்துவது. தத்துவங்கள் ஒரு போதும் இதனைச் செய்வதில்லை. மனிதனின் பொருண்மை நிலைப்பாடுகள் நீண்ட நாட்களுக்கு நிலைத்து நிற்கக்கூடிய ஒன்றையும் உட்கொண்டதல்ல; ஒடுக்குதல் என்பதன் போர்வைக்குள் மனிதாபிமானம் மற்றும் தத்துவார்த்தக் கூடாரங்கள் எழுப்பப்படுகின்றன. தர்க்கரீதியான கதையாடல்கள் உடையக் கூடியவை. மையத்தை நோக்கி நகர்கின்றவைகளை விலக்குவது மேற்கத்தியக் கொள்கைகளுக்குள் முக்கியமானவைகளாகும். 'உண்மையான உலகம்' அறிந்து கொள்ள இயலாததல் மேற்கோள் குறிகளுக்குள் பூட்டி வைக்கப்பட்டதாய் இருக்கின்றது. முரண்களுக்குள் அடைபடமுடியாத ஆண், பெண் (இன ரீதியான) வேறுபாடுகள் கூட முரண்களுக்கு உட்படுகின்ற ஒன்றாய்ச் சட்டங்களால் பிரித்துணர்த்தப்பட்டு, கூடுதல் முறையிலான சிக்கல்களுக்குள் நெறிப்படுத்தப்பட்டு அவை நியாயப்படுத்தியும் வைக்கப்பட்டிருக்கின்றன.

மேற்கூறியவையெல்லாம், ஒட்டுமொத்தமாக ஒன்றைத் தக்கவைத்துக் கொள்கின்ற நிலையிலிருக்கும் (மேற்கத்திய) தத்துவார்த்த முறைமைகளை உணர்த்துகின்றன. இவை காரணகாரியத் தொடர்பு நிலை மற்றும் அதனோடு நெருக்கமாக இருக்கின்ற எடுத்தியம்புதல், கருத்தாக்கம், மெய்யியல் போன்ற நிலைகளுக்குச் செல்பவையாக இருக்கின்றன. தத்துவார்த்த மரபுகளுக்குள் இரண்டு தர்க்கவியலாளர்கள் சிறப்பாக விளங்கியவர்களாக இருக்கின்றனர். முதலாவதாக டெஸ்கார்டே,

சரியான தொடக்கம் என்பது இறுதியில்தான் அறுதியிட்டுக் கூற முடிகின்றது என்று கூறிய கருத்து அடிப்படைக் கோட்பாட்டியலாளர்களின் வாதங்களுக்குக் கொண்டு போனது. ஹெகல், தத்துவங்களை இழையோட்டத்தில் கண்டதின் மூலம் ஒட்டுமொத்த மரபுவழிப்பட்ட அனைத்தையும் கருத்துத் திட்பமுடைய இயங்கியல் வாதத்திற்குள் கொண்டு வந்தார். அதற்குப் பின்னரே அவை இன்னும் உச்சாணிக் கொம்பில் இருந்து கொண்டிருக்கின்றன என்றும் அவற்றின் மேல் இதுவரை எந்த வேலைப்பாடுகளும் நடைபெறவில்லை என்பதும் எடுத்தியம்பப்பட்டன.

பின் நவீனத்துவமும், தத்துவமும் சார்ந்த எந்த விஷயமும் பெயரிடப்படுதலில் உள்ள சிக்கல்களைக் கையாளக்கூடியதாய் இருக்கும். இந்த இரண்டு பதங்கள் நெடுங்காலத்திற்குத் தனித்து நிற்கக் கூடியவையல்ல; தத்துவங்கள் 'கொள்கைகளுக்குள்' கால்பதிக்கக் கூடியவை. அவை, சமூகவியல், வரலாற்றியல், உளப் பகுப்பாய்வியல், அரசியல், மானுடவியல், தொன்மவியல், மற்றும் இலக்கியங்களோடு இணைத்தெண்ணப்படக் கூடியவை. பின் நவீனத்துவம் பின்-அமைப்பியல்வாதத்தில் மாற்றத்தை உண்டாக்குவதாகவும் மேற்கூறப்பட்ட நிலைப்பாடுகளுக்குள் கலவையாகியும் கிடக்கின்றது. இது விவேகத் திறனுடன் இணைகின்ற இயைபாதலால், 'தத்துவங்களின் மரணம்' அல்லது முடிவென்பது முன்வைக்கக்கூடிய மையமென்பது பரந்து பட்டதாக, அவை சார்ந்த விவாதங்கள், ஒரு கட்டுக்குள் நிலைநிறுத்தப்பட முடியாதவைகளாக - ஆனால் மேற்கத்திய மரபார்ந்த தத்துவ வழியில் சரியான முறையில் பொதுவாக அடையாளம் காணப்படுபவைகளாக அமைகின்றன. பின்நவீனத்துவம் சார்ந்த எழுத்துக்கள் அவற்றின் குறிப்பிட்ட நடை மற்றும் வடிவங்களின் மூலமாகவும் மாற்றங்களை மேற்கொண்டிருக்கின்றன. இதனால் மரபுவழிப்பட்டவைகளைத் தூக்கி எறியக்கூடியவைகளாக மொழியமைவு முறைகள் மற்றும் தர்க்கரீதியான விவாதங்களைத் தத்துவார்த்த சிந்தைவழிப்பட்ட கருத்துக்களாக வெளியிட்டுள்ளன.

இதனால், ஒரு நாவல் அல்லது கவிதை பின்நவீனத்துவச் சிந்தையின் தாக்கத்தில், தத்துவார்த்த ரீதியில் மனதைச் சிக்கலான

நிலைக்குக்கொண்டு வருவதாகவும், மையமற்ற நிலையினதாகவும் நவீனத்துவ இலக்கியத்தின் வெளிப்படையான பாணிகளிலிருந்து விலகியவைகளாகவும் உருவெடுத்தன.

## மொழியின் திருப்பங்கள் நுண்ணறிவுக் கோட்பாடுகளின் இறப்பு

பெயரிடப்படுதலின் பிரச்சினைகளுக்குப் பின், தத்துவங்களின் இறப்பு என்பது கருத்தாக்கத்தை நோக்கி நகர்ந்து செல்கின்றது. தத்துவார்த்தம் பரந்து விரிந்ததாக, பல்வேறு கிளைகளையும், ஒழுகலாறுகளையும் கொண்டதாக (அறிவியல், வரலாறு, சட்டம், மதம் போன்றவற்றை உள்ளடக்கி) இருக்கின்றபோது தன்னை எவ்வாறு அது மூடிக்கொள்ள முடியும். ஆழங்காற்பட்ட அடிச்சுவடுகள் பல்வேறு எண்ணிக்கையிலான அளவில் பல்வேறு திசைகளில், பல்வேறு நிலைகளில் அதன் முடிவைச் சந்திக்க வைக்க வேண்டிய தேவை இருக்கின்றது. அதாவது தத்துவார்த்த மரபு என்ற ஒன்றே இல்லையென மறுப்பதும், கூட ஒரு வகை. அதன் வழியாக ஒட்டுமொத்த பழமையையும், மறுப்பது, இந்த அணுகுமுறை நுண்ணறிவுக் கோட்பாடுகளின் மேல் வைக்கப்படும் விவாத முறையாகும். மரபுவழிப்பட்ட திறனாய்வாளரான இம்மானுவேல் கான்ட் தனது 'Critic of pure reason' (1781) என்ற நூலின்வழிப் பல கோட்பாடுகளைக் காரண காரியங்களுக்குட்படுத்தி விளக்குகின்றார். பின் நவீனத்துவத் தத்துவார்த்த நிலைகள் பின்-கான்டினிய கருத்தமைவுகளாகப் பலவற்றை முன்வைப்பதன் மூலம் கான்ட் குறிப்பாக எவற்றை எல்லைக்குட்படுத்துகின்றார், எவற்றைக் கட்டமைக்கின்றார் என்பதனைக் கண்டு புதிய வழிகளிலான எல்லைக்குட்படுத்துதல்களையும், கட்டமைவு முறைகளையும் முன் மொழிகின்றன.

'நுண்ணறிவுக் கோட்பாடு' என்ற சொல் இயற்பியல் - அறிவியலை உணர்த்துகின்ற நிலையிலிருந்து தோன்றிப் பொருள் உணர்த்த இயலாத ஒன்றாகும். இருபதாம் நூற்றாண்டில் முழுமையான நிலையில் வழங்கப்பட்டு வந்த அர்த்தங்களிலிருந்து உயர்த்தப்பட்டு மனிதனை இயற்கையிலிருந்து பிரித்தறியக் கூடிய சொல்லாக, மரபார்ந்த மனிதத்துவத்தை வலுப்படுத்தக்கூடிய சொல்லாக உயர்த்தப்பட்டது. இது ஹெகலின் தத்துவத்தையும்,

கார்டிசியனின் அடிப்படை வாதத்தையும் இணைப்பதற்குப் பயன்படக்கூடிய ஒன்றாகவும் உருவானது. டெஸ்கார்டே அறிவென்பது நுண்ணறிவுக் கோட்பாட்டு வேர்களை உடைய ஒரு மரம் என்று படம் பிடித்துக் காட்டியவர். பின்பு அதனை அவர் பேரறிவாளத் தன்மையின் நீட்சிக்குக் கொண்டு சென்றார். அதே போன்று ஹெகல் தன்னுடைய 'Phenomenology of mind' என்ற நூலின் வழியாக 'நுட்பமான அறிவிற்கான' பயணத்தை மேற்கொண்டவர். அந்தப் பயணத்தில் அறிவு என்பது சுய-அறிவு என்று மனம் தன்னைத் தானே உணர்வதாகவும், மனம் மனமாக இருப்பதை உணர்கின்ற நிலையுமாகும் என்று கூறினார். நுண்ணறிவு நிலையிலான மனிதத்துவம் தேடலுக்கான பாதையை நோக்கியதாக, ஐயுறத் தன்மையிலிருந்து பயணத்தைத் தொடங்கக்கூடியதாக அறிவார்த்த நிலை மற்றும் ஆசிரிய நிலை என்பதிலிருந்து பிரிந்து சென்று, பிறிது நிலைகள் மற்றும் ஒரே நிலையின் அமைவில் உள்ள பல்வேறு நிலைகளைத் தேடுவதாக இருந்தது.

பின்நவீனத்துவம் நுண்ணறிவுக் கோட்பாடுகளை மறுப்பதன் மூலம் மொழியின் பரந்துபட்ட நிலையினை நிர்ப்பந்திக்கின்றது. தத்துவார்த்த ரீதியில் சொல்லப் போனால் இரண்டு நிலைப்பாடுகளின் வழியிலானதாக - அதாவது கருதுகோள்கள் மறுக்கின்றதாகவும், எதிர்க்கருதுகோளுக் கானதாகவும் (antithetical) இருக்கின்றது. மரபுவழித் தத்துவங்களைப் பகுத்து ஆராய்ந்ததில் லுட்விக் விட்கென்ஸ்டின் புது வழியிலான சிந்தனை முறைகளையும், புது வழியிலான சொல்லாடல்களையும் முன் வைத்தார். அதாவது "மொழி விளையாட்டு", "குடும்ப வகை மாதிரிகள்" (வாழ்நிலை வடிவங்கள்), "வாழ்க்கை உருக்கள்", "தனிப்பட்ட விவாத மொழி" போன்றவற்றின் வாயிலாகப் பின் நவீனத்துவ மொழியென்பது தத்துவார்த்த நிலையில் தன்னுடைய பிம்பங்களை ஊடுருவச் செய்வதும், மறுவாசிப்புக்குட்படுத்தவும் செய்கின்றது என்று கூறினார்.

மரபார்ந்த சொல்லாடல்களின்வழித் தத்துவங்கள் கடந்து வந்திருக்கின்ற வகை மாதிரிகளான பாதைகளை மார்ட்டின் ஹைடெக்கர் நவீன ஆன்மீக வெளிப்பாட்டு நிலைக்கான

மாற்றுச் சிந்தையாக விரிந்த நிலையிலான படைப்பாக்க உணர்வாக, ஆனால் கவிதை மொழியாக, குறிப்பாக ஹோல்டர்லின், ரில்க், ஜார்க், ட்ராக்ல் போன்ற ஜெர்மன் கவிஞர்களின் மொழியாகக் காண்கின்றார். இரண்டு தத்தவவாதிகளும், மொழியியல் முனைகளில் நின்று தத்துவார்த்தங்களுக்குப் பதிலளிப்பவர்களாக, இருந்த போதிலும் இரண்டு வேறுபட்ட பார்வைகளை முன்வைக்கின்றனர். பகுப்பாய்வு முறையில் மொழியியல் முறைமைகள் தத்துவங்களைச் சொல் வரையறைகளுக்கு உட்படுத்துவதனால் 'யதார்த்தத்தில்' தத்துவங்களின்வழிப் புரிந்து கொள்ளப்பட்டது என்ன என்பதனையும், மொழிக்குள் அவற்றின் செயல்பாடு என்னவாக இருந்ததென்பதனையும் உணர முடிகின்றது. கருத்திலிருந்து சொல்லுக்குப் போகின்ற முறைமையில், மொழியை நோக்கிய, மொழியை மையமிட்ட, கருத்துப் பிடிப்புள்ள தத்துவார்த்த எத்தனிப்புக்களாக, ஏற்கெனவே இருந்த நிலையினை மறுதலித்தன. டெஸ்கார்டே அகநோக்குத் தன்மையில் மனம் வெளிப்படுத்தும் கருத்துக்களும் (ideas), கருக்களும் (content) ஒன்றை மையமிடுகின்ற முறைமைகளைப் பற்றிப் பேசுவதைத் தொடங்கி வைத்தார். பகுப்பாய்வுத் திறனாய்வாளர்கள் ஒட்டுமொத்த உண்மையின் வெளிப்பாடுகள் அனைத்தும் மொழியினுடையதாகக் கண்டனர். மொழியின் இந்தச் செயலாக்க முறைமைகளைப் பயன்படுத்திக் கொண்டு மனிதச் செயல்பாடுகளை ஒரு குறிப்பிட்ட ஒழுங்கு முறைமைக்குட்பட்ட செயலாக்க முயற்சியை மட்டும் கவனத்தில் கொள்ளுமாறு தத்துவாதிகள் மொழியை இயக்கியுள்ளனர். அந்த முறைமைகள் என்பவை மொழி வழி நின்று அனைத்தையும் சாதிப்பவைகளாகவும், பிரதிநிதித்துவப் படுத்துபவைகளாகவும் இருந்தன.

விட்கென்ஸ்டின்ஸ் மறைவுக்குப் பின் அச்சிட்டு வெளியிடப்பட்ட தத்துவார்த்தக் கண்டுபிடிப்புகள் (Philosophical investigations) என்ற நூலில் மொழிக்கான பொருள்கட்டமைப்பை உற்றுநோக்குகின்ற திறனாய்வாளராக அவரை வெளிப்படுத்தியது. மொழியென்பது முழுக்க முழுக்க மனிதனால் தயாரிக்கப்படுகின்ற ஒன்றென்றும், குறிப்பிட்ட எல்லைகளுக்குள் மட்டுமே நின்று பொருளுணர்த்தக்

கூடியவையென்றும் கண்டிருந்தார். இதன் விளைவாக மொழியியல் பகுப்பாய்வின் சமூகப் பரிமாணங்களையும், அதன் வழிப்பட்ட அன்றாடத் தகவல் பரிமாற்றங்களும் கணக்கில் கொள்ளப்படுகின்ற முறைமைகளும் ஆய்வுக்குட்படுத்தப்பட்டன. இதுவே பிற்காலத்தில் "மனித இனத்தின் இருத்தலே இயற்கையின் இறுதி இலக்கு" என்கின்ற தத்துவத்திற்கு இட்டுச் செல்வதாக அமைந்தது.

தேசார்ந்த தத்துவங்களில் பல்வேறு நிலைப்பாடுகள் தொடடப்பட்டிருக்கின்றன. இவற்றின் வழியாகத்தான் பின்நவினத்துவத் தத்துவம் வெளிப்பட்டிருக்கின்றது. மொழி என்பது இதரப் பிற கூறுகளோடு தன்னைத் துண்டித்துக் கொள்வதைக் காண்பதன் வழி மொழியியல் தன்னைக் கட்டமைத்துக் கொள்வதாகக் கருதுகின்றது. நீட்சே போன்ற தத்துவவாதிகள் வாழ்க்கை விளக்கத்திற்காகப் பயன்படுத்தி வந்த உருவகம், ஆகுபெயர், உள்ளுறை போன்றவைகளால் உலகின் துல்லியங்களை எந்த வகையிலும் பிரதிநிதித்துவம் செய்ய முடிவதில்லை. ஆனால் உடனடித் தேவைக்காக, தனியாகச் சிதைவில்லாத வழியில் மனம் உணர்த்துகின்ற ஏதோ ஒரு கொள்கைக்காக, அவை நின்று கொண்டிருக்கின்றன. எளிதாகச் சொல்லப் போனால் சொற்கள் தங்களின் பொருளுக்காகப் பிற சொற்களைச் சார்ந்து நிற்கின்றன. மொழியியலின் யதார்த்த விளக்க நிலைகளிலிருந்து வேறுபட்டதாகவும் இவை அமைகின்றன. பின் நவீனத்துவ வாதிகள் இதனைத்தான் மொழி மனித அடையாளத்தைக் கட்டமைப்பதாகக் கூறுகின்றனர். ஹைடெக்கர், "மனிதன் மொழிக்கு வடிவம் கொடுத்தவனாகவும் மொழியின் ஆசானாகவும் இயங்குவதாக நினைத்துச் செயல்பட்டுக் கொண்டிருந்தாலும், மொழி என்பது மனிதனுக்கு ஆசான் என்று தன்னை உணர்த்திக் கொண்டிருக்கின்றது" என்று கூறுகின்றார். இந்த மொழியியல் நிலை பின் நவீனத்துவச் சிந்தையோடு இணைத்து எண்ணப்படும்போது அதாவது, மொழி மனித நிலைப்பாடுகளுக்கு முரணானதாக இயங்குவதை வெளிப்படுத்துகின்றது. 'நுண்ணறிவு மனிதன்' என்ற நிலைப்பாட்டில் நம்பிக்கை கொள்ள வைக்கும் கருவியாக மொழி இயங்குவதைப் பின்நவீனத்துவம் மறுக்கின்றது.

"The end of Philosophy and the task of thinking" "தத்துவங்களின் இறப்பும் சிந்தனைகளின் முற்றுகையும்" என்பதில் ஹெடெக்கர் தத்துவம் எவ்வாறு தன் வழியைத் தொலைத்தது என்பதைக் கூறுகின்றார். தத்துவங்களின் இறப்பு அருகாமையானது. தர்க்கம், அறிவியல், தொழில்நுட்பம், பல்துறை ஊடகம் போன்றவற்றில் உள்ள எல்லாவற்றையும் நுண்ணறிவுக் கோட்பாடுகளுக்கு மறைமுகமாகக் கடத்திச் செல்வதில் ஈடுபட்டிருந்ததனால் நுண்ணறிவுக் கோட்பாடுகளின் முடிவு முழுநிறைவு பெற்றுப் பரிபூரண நிலையில் முடிந்ததாக இல்லை. ஹெகலின்தத்துவாத்த மரபு நகர்ந்து கொண்டிருக்கின்றது. ஆனால் முன் உணர்த்தப்பட்ட உணர்வு நிலைகளில் இருந்து சற்றே விலகிய நிலையிலான பொருள் மூடியதாக நகர்கின்றது. தத்துவங்களின் இறப்பு என்ற சொல்லாடல் என்பது தத்துவங்களின் ஒட்டுமொத்த வரலாற்றையும் ஒரு நிலைக்குக் கொண்டுவந்து நிறுத்தக்கூடிய சாதகத்தன்மை பெற்றுள்ள ஒன்றாகும். ஹெடெக்கர் நுண்ணறிவுக் கோட்பாடுகளைப் பற்றிப் பேசுகின்றபோது 'எண்ணுதல்' ஒரு குறிக்கோளாக இருக்கின்றது என்கிறார். அது நுண்ணறிவு சார்ந்ததாகவோ அல்லது அறிவியல் சார்ந்ததாகவோ இருக்கலாம் ஆனால் அது சார்ந்த செயல் முன்முடிவு செய்யப்படாததாக சாதகமானவற்றை உய்த்துணர்ந்து கண்டுபிடிப்பதில் அளவிலாத ஈடுபாடு காட்டுவதாக அமையக்கூடியது; இது யூகித்துச் சொல்லக்கூடிய ஒன்றாக இல்லாமல் நிகழ்கால அடிப்படையிலானதாக அமையக்கூடியதாகும் என்கின்றார். எண்ணங்கள் நுண்ணறிவுக் கோட்பாடுகளால் உருவாக்கப்பட்ட மாற்றங்களைச் செயல்படுத்த முடியாததாக இல்லாமல் போனால் அது எப்பொழுதுமே ஆன்மீகத்தை வலிமையிழக்கச் செய்யும் நவீனத்துவத்தை எளிதாக்க இயலாத ஒன்றாகவே இருக்க முடியும்.

விட்கென்ஸ்டின் மற்றும் ஹைடெக்கர் இருவருமே ரிச்சர்ட் ரோட்டரியின் கருத்துக்களோடு இணைபவர்களாகவே இருக்கின்றனர். பேரறிவாளர் நிலைப்பாடுகளிலிருந்து வரையறுக்கப்பட்ட மேற்கத்தியத் தத்துவங்களைப் பின் கான்டினிய வடிவங்களாகவே ரோட்டரி காண்கின்றார்.

நுண்ணறிவுக் கோட்பாடுகள் இவற்றிலிருந்து நவீனத்தத்துவ வெளிப்பாடுகளாக அறிவார்த்தக் கொள்கைகள் என்ற பெயரில் வெளிவந்தன. இவற்றை மறுபடியும் திருப்பிப் போடுவதன் வழியாக ரோட்டரி தத்துவங்களில் இறப்பு என்பது பேரறிவாள நிலைப்பாடுகளின் இறப்பு என்பதை நோக்கிச் செல்வதாகப் பொருள் கொள்கின்றார்.

தத்துவங்களின் மாற்றங்கள் அறிவார்த்தக் கொள்கைகளுக்குள் கொள்கை ரீதியான பிரதிநிதித்துவங்களால் உண்டாக்கப்படுவதால் மனதின் திறன், வெளியுலகைக் காணும் "கண்ணாடியாக ஒரு பரந்துபட்ட நிலையில் நிற்கும் ஒரு தீர்மானக் 'குறிப்பாக' அல்லது 'பொருந்துதலாக', உலகிற்கும் மனத்திற்கும் இடைப்பட்டதாகவும் அமைந்தது. ரோட்டரி, தன்னுடைய குழுவாழ் மனிதர்கள் மற்றும் சமூகத்திடமிருந்து கூர்ந்து நோக்கிப் பெற்ற சமூக அங்கீகாரங்களே மனிதனின் அறிவாகிறது என்று குறிப்பிடுகின்றார். "இயற்கையின் பிரதிபலிப்பு" இழக்கப்படுவதுடன் பேரறிவாளத் தன்மைக்கான வீர்யமான இறப்பும் நடக்கின்றது. "மேம்பாட்டுக்கான அறிவடிப்படையிலான தகுதிப்பாடுகளை வழிமுறைகளை இடையறாது செவியறிவுறுத்துகின்றதன் மூலம் அறிவடைப் படையிலான நிர்ப்பந்தப்படுத்துவதைத் தத்துவவாதிகள் களைத் தெறியத் தங்களைத் தயார்படுத்திக் கொள்ள வேண்டுமென ரோட்டரி கூறுகின்றார்.

செவியறிவுறுத்தல் என்பது புதிதாக, கூடுதல் சிறப்பானதாக விருப்பம் தரக்கூடியதாக, இனிமை தரக்கூடியதாக உள்ள வழிகளில் பேசக்கூடிய முறைமையாகும். செவியறிவுறுத்தல் வழியான பேச்சென்பது இயல்பு நிலைக்கு மீறியது - நமக்கு அந்நியப்படுத்தப்பட்ட தன்மையின் வழி நம்முடைய சுயத்தை நம்மிடமிருந்து தட்டி எடுத்துக் கொள்வது - நாம் புதிய இருத்தலுக்குள்ளனவர்களாக இருக்க வேண்டுமென நிர்ப்பந்திப்பது. ரோட்டரி தன்னுடைய பின்-தத்துவ (post-philosophical) நிலைப்பாடுகள் என்ற கோட்பாட்டில் "இயல்பான நெறிகேடுகள்" என்பவற்றைத் தன்னுடைய செயல் திட்டங்களுக்கானதாகக் கணக்கில் கொண்டுள்ளார்.

ரோட்டரி நுண்ணறிவுக் கோட்பாட்டு நிலையை விட அறிவாராய்ச்சி நிலை அடிப்படை நிலையிலுள்ளதாகவும்

ஒழுக்கக் கட்டுப்பாடுகளுடன், மனித வாழ்வில் கருத்துநிலை சார்ந்த "செவியறிவுறுத்தல்களாக" அவை இருப்பதாகக் கண்டுள்ளார். ஒழுங்கு நடவடிக்கைகளுடனும், செவியறிவுறுத்தும் நோக்குடையவற்றுடன் இணைத்தெண்ணப் படக்கூடியதாகவும் உள்ளதால் அவற்றை மறுக்கின்றார். ஹைடெக்கர் வழி வந்த இம்மானுவேல் லெவினாஸ் நுண்ணறிவுக் கோட்பாடுகளைக் கட்டிக்காப்பதற்காகவே ஒழுக்க முறைமைகள் அமைந்திருக்கின்றன. அல்லது அவற்றின் மேலான நடவடிக்கைகளுக்காக உண்டாக்கப் பட்டிருக்கின்றன என்கின்றார். நுண்ணறிவுக் கோட்பாடுகளுக்கு முன்னதாக ஏதாவது ஒன்று இருந்திருக்குமானால் அது ஒழுக்க முறைமையாகத்தானிருக்கும் என்றும் கூறுகின்றார். லெவினாஸ் மேற்கத்தியத் தத்துவார்த்த முறைமைகள் மெய்ப்பொருள் மூல ஆராய்ச்சியின் வழியாகப் புனைவுகளை உட்கொண்டு பிறிது நிலை மொழிதல்களை ஆழத்தில் ஒடுக்கி வைத்தவைகளாகவே இருந்திருக்கின்றன. இவற்றை நோக்கும் போது, சமூக முறைமைகளுக்கு எந்த வகையிலும் சரியான அடித்தள மிடாதவைகளாகவே ஒழுக்க முறைமைகள் இருந்து வந்திருக்கின்றன. ஒழுக்கங்களை மறுபரிசீலனைக் குட்படுத்தும் போது அவை முகத்தோடு-முகமாக மற்றவருடன் கொள்ளும் உறவாகவும், நுண்ணறிவுக் கோட்பாடுகளுக்கான உண்மையான சான்றுகளாகவும் தொல் சமூகச் செயல்பாடாகவும் இருக்கின்றன. அண்மைக்கால ஆடம்பர வாழ்க்கை வெளிப்பாட்டு முறைகளினால் தான் 'கடவுள் அருள் வெளிப்பாட்டு நிலைக் கருத்துக்கள் அல்லது மேல் தட்டு சமூகத்தின் மந்திரங்கள் முடிவுக்குக் கொண்டு வரப்பட்டன. அவையே மனிதனின் இறப்பு, கடவுளின் இறப்பு மற்றும் மனிதத்துவம் மற்றும் நுண்ணறிவுக் கோட்பாடுகளின் முடிவுகளாகப் பேசப்படுகின்றன.

## ஒழுங்கமைவில்லாத பொருண்மை வெளிப்பாடுகள் - மனிதனின் இறப்பு

நுண்ணறிவு நிலையிலான கருப்பொருள்கள் பின்நவீனத்துவத் தத்துவங்களின் இயல்பு நிலை உட்செரிப்புக்

களாக இருந்தன. மேற்கத்திய மரபில், மனிதன் அனைத்துப் புலப்பாடுகளையும் உண்டாக்குபவனாகவும், அனைத்தையும் அளவிடக் கூடியவனாகவும் தானியங்கியாக, தத்துவம் கடந்தவைகளாக உள்ள கருப்பொருட்களை இணைத்து எண்ணத்தில் கொள்ளக்கூடிய அர்த்தங்களுக்கான "பார்வை முதலியாக" இருந்தான். இயற்கை நியதிகளிலிருந்து மனிதனைப் பிரித்தெடுக்கின்ற இறுக்கமான நியதிகள் மற்றும் நம்பிக்கைகளுக்கு ஏற்ற வகையில் நடந்து கொள்கின்ற இயல்பிலேயே "நுண்ணறிவுத் திறனுடைய" மனிதனாக, -சுய-வெளிப்பாட்டு நிலையினை அறிந்து கொள்ளும் முனைப்பில் வாழ்கின்ற - உண்மையின்மேல் தாகமும், பசியும் கொண்ட மனிதனாக அது அவனை மாற்றியது. நுண்ணறிவுத் திறன் முன் வைக்கின்ற இந்தப் பார்வையில் மனிதன் தன் அனுபவங்களையும், உலகத்தோடு அவனுக்குள்ள பிடிப்பினையும் அறிவார்த்தமானதாக மாற்றக் கூடியவனாகின்றான். அதிக நாட்களுக்குக் குருடனாக இல்லாமல் நிகழ்காலத்தை அடிப்படையாகக் கொண்ட மனிதவள மேம்பாட்டிற்கான பொருளை நாடுபவனாகவும் பரிணமிக்கின்றான்.

ஆனால், பொருண்மை வெளிப்பாடுகள் அறிவார்த்த எல்லைகளை இழந்துவிட்டன என்பது 1960களின் பிரெஞ்சு தத்துவமாக இருந்தது. அக்காலக் கட்டத்தில் "கருதுகோள்களின் இறப்பு" என்ற நிலைப்பாடு பரந்த அளவிலான எண்ணங்களை உட்கொண்டிருந்தது. "கருதுகோள்களின் இறப்பு" என்பது மந்திரமாகவே அக்காலக் கட்டத்தில் உச்சரிக்கப்பட்டதாகப் பெரி ஆண்டர்சன் (Perry Anderson) குறிப்பிடுகின்றார்.

அந்த உறுதிப்பாடு அமைப்பியல் கொள்கைகளுடன் தொடர்புடைய அனைத்து நடவடிக்கைகளிலும் வெளிப்பட்டது. கிளாட் லெவிஸ்ட்ராஸின் மானுடவியலில் மனிதன் சூன்ய வெளிக்குள் சுருங்கிக் கொண்டிருக்கிறான் என்பதும், தொலை தூரத்தில் கரைந்து போகும் புள்ளியில் சங்கேதங்களும், மொழிவயப்பட்ட புலப்பாடுகளும், கலாச்சாரங்களும், அவனுள் இணைவதாகவும் கூறப்பட்டன. லக்கானின் உளவியல் பகுப்பாய்வு நிலையானது பொருண்மை வெளிப்பாடுகள் மொழிக்காக இருப்பதாகவும் (தொடர்ச்சியைக் கொடுப்பவையாக இருப்பதாகவும்) அவை எப்பொழுதும்

அவற்றின் இருத்தலுக்காக மற்றவற்றைச் சார்ந்திருப்பதாகவும் கண்டது. லூயிஸ் அல்தூசர் என்கின்ற அறிஞரின் பின் மார்க்சியத்தில் மனிதனின் பொருண்மை வெளிப்பாடுகள் கருத்தாக்கம் சார்ந்த நிலையைக் கணக்கில் கொண்டவை என்று கூறப்பட்டது.

ஆனால் மனிதனின் இறப்பு என்கின்ற கருத்தாக்கம் மிக்கேல் ஃபூக்கோவின் வரலாற்று நிலைச் சொல்லாடல்களிலிருந்து உருவானதாகும். அவருடைய மனிதத்துவ முரண் ஒரு உணர்வைக் கொண்டாடுவதாக, அதாவது அது மனிதன் அனுபவத்தால் அறியப்படுகின்ற தத்துவங்கடந்த இரட்டை நிலை வயப்பட்டவன் என்ற உணர்வை பிரகடனப்படுத்துவதாக இருந்தது. இதன் உட்பொருள் மனித அறிவியலின் நோக்கம் மனிதனின் தோற்றம் மதிப்பீட்டு எல்லைகள், அவனை ஒரு நிலைப்பாட்டில் நிறுத்தக் கூடியது என்றும், அவை அறிவார்த்தமற்றவை என்பதையும் உணர்த்துவதாக இருந்தது. ட்ரைஃபஸ் மற்றும் ரேபினோ என்ற இருவரும் எழுதுகின்ற போது "நம்புவதற்கரியதானதும், மனிதனாக இருப்பதனால் ஒட்டுமொத்தமாக ஒன்றுமே செய்ய முடியாதவனாக இருப்பதோடு - எல்லாம் செய்ய முடிந்த ஒருவனுக்கு விதி முறைப்பட்ட ரீதியில் அடங்கிச் செல்வதாக நியதிக்குட்பட்ட, அந்த ஒருவனின் 'இருத்தல்' கடவுள் அல்லது ஒழுக்கம் என்ற பெயரில் இடம்பிடித்துக்கொண்டு முடிந்த முடிவுகளை ஏவி விடுவதாக இருக்கக் கூடியதனை நம்ப மறுத்ததே, நவீனத்துவத்தின் தொடக்கமாக இருந்தது என்ற கருத்துக்களை வெளிப்படுத்தினர்.

பலநூறு ஆண்டுகளின் அறிவியல் முரண்பாடுகள் மனிதனைப் புனிதமான உயிரியாகக் காட்டி வந்திருக்கின்றன என்பதைப் ஃபூக்கோ அறிவிக்கின்ற போது இந்த ஏற்பாடுகள் எவ்வாறு தோன்றினவோ அதே போன்று மறையவும் செய்தன. அப்போது தான் அவற்றால் உண்டாக்கப்பட்ட மனிதனும் மறைய நேரிடும். கடற்கரை மணற்பரப்பில் வரைந்த அலையால் அடிக்கப்படுகின்ற முகத்தைப் போல "மனிதனின் நிலைப்பாடு உள்ளது என்று வெளிப்படுத்தினார். "மனிதன்" என்கின்ற உயிரி கடற்கரை மணல் பரப்பின் விளிம்பில் ஒரு மங்கிய குறிப்பாக

வருகின்ற வரலாற்றுக் கட்டமைப்புக்களைக் காத்து அவை சார்ந்த கசிவுகளோடு கழிந்து கொண்டிருப்பவன். கட்டமைவுகள் மனிதனை உண்மையான குணாம்சத்தோடு உணர்த்தி நிற்பவை; காலவயப்படாது, கடவுளுக்கு நிகரான மனிதன் அழியாத ஆன்மாவைப் போல் இடம்பெறுவதாகவும் ஆனால் விபத்து நிலையிலான, வாய்ப்பு வசதிகளுக்காக ஏங்குகின்ற பிறவியாக, நிலையற்ற தன்மையிலான Pre பொருளாதாரம், உயிரியல், தத்துவம் போன்ற "அறிவாராய்ச்சி வட்டாரங்களுக்கு" இடைப்பட்டதாக அவனுடைய இருத்தல் அமைவதாகவும் இருக்கின்றது என்று ஃபூக்கோ குறிப்பிடுகின்றார்.

இக்காலக் கட்டத்தில் மனித உயிரிகளுக்கும் விலங்குகளுக்கும் இடையிலான, மனித உயிரிகளுக்கும் இயற்கையான உலகத்திற்கும் இடையிலான உறவுகளை நிர்ணயிக்கின்றவைகளாக ஊடகங்களும், நிறுவனங்களும் படிப்படியாக ஊடுருவி வடிவெடுக்கக் கூடியன என்பது மிக அடிப்படையான விவாதமாக இருக்கின்றது. சுற்றுப்புறச் சூழலின் மேலான அக்கறை, பசுமை, அரசியல் மற்றும் வகை மாதிரிகளின் மேலான விவாதங்கள், போன்றவை மனிதன், விலங்கு போன்றவற்றின் மேலான விவாதங்களைக் குறைப்பனவாகவும், அமைப்பியல்சார் மனிதத்துவ விவாதங்களைச் செய்து கொண்டு அதனை அதிகரிப்பனவாகவும் இருக்கின்றன. பொருண்மைகளின் இறப்பு என்பதன்வழி அவை மனித வடிவில் தெய்வநிலைக் கோட்பாடுகளை வலியுறுத்துகின்றவைகளுக்கு எதிரானதாகவும் இருந்தன. மனிதன் எல்லாவற்றுக்குமான அளவுகோலாக இருக்க முடியாது என்பதனையும், ஆனால் உலகில் உள்ள மற்றவற்றைப் போலச் சிலவற்றை அவனால் அளந்தறிய முடியுமென்பதனையும் அவை தங்கள் புலப்பாட்டில் பகிர்ந்து கொண்டன. எளிதில் உணர்ந்து கொள்ள முடியாத மறைபொருள் நிலையிலான வாதங்களாகவும், சுற்றுப்புறச் சூழலின் வீழ்ச்சி பற்றியதாகவும், மனிதன் எதிர்கொள்ளும் தொடர் சீரழிவுகளாகவும் அவை இருந்தன.

பின் நவீனத்துவத் தத்துவார்த்தம் "மானுடவியல் ஒழுங்கமைவின்மையை"க் கருத்தில் கொண்டு அழுத்தமான முறையில் பங்களிப்பதாகவும் - வெகுஜன வாசிப்புக்கான

மொழியையும் வெளிப்பாட்டுத் திறனையும் மையமிட்டிருக்கக் கூடியது. பின்நவீனத்துவம் முன்வைக்கின்ற முக்கியமான உயிரியல் கோட்பாடு ஹைடெக்காரின் இயற்கையைக் கண்டனம் தெரிவிப்பதிலிருந்து தோன்றியதாகும். மனிதச் செயல்பாட்டிற்கு எதிர்ச் செயலாக "அநாயாச சக்தியின் அநாயாசம்" என்கின்ற அபாயகரமான நம்பிக்கையின் மேலானதாக அவர் தன் கருத்தை வைத்தார். அது முடிவில்லாத விவரணைகளை உள்ளடக்கிய இயற்கையாசானாகப் பூமியை ஆக்கிரமித்துக் கொண்டிருப்பதாகக் கண்டித்தார். வெறுமனே ஆசானாக இருந்து கொண்டு ஆக்கிரமிப்பது, மனிதனின் தொழில்நுட்பம் சார்ந்த ஆணைகளாக விரிவாக்கம் பெற்று, அழிந்த நிலையில் கிடக்கின்ற இருபதாம் நூற்றாண்டின் சுற்றுப்புறச் சூழல் படிப்பினைகளாகப் படிந்து கிடக்கின்றன.

பசுமை அரசியல் மற்றும் சுற்றுப்புறச் சூழலின் மேலான தீவிரப்பற்று, பசுமை அரசியல் சிந்தைவழி வெளிப்பாடுகளாக இருக்கின்றன. ஹைடெக்கர் கூறுவது போல் ஒத்திசைவு நோக்குடைய மனிதன் சாராத உலகத்தினை நோக்கி அவை நடைபோடுவதாகவும் இருக்கின்றன. ஒத்திசைவு மற்றும் கட்டுப்பாடுகளை மறுப்பதும், இயற்கைக்குள்ளான மனித ஒருங்கிணைவை விலக்குவதும் டெல்யூஸ் மற்றும் குவாட்டரி என்ற இருவரின் கருத்துக்களாக இருக்கின்றன. அவர்களின் ஒடிபஸ்முரண் என்ற நூலில்,

> நாங்கள் இயற்கைக்கும் மனிதனுக்குமான வேறுபாடுகளை உருவாக்கவில்லை: இயற்கையான மனித இயல்பு, மனிதனின் இயற்கையான இயல்பு இரண்டும் ஒன்றாகின்றது. தயாரிப்புக்களும், தொழிற்சாலைகளும் இயற்கையினுடைய வடிவத்தில் பரிணமிக்கின்ற போது, மனிதனுடைய வாழ்க்கையின் ஒரு கூறாகத்தான் இயற்கை இருக்கிறது. இதனால் மனிதனும், இயற்கையும் ஒன்றோடொன்று முரண்படக்கூடிய இரண்டு துருவங்கள் அல்ல. மாறாகத் தயாரிப்பாளன் - தயாரிப்பு என்று எடுத்துக் கொள்கின்ற நிலைப்பாட்டின் யதார்த்தத்தில் இரண்டும் ஒன்றாகவே இருக்கின்றது.

ஹைறடெக்கர் "ஆயிரம் நிலப்பரப்புகள்" (Thousand Plateaus) என்ற நூலில் எண்ணங்களின் மாதிரிகள், அணுவகை வளர்ச்சிகளின் மாதிரிகள், உணர்ச்சியற்றவைகளின் மேலான ஈடுபாடுகள் போன்றவை மேற்கத்திய மரபுகளை மாற்றத்திற்கு உட்படுத்த விடாதவைகளாக இருக்கின்றன என்று கூறினார். டெல்யூஸ் மற்றும் குவாட்டாரி இருவரும் செடியின் வேர்த்தண்டு பலவகைத் தொடர்புகளை உள்ளடக்கிச் செயல்படுகின்ற தன்மையைக் கவனத்தில் கொண்டனர். வேறுபாடுகளாலும், விவரணைகளாலும், தீர்மானங்களாலும், ஈர்ப்புகளாலும், பக்கவாட்டு வளர்ச்சிகளாலும், இயக்கப்படுகின்ற- மேன்மைத் தன்மைகளுக்குள்ளாகாத - குறிப்பீட்டுத் தன்மைகளற்ற, மையமற்ற வளர்ச்சி முறைமைகளைக் கொண்ட . . . சுழற்சி வழிப்பட்ட நிலைப்பாடுகளின் கருமணிகளாக விளக்கம் பெறுகின்ற வேர்த்தண்டின் தன்மையினைத் தழுவிச் செயல்பட்டனர். இந்த மாற்றுநிலைப் பிரதிகளின் சைகைகள் புதிய சூழலியலைப் புரிந்து கொள்வதற்கானதாக, மேன்மைத் தன்மைகளுக்குட்படாத உறவுகளை மனித உயிர்களுக்கும், இயற்கையின் சூழல்களுக்கும் இடையில் உள்ளடக்குகின்றவற்றை நோக்கியதாக இருந்தன. அது உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தி, மனித மனப்பரப்பினை, சுய புனைவு மகிழ்வினுள்ளான யாத்திரைக்குத் தள்ளிக் கொண்டு செல்வதாக, அழித்தலில்லாத மறு கண்டுபிடிப்பிற்கானதாக ஆக்குகின்றது.

## முடிவுக்குபின் : இறந்த சடலமாவதை நோக்கி

"இறப்பைப் பற்றிப் பேசுகின்ற அதே நேரத்தில் (குறிப்பாக வரலாற்று இறப்பு) இறப்புக்குப் பின்னால் இருக்கின்றவற்றைப் பற்றியும் எதற்கும் முழுவதுமாக இறந்து மாய்தல் இல்லாத தன்மையினைப் பற்றியும் சிந்திக்க வேண்டியிருக்கின்றது". ஜான் பௌடிரிலார்ட் "இறப்பியல்" பற்றிய சொல்லாடல்கள் துறைமுகப். பிணைப்புகளிலிருந்து கட்டறுத்து அல்லது தற்காலிகமான பிடிப்பிலிருந்து விடுபட்டு முற்றிலுமாக நீங்கி விடுதலைப் பெறுவதென்பது நடக்க இயலாத ஒன்று என்பதற்குள் கொண்டு செல்கின்றன என்கின்றார். அழுத்தங்களை இயலாமைகளைத் தொடர்ந்து உண்டாக்கி

வருகின்ற சூழலை நெடுங்காலத்திற் கானதல்ல என்று நாம் உணர்வது இறப்பியல். பல்வேறு முனைகளின் பல நிலைப்பாடுகளை இறப்புக்கு, முடிவு நிலைக்குக் கொண்டு சென்றிருக்கின்றது என்பதை உணரலாம். ஜேக்ஸ் டெரிடா வியப்பிற்குரிய கருத்தாளுமைகளை தத்துவங்களின் இறப்பு (இறப்பியல் - முரணில் கவனம் வைத்தவர்) என்பதன் மீது கவனம் வைத்த பெருமைக்குரியவராகக் கருதப்படுகிறார். இவான் கான்ட் முன்வைத்த "கடவுள் அருள் வெளிப்பாட்டுக் கொள்கைகளை வெளிப்படையாகக் குற்றம் கூறியதோடு, டெரிடா அத்தத்துவங்கள் முடிவுகளை எய்திவிட்டன என்றும், அதே நேரத்தில் தன்னுரிமையுடைய கொள்கைத் தொகுதிகளின் சொல்லாடல் பற்றிய வீச்சுக்களை உச்சரித்தவராயிருக்கிறார். (இறப்பியல் 18ஆம் நூற்றாண்டிலேயே எதிர்ப்பு சக்தியை வெளியிடுகின்ற ஒன்றாக நீட்சி பெற்றிருக்கின்றது).

இந்த நகர்வு இறப்பிலிருந்து வேறுபட்ட எண்ணங்களை நோக்கிக் கொண்டு செல்வதோடு கோட்பாடுகள் மற்றும் மனிதத்துவ முரணியல் தத்துவங்களிலிருந்து இடம் பெயர்ந்து கொள்வதாகவும் - 1968இல் சரியாக அவற்றவற்றுக்கானதாக ஏற்றுக் கொள்ளப்பட்ட கொள்கைகளாக-தொழில்நுட்பப்-பின் மனிதத்துவம் என்கின்ற சொல்லாடலை உணர்த்துவதாகவும் வெளிப்பட்டது. மின்வலைத் தகவல் தொடர்பு நிலைகளில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டுள்ள சமகால வளர்ச்சி நிலைகள்-மனித உயிரிகளின் உடல் கூறியல் இயல்புகளின் ஒருங்கிணைவுகள் சிதறடிக்கப்படுவதில் அச்சுறுத்தல்களை உண்டாக்கினாலும், இறப்பு-புதுப்பித்தல் இரண்டுக்கும் இடையிலான கடப்புமுனை அவற்றால் கருத்தில் கொள்ளப்படுகின்றது. பின்-மனிதனைப் (Post-human) பற்றிச் சிந்திப்பவர்கள், மனிதன் என்பவன் வழக்கற்றுப் போனவனா அல்லது இல்லையா என்ற விவாதத்தை முன்வைக்கின்றனர்; தொழில்நுட்ப ரீதியில் உயர்வுக்குட்படுத்தப்பட்ட எதிர்பார்ப்புகளைப் பூர்த்தியாக்கித் தப்பிச் செல்வதை நடைமுறைப்படுத்தப் படக்கூடியவன்; பழைய மாதிரிகள் வளமையடையக் கூடியவைகளாக இருந்து கொண்டிருந்தாலும், மனிதன் என்பவன் இப்படித்தான் என்கின்றனர். தத்துவார்த்த விசாரணைகள் இதற்காக வீரியமுள்ள உருவக மேற்கோள்களை

முடிவற்ற நிலைக்கானவைகளாக ஆக்கியிருந்த நிலைகளிலிருந்து மாறி. . .. முதலும், முடிவுகளும் இல்லாமல் ஆக்குகின்ற நிலையிலான, உருமாற்றம் சார்ந்த, வரையறுக்கப்படா, கால எல்லை வழிப்பட்ட விடைகளே இல்லாத, செயல்முறைகளின் வழிகளை நிர்ப்பந்திக்கின்றன.

பெண்ணியச் செயல்பாடுகள் உடலின் மேல் கவனம் செலுத்துவதால், சுதந்திரச் செயல்பாட்டிற்கான எல்லைகளை உடைத்தல், அடையாளங்களைத் தகர்த்தல், பின் மனித நிலைப்பாட்டோடு தத்துவார்த்த ரீதியில் தங்களை இணைத்துச் செயல்படுதல் போன்றவைகளை நடத்துகின்றன. பட்லர், "பெண் என்கின்ற சொல்லே செயல்பாட்டு முறைமைகளுக்குள்ளானதாக ஒன்றாக ஆவதாக, ஏற்கெனவே முன் முடிவு செய்யப்பட்ட, அல்லது முன்பாகத் தொடங்கப்பட்ட எதற்குள்ளும் அடங்காததாக இருக்கின்றது" என்று கூறுகின்றார். இந்தப் புத்தாக்க முறைக்கான தரவுகளை மீண்டும் நீட்சேயிடமிருந்தும், தத்துவார்த்த ரீதியில் நீண்டு சென்ற ஹெகலிடமிருந்தும் - அதாவது ஆழ்ந்த நிலையில் சிந்தித்து ஒருங்கிணைவனவாக இருந்ததும், இல்லாமல் போனதும் பற்றிச் சிந்தித்த இந்த இருவரிடமும் காணலாம். ஹெராக்லிடஸ், மனித இருத்தல் என்பதற்கான அர்த்தம் இருந்த படியே இருப்பது என்ற பொருள் அல்ல; தொடர் முரண்பாடுகளுக்கும், மாற்றங்களுக்கும் உட்பட்டு நடக்கின்ற செயல்பாடே இருத்தலை அர்த்தப்படுத்தக் கூடியது என்கின்றார். நீட்சே வழிப்பட்ட உலக முறைமைகள், அழிவுக்குட்படாத இருத்தல்களையும், இலட்சியங்களும், முன்முனைப்புகளும், வளர்ச்சிகளும், இல்லாத நிலைப் பாடுகளுக்குள்ளானதாகும். ஏனென்றால் ஒன்றாக ஆவதென்பது ஒவ்வொரு நிமிட நிலைப்பாடுகளாலும் தீர்மானிக்கக் கூடியது. அது எல்லையில்லா மறுதரவுகளை அதற்குள்ளாகவே, பெற்றதாகவும் சக்தியுள்ளதாக ஆக்கக் கூடியதாகவும் இருக்கின்றது.

இந்த வரிகளை டெல்யூஸ் எடுத்துக் கொண்டு தற்காலிக ஒருமைக்கு அப்பாற்பட்டவைகளைத் தகர்க்கும் நிலையினைப் பேசுகின்றார். ஒன்றாக ஆவது என்பது படைப்பாக்க நிலைக்கு அப்பாற்பட்டது. நிகழ்கால நிலையிலிருந்து தப்பித்துக்

கொள்வதற்காகக் கடந்த கால, எதிர்கால, முன், பின் எல்லைகளுக்குள் நிர்ணயிக்கப்பட்ட விதிகளுக்குள் தன்னை இணைத்துக் கொண்டு அவற்றைச் சாதகமாக்கிக் கொண்டு மனிதன் நிற்பதனை விவரிக்கின்றார். ஒன்றாக ஆகின்றவை (Becomings) புவியியல் நிலை சார்ந்தவைகளாக, தொடர்பினைவுகள் சார்ந்தவைகளாக, இயக்கங்கள், நுழைவு மற்றும் வெளியேற்றங்கள் சார்ந்தவைகளாக இருக்கின்றன. வேர்த்தண்டு ஒன்றை மற்றவற்றோடு இணைத்து நிற்கின்ற ஒரு நிலைப்பாட்டினை வெளிக்காட்டுவது போல, அடுத்ததாக எடுத்துக் கொள்ளப்போகின்ற மரம் என்கின்ற வளர்ச்சி முறையின் மாதிரிகளோடு முரண்படுபவைகளாக இருக்கின்றன. 'ஆதல் நிலை' என்பது முதலும் முடிவுமற்ற அடிப்படை நிலையும், முற்று நிலை இல்லாத ஒரு கோட்டில் இடம்பெறுகின்றது. இடைநிலைகளை மட்டும் பெற்றிருக்கின்ற ஒரு கோடு ஒன்று அல்லது இரண்டு, அல்லது இரண்டினுமுடனான தொடர்பு; அல்லது இரண்டுக்கும் இடைப்பட்டது என்ற நிலைப்பாடுகளைப் பெறுகின்றது. இதனால் டெல்யூஸின் 'ஆதல் நிலை' நிலைத்து நிற்கும் குறிப்பாக இயற்பியல், கருத்தியல், முழுமைநிலை போன்ற தன்மையுடைய எல்லாவற்றையும் எதிர்ப்பதாக இருக்கின்றது. இது முழுக்க முழுக்க வரம்புகளை மீறுகின்ற சக்திகளை முன்மொழிவதாகச் சமூக உறவுகளில் நிரந்தரப் புரட்சி நிலைப்பாடுகள் தோன்றிக் கொண்டிருக்க வேண்டும் என்பதனை நோக்கமாகக் கொண்டதாகவும் இருக்கின்றது. இது ஒன்றைப் போலப் பிரதிபலிப்பதாகவோ, ஒன்றைப் போலச் செய்வதாகவோ, ஒன்றை அடையாளப்படுத்துவதாகவோ அல்லது ஒன்றன் எச்சமாக இருப்பதாகவோ இல்லாமல் ஒன்றன் உறவுநிலைகளின் வழி வருவதை உணர்த்துகின்றது. இதனால் 'ஆதல் நிலை' உண்மையானதாக, மனித உயிரிகளே விலங்காக, பெண்ணாக, குழந்தையாக, பெண்பிள்ளையாக இருந்தாலும், அதுவாக இல்லாத நிலையாகவும் இருக்கின்றதை உணர்த்துகின்றது. ஒரு வகையில் அது அடையாளம் அல்லது அர்த்தத் தயாரிப்பிற்கான முனைப்பில் ஈடுபட்டதாக இருக்கக்கூடும். ஆதல்நிலை அதற்குள்ளே இருக்கின்றதனை முன்மொழிவதை விட ஒன்று மற்ற நிலையை முன்மொழிகின்றது.

## கதையாடல்களின் இறப்பு

### THE END OF NARRATIVE

மனித மீயாளுமையின் முடிவு என்பது பின்நவீனத்துவத் தத்துவத்தை முன்னோக்கி நடத்திச் செல்லும் செயல்பாடு என்பது மிகத் தெளிவாக விளங்கி வருகின்றது. இதனோடு இணைந்து சிந்திக்கப்பட்டவை இன்னொரு மனித உறவுக்கான பயிற்சிகளைப் பற்றிய சிந்தனைகளை முன் வைத்தது. மனிதன் தன் செயல்பாடுகள் மற்றும் பயின் முறைகளில் ஈடுபட்டு வாழ்பவனாக இருக்கின்ற அதே நேரத்தில் அவனுடைய புனைவுகளுக்குள் வாழ்ந்து சிறப்பம்சமுள்ள ஒரு கதை-கூறும் விலங்காகவும் இருக்கின்றான். இந்நிலையில் மனிதனுடைய உறவாடல்கள் மற்றும் கதையாடல்கள் சொல்கின்ற தர்க்கங்களின் கூட்டு முறைமைகளுக்கு அவனை நீட்டிக் கொண்டு செல்லக் கடமைப்படுகின்றது. ரோலன் பார்த்தின் வார்த்தைகளில் சொல்லப்போனால் கதையாடல்களில் உள்ள கடந்த கால நிகழ்வுகள், ஒரு உலகைக் கட்டமைக்கின்ற ஒவ்வொரு கருத்தாடலுக்குமான கருவியாக, நடப்பியல் சாராத காலத்தில் புனையப்படும் உலக நடவடிக்கைகளுக்கானதாக, தொன்மங்களாக, வரலாறாக, புதினங்களாக இருந்ததனால் . . . இந்த உலகம் இன்று வரையில் புனைவியலுக்கு மட்டுமே உட்படுத்தப்பட்டுச் சரியான முறையில் விளக்கம் பெறாததாக இருக்கின்றது.

ஜான் ஃப்ரான்சிஸ் லியோடார்ட் பின்நவீனத்துவ நிலைப்பாட்டினை இரண்டு வகைப்பாட்டில் விவரிக்கின்றார். 1. கதையாடல்-புலமையும் அவை சார்ந்து உத்தேசமாக உள்ள மற்றவையும் 2. அறிவியல்-அறிவும். முதலாவதாக உள்ள கதையாடல்-புலமையில் உள்ள தனித்துவமான கதை சொல்லும் திறன் "சான்றாதாரங்களைக் கடந்து கதை ஏற்கெனவே உட்கொண்டிருக்கும் அடிப்படை நியாயங்களை முன்னெடுத்துக் கொண்டு நீண்டு செல்வதாகும்; அதனையும் கடந்து சொல்லப்போனால், பன்முக நிலைப்பட்ட முறைகளைக் கையாளும் மொழி விளையாட்டாக இருக்கின்றது. அறிவார்த்த

அறிவு, அதற்கு முரணானதாக நூற்றாண்டுகளாகக் கண்டுபிடிக்கப்பட்ட 'உண்மைகளின் மேல் ஏறி வாழும் உலகாயத உண்மைகளுக்கான ஆசான்களாக, அனைத்து மொழி விளையாட்டுக்களையும் மாற்றிப் போடுவதாக இருக்கின்றது. அறிவியலும் கதையாடல் புலமையைக் கொண்டிருக்கின்றதென லியோடார்ட் கூறுகின்றார், அதனுடைய நடைமுறைகளையும், செயற்பாடுகளையும் நியாயப்படுத்துவதற்குக் கதையாடல் முறையை அறிவியல் கைக்கொள்ளுகின்றது.

லியோர்ட் "அறிவியலின் மேலான நடவடிக்கை" என்பதன் பேரில் சில கருத்துக்களைக் கூறுகின்றார். அறிவு சட்டப்படியான ஒழுங்குமுறைகளைத் தேடுவதாகவும், தன்னை நிர்ணயிக்க நிலைப்பாடுகளின் கதையாடலை உட்கொண்டுள்ளதாகவும் எடுத்துரைக்கின்றார். ஹெகலால் உருவாக்கப்பட்ட நிலைப்பாடுகள் நுண்பொருள் விளக்க முறைகள் ஒருங்கிணைக்கின்ற அறிவாழமிக்க இணைவுகளிலும் சமூகப் பயன்பாடுகளிலும் கவனமுடையவற்றைக் கருத்தில் கொண்டன. பின்நவீனத்துவம் இதற்கு மாறாக இவற்றை மேற்கண்ட முறையில் எடுத்தாள முடியாத நிலைமையினையும், அவற்றிலிருந்து பின்னடைவைத்தேடுவதாகவும் சட்டவிதிகளுக்கு உட்பட இயலாமல் போகின்ற தன்மையையும், கூறுகின்றது. எளிமையாக்கலின் கடைக்கோடி வரையிலும் செல்லக்கூடியதாகப் பின்நவீனத்துவம் எதையும் எளிதில் நம்பாத நிலையில் நுண்கதையாடல்களை நோக்கிச் செல்கின்றது. பின்நவீனத்துவத்தில் சட்ட நியதிகள் சமூக முறைமைகளுக்குப் புறத்தே நிற்காதவைகளாக, ஆனல், பல்குரல் தன்மையில், மண்சார்ந்து, இயற்கையால் அமைந்திருக்கின்றன. வேறு வகையில் சொல்லப்போனால், கதையாடலில் விரித்துரைப்பு இயல்புடைய ஒவ்வொன்றுக்குமான மாதிரியாகக் கதையாடலின் மொழிவிளையாட்டு அமைந்திருக்கின்றது எனலாம். அறிவியல் நிலைக்கு "மாற்றுரு" எடுக்கின்ற இரண்டாம் நிலையிலான மண்ணாங்கட்டி விளையாட்டுக்களை இதன் மூலம் விளையாட முடியாது. இதனால் பெருங்கதையாடல்களின் இறப்பு என்பது சிறுசிறு தற்காலிகக் கதையாடல்கள் தன்னுடைய வேறுபட்ட,

பன்முகத் தன்மையிலான முகங்களுடன் பிறப்பெடுப்பதன் மூலம் முடிவுக்குள்ளாவது பிரகடனப்படுத்தப்படுகின்றது.

லியோடார்ட் வரலாற்றில் ஏற்பட்ட முரண்களை இதன் மூலம் விவாதத்திற்குக் கொண்டு வருகின்றார். ஹெகலின் தத்துவார்த்தங்கள் வரலாறு மதிப்பீட்டிற்குள்ளாவது என்று முன்வைத்த கருத்தினை ஆஸ்க்விட்ஸ் (Auschwits) மறுக்கின்றார். சுதந்திர-சந்தைச் சமூகத்தை அனுமதித்ததன் மூலம் முதலாளித்துவ சமூகத்திற்கு வழிகளை ஏற்படுத்திக் கொடுத்துத் தொழிலாளர்களின் புரட்சியை ஸ்டாலின் முடிவுக்குக் கொண்டு வந்தார். கியாணிவாட்டிமோ "வரலாற்றின் இறப்பிற்குப்" பின்வந்த கருதுகோளைப் பின்நவீனத்துவம் பற்றிய தன்னுடைய விளக்கத்திற்கு மையமாகப் பயன்படுத்துகின்றார். வரலாற்று இறப்பை விவரிப்பதன் மூலமே பின்நவீனத்துவம் பற்றிய கருத்துக்கள் அர்த்தமுடையவைகளாகின்றன என்கிறார். வரலாறுகள் அர்த்தமற்றவைகளாகின்ற போதுதான் லியோர்டார்ட் எடுத்துரைக்கின்ற பெருங்கதையாடல்களின் இறப்பு சாத்தியமாகும்.

வாட்டிமோவான் கருத்துக்களில் மிகப்பரந்துபட்ட ரீதியான மறை குறிப்புகள் இருக்கின்றன. கதையாடல்கள் சிறிது சிறிதாகத் தம்மை வரலாற்றுக்குள் புகுத்திக்கொண்டு "தவறான கட்டமைப்பு" என்ற ஒன்றை ஆக்கிரமிப்பு முறையின் மூலம் ஊடுருவச் செய்கின்றன என்பதனைப் பற்றிக் கூறுகின்றார். ஹெகலின் நுண்ணறிவுக் கோட்பாட்டு முறைகளைஅவ்வளவு எளிதான முறையில் தூக்கி எறிந்து விடமுடியாது. அவற்றின் ஆணிவேர்கள், கட்டமைப்புகள், முறைமைகள் போன்றவற்றை மெல்ல ஊடுருவி அர்த்தம் கண்டு அழிக்க வேண்டும். அதன் பின்னர், பின்நவீனத்துவத் தத்துவம் ஒன்றே இன்றைய உலகிற்கு உகந்த ஒன்றாக இருக்க முடியும் என்ற விவாதத்தை எடுத்துச் சொல்ல வேண்டும். வரலாறு இறந்து விட்ட செய்திகளையும், மாற்றங்களை நம்மால் உட்கொள்ள முடியுமென்பதையும், சிதைவுற முடியுமென்பதையும், பின்நவீனத்துவ நுண்ணறிவு வாத சிறப்பம்சங்கள் போன்றவற்றை மீண்டும் மீண்டும் எடுத்துக் கூறுவதன் மூலமே இது சாத்தியப்படும்.

## குறிப்புகள்


1. ஏ.என். பெருமாள், கதைப்பாடல், தமிழ் இலக்கியக் கொள்கை, தொகுதி-8, ப.390.
2. நா. வானமாலை, தமிழ்நாட்டுப் பாடல்கள், ப.1.
3. The World book Encyclopaedia, Vol. 2, p.35.
4. ஏ.என். பெருமாள் தமிழில் கதைப்பாடல், ப.8, 1987, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.
5. Encyclopaedia Brittannica, p.20.
6. A.N. Perumal Vellaikkaran Kathai, p.87, First Edition, International Institute of Tamil Studies, Madras, 1983.
7. காமன் கதைப்பாடல், எ.மே, ப.50.
8. சு. சண்முக சுந்தரம், தஞ்சை மாவட்டம், பக்.179-180, த.ந.பு.ஆ.
9. தி.சு. அவிநாசிலிங்கம் (தொ.ஆ.) ப.86, கலைக்களஞ்சியம், தொகுதி-3.
10. Lowis Shores (ed); Collier's Encyclopaedia, Vol.3, p.490, Macmillan Educational Corporation, Newyork.
11. ஏ.என். பெருமாள், தமிழில் கதைப்பாடல், ப.33.

## துணைநூல்கள்


1. டாக்டர் மு.அப்தல்கறீம், ஹனீபா அப்துல் கறீம், சீறாப்புராணம் மூலமும் உரையும் விளக்கமும் (விவாதத்துக் காண்டம் 2ம் பாகம்), ஏவி.எம். ஜாபர்தீன் நூர்ஜஹான் டிரஸ்ட், சென்னை, 1995.
2. முனைவர் பீ.மு. அஜ்மல்கான், படைப்போர் இலக்கியங்கள், உலகத் தமிழராய்ச்சி நிறுவனம், 1992.
3. டாக்டர் ப.கிருஷ்ணன், "தமிழ் நூல்களில் தமிழ்மொழி தமிழ் இனம் தமிழ்நாடு", இளம்தமிழர் பதிப்பகம், 1984.
4. ந.ஜெயராமன், சிற்றிலக்கியப் புலவர் அகராதி, பாரி நிலையம், சென்னை, 1983.
5. ந.வீ. ஜெயராமன், சிற்றிலக்கிய அகராதி, பாரி நிலையம், சென்னை, 1983.
6. டாக்டர் சிலம்பு நா. செல்வராசு, இருபதாம் நூற்றாண்டுச் சிற்றிலக்கியங்கள், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1995.
7. து. சீனிச்சாமி, தமிழில் காப்பியக் கொள்கை, தமிழ்ப் பல்கலைக் கழகம், 1994.
8. தமிழவன், இருபதில் நவீனத் தமிழ் விமர்சனங்கள், காவ்யா பதிப்பகம், பெங்களூர், 2000.
9. இபின் ஹஸன், முகலாயப் பேரரசின் மைய அமைப்பு, இந்தியன் கவுன்சில் ஆப் ஹிஸ்டாரிகல் ரிசர்ச், நியூ செஞ்சுரி புத்தக நிலையம் (பி) லிட், 1991.
10. மு.மு. இஸ்மாயில், இனிக்கும் இராஜநாயகம், உலகத் தமிழாரய்ச்சி நிறுவனம், சென்னை, 1984.
11. டாக்டர் கே.கே. பிள்ளை, தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2007.
12. ம.முகம்மது உவைஸ், பீ.மு. அஜ்மல் கான், இஸ்லாமியத்தமிழ் இலக்கிய வரலாறு, மதுரை காமராஜர் பல்கலைக்கழகம், மதுரை, 1986.

13. மே. வேங்கடேசன், சமயங்களின் தமிழ்த் தொண்டு, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, 1999.

14. ராகுல் சாங்கிருத்யாயன், இஸ்லாமியத்தத்துவ இயல், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, 1985.

15. எஸ்.வி. ராஜதுரை, இந்து இந்தியா (அகரணியிலிருந்து அத்வானிவரை), அடையாளம், 2003.

16. வித்துவான் பதுறுத்தீன் புலவர், (ப.ஆ.) பேரா. மு. அப்துல் கறீம், முகியித்தீன் புராணம், (II தொகுதி), ஆயிஷா பதிப்பகம், அதிராம்பட்டினம், 1983.

17. இரா. சந்திரசேகர, ச.அ. சையத் அகமது பிரோசு, இசுலாமியத் தமிழ் இலக்கியம் பன்முகப்பார்வை, மகாகவி பாரதியார் நூலகம், யு.வி.ஆர். அரங்கம்மாள் இல்லம், எண்-7, ஆர்.கே.நகர், நவாவூர் பிரிவு, பாரதியார் பல்கலைக்கழகம், கோவை, 2001.

18. அப்துற்-றஹீம், முஸ்லீம் தமிழ்ப் புலவர்கள், யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ், சென்னை, மூன்றாம் பதிப்பு, 1999.

19. மு. காயபு மரைக்காயர், இஸ்லாமியர் தமிழ்த் தொண்டு,

20. ம. முகம்மது உவைஸ், பீ.மு. அஜ்மல் கான், இஸ்லாமியத் தமிழ் இலக்கியம், தொகுதி-3, மதுரை, 1994.

21. பேரா. ப.முருகன், திருக்குறளும் திருக்குர் ஆனும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2001.

22. ஜிய உத்தீன்கான், இபுது இஷான் பாபாகாள், சோவியத் நாட்டில் இஸ்லாமும் முஸ்லீம்களும், நியூ செங்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1985.

23. வில்டியூரெண்ட், உலகமதங்கள் ஒரு தத்துவப்பார்வை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1992.

24. வலம்புரிஜான், நாயகம் எங்கள் தாயகம், ஆசாத் பதிப்பகம், சென்னை, 1999.

25. ஓர்சேமா. கோபாலகிருஷ்ணன், ஆனந்தம் பிள்ளை-நாட்குறிப்பு, பிறசொற்பத்தி ஆண்டு (1751-1752), மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், 2004.

26. அப்துல் ரகுமான், குணங்குடியார் பாடற்கோவை, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2002.

